# ஸங்க்ஷேப தர்ம சாஸ்திரம்

வைத்தியனாத தீக்ஷிதியத்தின் சுருக்கம்

தொகுத்தவர்கள் :

M.K. வெங்கடராம சாஸ்திரிகள்

E.S. ராம மூர்த்தி சாஸ்திரிகள்

S.M. க்ருஷ்ண சர்மா

ஸ்ரீ ராம நாமம் எழுதுவதற்கு நோட்டுகளை இலவஸமாக வழங்கி பக்தர்கள் மூலம் "ராம" நாமம் எழுதுவிக்கின்ற வேள்வியை நடத்தி வருகின்ற ஸ்ரீராம நாம வங்கியின் பிரசாரப் பிரசுரப் பிரிவான

ஸ்ரீ பகவன் நாம பப்ளிகேஷன்ஸ்

ராம மந்திரம், 2, வினாயகம் தெரு,
மேற்கு மாம்பலம், சென்னை - 600 033.
தொலைபேசி : 4893736, 4893785, 4893397
E-Mail : ramanama@md3.vsnl.com

| | | |
|---|---|---|
| TITLE | : | SAMKSHEBA DHARMA SASTRAM |
| AUTHOR | : | M.K. VENKATARAMA SASTRIGAL<br>E.S. RAMA MURTHY SASTRIGAL<br>S.M. KRISHNA SARMA |
| BOOK SIZE | : | CROWN 8VO |
| EXTENT | : | 352 PAGES |
| FIRST EDITION | : | 1996 SEPTEMBER - 2000 COPIES |
| SECOND EDITION | : | 1999 SEPTEMBER - 1000 COPIES |
| THIRD EDITION | : | 2000 JULY - 2000 COPIES |

உ

ஸ்ரீ சிவாப்யாம் நம:
ஆடி மீ 26உ
சித்ரபானு ஸ்ரீ
சென்னை
( 11 AUG 02 )

ஸ்ரீ ஸ்ரீ மஹா பெரியவாளின்
பாதார விந்தங்களில்

# சமர்ப்பணம்

# ஸ்ரீமத் பாகவதம்



மூலம் தமிழில்

900 பக்கங்கள்

**விலை ரூ. 350/-**

வாக்யானி ஸாக்ஷாத் ராதைவம் அர்த: ஸ்ரீக்ருஷ்ண ஏவ ஹி।
ராதா க்ருஷ்ண ஸ்வரூபம் ஹி ஸ்ரீமத் பாகவதம் பரம்॥

"ராதை" என்னும் மூலத்துடன் "ஸ்ரீக்ருஷ்ணன்"
என்ற அர்த்தத்தை அநுபவியுங்கள்

ஸ்ரீ ராம நாமம் எழுதுவதற்கு நோட்டுகளை இலவஸமாக வழங்கி பக்தர்கள் மூலம் "ராம" நாமம் எழுதுவிக்கின்ற வேள்வியை நடத்தி வருகின்ற ஸ்ரீராம நாம வங்கியின் பிரசாரப் பிரசுரப் பிரிவான

**ஸ்ரீ பகவன் நாமா பப்ளிகேஷன்ஸ் வெளியீடு**

ராம மந்திரம், 2, வினாயகம் தெரு,
மேற்கு மாம்பலம், சென்னை - 600 033.
தொலைபேசி : 4893736, 4893785, 4893397

ஸ்ரீ ராம நாம வங்கியின்

முதல் ஸஹஸ்ர கோடி ராம நாம லேகன யக்ஞம் பூர்த்தியை ஒட்டி

வெளியிட இருக்கும் மிகச் சிறப்பான மலர்

# "கலி தர்ம சாஸ்திரம்"

பெரிய அளவில் ப்ரசார நோக்கத்துடன்
மிக அதிகமான காப்பிகள்
தயாரிக்கப்படுகின்றது விளம்பரங்கள்
கோரப்படுகிறது

தொடர்பு கொள்ளவும் :

ஸ்ரீ ராம நாமம் எழுதுவதற்கு நோட்டுகளை இலவஸமாக வழங்கி பக்தர்கள் மூலம் "ராம" நாமம் எழுதுவிக்கின்ற வேள்வியை நடத்தி வருகின்ற ஸ்ரீராம நாம வங்கியின் பிரசாரப் பிரசுரப் பிரிவான

ஸ்ரீ பகவன் நாமா பப்ளிகேஷன்ஸ் வெளியீடு

ராம மந்திரம், 2, வினாயகம் தெரு,
மேற்கு மாம்பலம், சென்னை - 600 033.
தொலைபேசி : 4893736, 4893785, 4893397

# ஸ்ரீமத் வால்மீகி ராமாயணம்

மூலம் தமிழில்

**899 பக்கங்கள்**

விலை ரூ. 450/-



*ஸ்ரீ ராம நாமம் எழுதுவதற்கு நோட்டுகளை இலவஸமாக வழங்கி பக்தர்கள் மூலம் ''ராம'' நாமம் எழுதுவிக்கின்ற வேள்வியை நடத்தி வருகின்ற ஸ்ரீராம நாம வங்கியின் பிரசாரப் பிரசுரப் பிரிவான*

ஸ்ரீ பகவன் நாமா பப்ளிகேஷன்ஸ் வெளியீடு

ராம மந்திரம், 2, வினாயகம் தெரு,
மேற்கு மாம்பலம், சென்னை - 600 033.
தொலைபேசி : 4893736, 4893785, 4893397

# இரண்டாவது ஸஹஸ்ர கோடி நோக்கி

# ஸ்ரீ ராம நாம வங்கி

ராம மந்திரம், 2, வினாயகம் தெரு, மேற்கு மாம்பலம்,
சென்னை - 33. தொலைபேசி : 4893736, 4893785, 4893397

வழி முறை : நகரம் நகரமாக, கிராமம் கிராமமாக, வீடு வீடாக நாம ப்ரச்சாரம்
இலக்கு : பகுதி பகுதியாக, பேட்டை பேட்டையாக, குடிசை குடிசையாக நாம ப்ரச்சாரம்

யார் யாரையோ எதெதற்கோ பகவான் படைப்பித்திருக்கிறான்
நம்மை பகவன் நாமம் சொல்வதற்காகவே படைப்பித்திருக்கிறான்.
"ராம" என்று சொல்லுங்கள், எழுதுங்கள் என்று
உங்களிடம் பிச்சைக் கேட்கிறோம்.

*2.4.1995-ல் ஆரம்பித்த இந்நிறுவனம், பக்தர்களின் ஏகோபித்த ஆதரவைப் பெற்று ஸ்ரீ "ராம" நாமம் எழுதும் நோட்டுக்களை இலவஸமாக விநியோகித்து, எழுதப்பட்ட "ராம" நாமங்களை ஸேகரித்து வருகின்றது. 20-5-2000 (முதல்) 1000 கோடிக்கு மேல் நாமங்கள் சேர்ந்துள்ளன.*

*பலர் "ராம" நாமம் எழுத, நீங்கள் உதவி புரியுங்கள். நீங்கள் அளிக்கும் உதவியினாலேயே நாம சங்கிலி ஏற்படுகிறது.*

*போஷகர் - ப்ரசாரகர் - லேகனர் - "ராம" நாம வங்கி - நாம ப்ரசாரம் - நாம (பாத) யாத்திரை - நாம தர்ஸனம் என்பதையே நாம சங்கிலி என்கிறோம்.*

ஸ்ரீ ராம நாம நோட்டுகளுக்கான உதவி விபரம்

*1 கோடி - 1000 நோட்டுகள் - ரூ. 1200/-*
*10 லக்ஷம் - 100 நோட்டுகள் - ரூ. 150/-*
*5 லக்ஷம் - 50 நோட்டுகள் - ரூ. 85/-*

1 நோட்டுகள் - 1 லக்ஷம் - ரூ. 12/-
இதே போல் "சிவ", "ஓம் நம்சிவாய",
ஸ்ரீராமஜெயம் எழுதக்கூடிய நோட்டுக்கள் கிடைக்கும்.

*10000 மடக்குகள் - 1 கோடி - ரூ. 1600/-*
*1000 மடக்குகள் - 10 லக்ஷம் - ரூ. 180/-*
*500 மடக்குகள் - 5லக்ஷம் - ரூ. 100/-*
*100 மடக்குகள் - 1 லக்ஷம் - ரூ. 20/-*

எழுதப்பட்ட நாமங்கள் முறையாக பாதுகாக்கப்படுகின்றன. இதற்கும் உதவலாம்.

**நாம அலங்காரம் ரூ. 100/-**

இப்படிப் பாதுகாக்கப்பட்ட நாமங்கள் பெட்டகங்களில் தர்ஸனமாக வைக்கப்படுகிறது.

**13 கோடி நாம பெட்டகம் ரூ. 3500/-**

ஸேகரம் ஆன நாமங்கள் யாத்திரையாக எடுத்துச் செல்லப்பட்டு பல இடங்களில் தர்ஸனமாக வைக்கப்படுகிறது.

**பகவன் நாம (பாத) யாத்திரை விபரம்**

| | | | |
|---|---|---|---|
| 1. | 1-8-97<br>சென்னை | {To} | 14-8-97<br>கோவிந்தபுரம் |
| 2. | 8-8-98<br>சென்னை | {To} | 15-8-98<br>பக்தபுரி (பரனூர்) |
| 3. | 30-5-99<br>சென்னை | {To} | 16-7-99<br>பண்டரீபுரம் |
| 4. | 15-4-2000<br>சென்னை | {To} | 20-5-2000<br>பத்ராசலம் |

**பகவன் நாம தர்ஸன ஸ்தலங்கள்**

கோவிந்தபுரம் - ராம கேந்திரம் - 250 கோடி நாமங்கள்

பரனூர் - கோலாஹலன் ஸன்னதி - 100 கோடி நாமங்கள்

பண்டரீபுரம் - ஸ்ரீ க்ருஷ்ணப்ரேமி ஸ்வாமிகளின் ஆஸ்ரமம் - 100 கோடி நாமங்கள்

பத்ராசலம் - அம்பா சத்திரம் 100 கோடி நாமங்கள்

ராம மந்திரம் - சென்னை தலைமையகம் - ஸேகரம் செய்யப்படும் நாமங்கள்

ஸ்ரீ ராம நாம வங்கியின் ப்ரச்சாரப் பிரசுரப் பிரிவு

## ஸ்ரீ பகவன் நாம பப்ளிகேஷன்ஸ்

ராம மந்திரம், 2, வினாயகம் தெரு, மேற்கு மாம்பலம், சென்னை - 33. தொலைபேசி : 4893736, 4893785, 4893397

ஸ்ரீ ராம நாம வங்கியின் ப்ரசாரப் பிரசுரப் பிரிவாக ஸ்ரீ பகவன் நாம பப்ளிகேஷன்ஸ் இயங்கி வருகிறது.

ஸ்ரீ பகவன் நாம பப்ளிகேஷன்ஸ் மூலம் அரியதும், பழையதுமான க்ரந்தங்களையும், நாம சித்தாந்த கிரந்தங்களையும் வெளியிடும் திட்டத்தில் இது வரை சில புத்தகங்கள் வெளியிடப்பட்டுள்ளன.

இந்தப் புத்தகங்களை வாங்குவதன் முலம் நல்ல புத்தகங்களை வாங்கிய த்ருப்தியுடன் ''ஸ்ரீராம நாம யக்ஞம்'' பணிக்கும் உதவியவர்கள் ஆவீர்.

## எமது வெளியீடுகள்

### ஸ்ரீமத் பாகவதம்

| | | | |
|---|---|---|---|
| மலையாளம் | 12 பாகம் | - | ரூ. 650/- |
| தமிழ் வசனம் | 7 பாகம் | - | ரூ. 600/- |
| மூலம் தமிழில் | | - | ரூ. 350/- |
| ரகசியம் | விற்பனைக்கு அல்ல | | |
| ப்ரதி பத அர்த்தம் | தயாரிப்பில் | | |

### ஸ்ரீமத் வால்மீகி ராமாயணம்

| | | |
|---|---|---|
| மூலம் தமிழில் | - | ரூ. 450/- |
| தமிழ் வசனம் | - | ரூ. 300/- |

### பஜனை புத்தகங்கள்

| | | |
|---|---|---|
| ஹரி ஸங்கீர்த்தன மாலா | - | ரூ. 50/- |
| கோவிந்தபுரம் பத்ததி | - | ரூ. 40/- |
| அபங்க முத்தாரம் | - | ரூ. 35/- |
| கல்யாண மாலா | - | ரூ. 25/- |
| லலிதா பஜனை கீர்த்தனைகள் | - | ரூ. 20/- |
| நவராத்திரி கீர்த்தனைகள் | - | ரூ. 15/- |
| பத்ராசல ராமதாஸர் கீர்த்தனைகள் | - | ரூ. 20/- |
| ப்ரும்மேந்திராள் கீர்த்தனைகள் | - | ரூ. 10/- |
| கீத கோவிந்தம் | - | ரூ. 6/- |
| போதேந்திராள் கீர்த்தனைகள் | - | ரூ. 5/- |
| ஹரி நாம மார்கம் | - | ரூ. 5/- |

## ஸ்ரீ வீரவல்லி சந்தானம் [illegible]

ஸ்ரீ விஷ்ணு ஸஹஸ்ர நாமம் - ரூ. 60/-
ஸ்ரீமத் நாராயணீயம் - ரூ. 50/-
ருக்மிணி கல்யாணம் - ரூ. 40/-
ஸ்ரீ பண்டரிநாதன் லீலைகள் - ரூ. 25/-
ஸம்க்ஷேப ராமாயணம் - ரூ. 15/-
ஸ்ரீமத் பகவத் கீதாஸாரம் - ரூ. 6/-

## ஸ்ரீஸ்ரீ அண்ணாவின் க்ரந்தங்கள்

ஸ்ரீ தியாகப்ரும்மம் சரித்திரம் - ரூ.20/-
பக்தை மீரா சரித்திரம் - ரூ.20/-
**Sri Bodendral Divine History - Malayalam** - ரூ.20/-
ஸ்ரீ போதேந்திராள் திவ்ய சரித்திரம் - ரூ.15/-
ஸ்ரீ ஐயாவாள் திவ்ய சரித்திரம் - ரூ.15/-
ஸ்ரீ ஸத்குரு திவ்ய சரித்திரம் - ரூ.15/-
**Sri Bodendral Divine History** - ரூ.15/-
**Sri Iyaval Divine History** - ரூ.15/-
**Sri Satguru Divine History** - ரூ.15/-

## ஸ்ரீ ஆத்ரேயர் க்ரந்தங்கள்

துளசி ராமாயணம் தமிழில் மூலமும் அர்த்தமும் - ரூ. 350/-
ஸ்ரீ ராம மாதுரி - ரூ. 25/-
பக்த சாம்ராஜ்யம் - ரூ. 20/-
நாம சாம்ராஜ்யம் - ரூ. 20/-

## விநியோக வெளியீடுகள்

பாசுரப்படி ராமாயணம் 100 **No.** - ரூ. 50/-
ராம நாமாவளி 100 **No.** - ரூ. 50/-
சம்க்ஷேப மங்கள ஸ்தோத்ரம் 100 **No.** - ரூ. 50/-
ப்ராத ஸ்மரண ஸ்தோத்ரம் 100 **No.** - ரூ. 30/-
ஸாதுக்கள் மஹிமை 100 **No.** - ரூ. 30/-
ஸப்த ரிஷி ராமாயணம் 100 **No.** - ரூ. 30/-
சந்த்ர ஸேகராஷ்டகம் 100 **No.** - ரூ. 30/-

## மற்றும்

தர்ம சாஸ்திரம் - ரூ. 40/-
ஸ்ரீ பக்த ரத்னங்கள் - ரூ. 25/-
ரஸாயனம் - ரூ. 20/-
யாக்ஞ வல்கியர் சரித்திரம் - ரூ. 20/-
ப்ருமேந்திராள் சரித்திரம் - ரூ. 15/-
பாஸ்கரம் - ரூ. 15/-
பத்ராசல ராமதாஸர் திவ்ய சரித்திரம் - ரூ. 10/-
**Yagnavalkyar Divine History** - ரூ. 10/-
திருமாலை - ரூ. 7/-
நாமாயணம் - ரூ. 5/-

# ஸ்ரீமத் வால்மீகி ராமாயணம்

## தமிழ் வசனம்

## 1322 பக்கங்கள் அடங்கியது

**விலை ரூ. 300/-**



ஸ்ரீ ராம நாமம் எழுதுவதற்கு நோட்டுகளை
இலவஸமாக வழங்கி பக்தர்கள் மூலம் "ராம" நாமம்
எழுதுவிக்கின்ற வேள்வியை நடத்தி வருகின்ற
ஸ்ரீராம நாம வங்கியின் பிரசாரப் பிரசுரப் பிரிவான

ஸ்ரீ பகவன் நாமா பப்ளிகேஷன்ஸ் வெளியீடு

ராம மந்திரம், 2, வினாயகம் தெரு,
மேற்கு மாம்பலம், சென்னை - 600 033.
தொலைபேசி : 4893736, 4893785, 4893397

# ஸ்ரீமத் பாகவத ரகசியம்

## இந்த நூல் விற்பனைக்கு அல்ல.

I008 பக்கங்கள்.

டெமி ஸைஸ்.

ஸ்ரீ ராம நாம வங்கியின்
நாம ஸேகரத்திற்கு
நாமம் எழுதுதல், சேகரித்தல்,
நாம போஷகர், பெட்டக போஷகர்,
க்ரந்த போஷகர்

என்று ஏதாவது ஒரு விதத்தில்
நாமத்தை ஆஸ்ரயிப்பவர்களுக்கு
ப்ரஸாதமாக வழங்கப்படுகிறது.

மேலும் விபரங்களுக்கு தொடர்பு கொள்ளவும்.

ஸ்ரீ ராம நாம வங்கி

ராம மந்திரம், 2, வினாயகம் தெரு,
மேற்கு மாம்பலம், சென்னை - 600 033.
தொலைபேசி : 4893736, 4893785, 4893397

## முதல் 1000 கோடியை பூர்த்தியாகி இரண்டாவது 1000 கோடியில் ஸ்ரீ "ராம" நாம லேகன யக்ஞத்தில்... ஸ்ரீ "ராம" நாம வங்கி



ஸ்ரீ ஹரி:

# ஸம்க்ஷேப தர்ம சாஸ்திரம்

# ஸம்க்ஷேப தர்மசாஸ்திரத்தில் விஷயஸூசிகை

## I வர்ணாச்ரம தர்ம ப்ரகரணத்தில்

## III. ஆசௌச தர்ம ப்ரகரணத்தில்

## IV. ச்ராத்த தர்ம ப்ரகரணத்தில்

## V. திதி நிர்ணய தர்ம ப்ரகரணத்தில்

## VI. ப்ராயச்சித்த தர்ம ப்ரகரணத்தில்

# ஸம்க்ஷேப தர்மசாஸ்திரம்

## 1. வர்ணாச்ரம தர்மபிரகரணம்

### 1. தர்மம்

வேதத்தில் தர்மம் ஸகல உலகத்திற்கும் ஆதார மானது என்று கூறப்படுகிறது.

மனு:— வேதசாஸ்திரந் தெரிந்தவர்களாயும் ராக த்வேஷம் முதலிய கெட்ட குணங்கள் இல்லாதவர் களாயும் இருக்கிற ஸாதுக்களால் எது அனுஷ்டிக்கப் பட்டதோ, தாத்பர்யம் உள்ள மனதால் எது அங்கீகரிக்கப்பட்டதோ, அதுதான் தர்மம் என்று நிச்சயம் செய்து கொள்ளவும்.

ஆபஸ்தம்பர்:— தர்மம் அதர்மம் இவ்விரண்டும், நான் தர்மம் நான் அதர்மம் என்று கூறிக்கொண்டு ஸஞ்சரிப்பது இல்லை. தேவர்கள், கந்தர்வர்கள், பித்ருக்கள் இவர்களும் கூட இது தர்மம், இது அதர்மம் என்று நேரில் ஸ்வரூபத்தைத் காண்பித்து சொல்ல முடியாது. ஏனென்றால் தர்மம் அமூர்த்தம் நிரவயம். பெரியோர்கள் எந்த கார்யத்தை புகழ் கிறார்களோ அது தர்மம், எந்த கார்யத்தை நிந்திக் கிறார்களோ அது அதர்மம் என்பதாகும்.

### 2. தர்மப்ரமாணங்கள்

மனு:— வேதங்கள் எல்லாம் தர்மத்தை தெரிவிக்கும் ப்ரமாணங்கள்; வேதம் தெரிந்த மஹர்ஷி களுடைய ஸ்ம்ருதிகளும் நடத்தையும் ஸாதுக்களுடைய

ஆசாரம் ஸம்ப்ரதாயமும் தர்மத்திற்கு ப்ரமாணங்கள். கார்யங்களில் பெரியோர்களுடைய மனஸ்த்ருப்தியும் தர்மப்ரமாணங்களாகும்.

*ஆபஸ்தம்பர்:—* வேத சாஸ்திரங்களில் சொல்லப்பட்ட வர்ணாச்ரம தர்மங்களை அனுஷ்டித்தால் உயர்ந்த, அளவு கடந்த சுகங்களை ஸ்வர்க்க லோகத்தில் அனுபவித்து, பிறகு பூலோகத்தில் அனுபவிக்க வேண்டிய புண்யத்துடன் பிறந்து நல்ல ஜாதி, அழகு, நிறம், பலம், மேதை, ப்ரக்ஞா (மேல்மேல் தோன்றுகிற சக்தி) பணங்கள், வீடு, தோட்டம், தங்கம் முதலியன, தர்மத்தில் ச்ரத்தை, இவைகளை அடைந்து ஸௌக்கியமாக இருப்பான். இந்த மாதிரி திரும்பத் திரும்ப இரு லோகங்களிலும் சக்ரம்போல சுழன்று கொண்டு சுகமாக இருக்கிறான்.

*பராசரர்:—* நான்கு வர்ணங்களுக்கும் ஆசாரம் முக்கிய மானது. அதாவது ஸ்நானம் – ஆசமனம் – ஆகார நியமம், ப்ரம்மசர்யம் முதலிய நியமங்கள் ஆசாரம் எனப்படும். அது எல்லா தர்மங்களுக்கும் அங்கம். ஆகையால் ஆசாரத்துடன் தர்மானுஷ்டானம் செய்ய வேண்டும். அப்பொழுதுதான் தர்மம் ரக்ஷிக்கப் பட்டதாக ஆகும். பலன் கிடைக்கும். ஆசாரத்து உடன் தர்மம் செய்யவில்லையேயானால் தர்மம் பலத்தை கொடுப்பது இல்லை.

*நாரதர் :—* வேதம், ஹரிபக்தி, மஹேச்வர பக்தி, இவைகள் ஆசாரத்திலிருந்து நழுவினவனை பிராம் மணனாக இருந்தாலும் காப்பாற்றாது; புண்ய க்ஷேத்திரம் செல்வது, கங்காதி புண்ய தீர்த்தங்களில்

ஸ்நானம் செய்வது, ஸோம யாகம் முதலிய யக்ஞங்கள் அனுஷ்டிப்பது இவைகளும் ஆசாரம் விட்டவனை ரக்ஷிக்காது.

ஆசாரானுஷ்டானத்தால் ஸ்வர்க்கம், சுகம், மோக்ஷம் எல்லாம் கிடைக்கும். ஆசாரமிருந்தால் எதுதான் அடைய முடியாதது.

### 3. தர்மசாஸ்திரகர்த்தாக்கள்

மனு, ப்ருஹஸ்பதி, தக்ஷன், கௌதமர், யமன், அங்கிரஸ், யாக்ஞவல்க்யர், ப்ரசேதஸ், சாதாதபர், பராசரர், ஸம்வர்த்தர், சுக்ரர், சங்கர், லிகிதர், அத்ரி, விஷ்ணு ஆபஸ்தம்பர், ஹாரீதர் என்ற 18 மஹர்ஷிகள் ஸ்ம்ருதி கர்த்தாக்கள் ஆவார்கள்.

போதாயனம், ஆபஸ்தம்பம், ஸத்யாஷாடம், த்ராஹ்யாயணம், ஆகஸ்த்யம், சாகல்யம், ஆச்வலாயனம், சாம்பவீயம், காத்யாயனம் என்று பூர்வஸூத்ரங்கள் ஒன்பது; வைகானஸம், சௌனகீயம், பாரத்வாஜம், ஆக்னிவேச்யம், ஜைமினீயம், மாதூன்யம், மாத்யந்தினம், கௌண்டின்யம், கௌஷீதகம் என்று அபரஸூத்ரங்கள் ஒன்பது; ஆக 18 ஸூத்ரகாரர்கள் ஆவார்கள்.

### 4. வஸிக்க தகுந்த இடங்கள்

எந்த இடத்தில் க்ருஷ்ணஸாரம் என்ற மான் சஞ்சரிக்கிறதோ, தர்பங்கள், யவதான்யம், வ்ரீஹிதான்யம், நான்கு வர்ணங்களும் சௌகர்யமாக இருக்கிறதோ

அந்த இடம் தர்மதேசம். அந்த தேசத்தில் வஸிக்கச் செல்ல வேண்டும் ஆஸ்திகர்கள்.

விஷ்ணு:— ம்லேச்சதேசத்தில் பித்ருச்ராத்தம் முதலியது செய்யக்கூடாது. ம்லேச்சதேசத்துக்குப் போகக் கூடாது. ம்லேச்சதேசம் என்பது வர்ணாச்ரமதர்மமில்லாத இடமாகும். பாரத தேசம் கர்மபூமியாகும். வடக்கில் ப்ரம்மாவர்த்தம், ரிஷிதேசம் — மத்யதேசம், ஆர்யாவர்த்தம் — என்பது ச்லாக்ய மானதேசம் என்று சொல்லப் படுகிறது.

பாரதத்தில் தக்ஷிணபாகத்தில் காவேரி, துங்கபத்ரா, க்ருஷ்ணவேணி, கோதாவரி இவைகளும், வடபாகத்தில் கங்கை ஆக ஐந்து நதிகளும் பஞ்ச கங்கைகள் என்று சொல்லப்படுகிறது. ஆகையால் இந்த தீரங்களும் வஸிக்கக் கூடிய தேசங்களாகும்.

## 5. யுகதர்மங்கள்

பராசரர்:— யுகங்கள் நான்கு; க்ருதம், த்ரேதா, த்வாபரம், கலி என்று. இதற்கு தேவமான ரீதியில் 12 ஆயிர வருஷங்கள். இந்த நான்கு யுகமும் ஒரு தேவயுகம் என்பார்கள். தேவமான வருஷம் என்பதாவது, மனுஷ்யர்களுடைய வருஷம் தேவர்களுக்கு 1 நாள். உத்ராயணம் பகல் — தக்ஷிணாயணம் இரவு — இந்த மாதிரி க்ருத யுகத்திற்கு நாலாயிர வருஷமும் நானூறு பூர்வஸந்தியும் நானூறு உத்ரஸந்தியும் காலமாகும். த்ரேதா யுகத்திற்கு மூவாயிரவருஷமும், முன்னூறு பூர்வஸந்தி, முன்னூறு உத்ரஸந்தி; த்வாபரத்திற்கு இரண்டாயிர வருஷமும் இருநூறு பூர்வஸந்தி, இருநூறு உத்ரஸந்தி;

கலிக்கு ஆயிர வருஷமும், நூறு பூர்வஸந்தி, நூறு உத்ரஸந்தி; இந்த மாதிரி நான்கு யுகங்களுக்கும் பன்னிரெண்டாயிர வருஷங்கள் தேவமான ரீதியில் கணக்காகும்.

தபஸ் க்ருதயுகத்தில் விசேஷ தர்மமாகும், த்ரேதா யுகத்தில் ஞானம், த்வாபரயுகத்தில் யக்ஞம், கலி யுகத்தில் தானம் இவைகள் விசேஷ தர்மங்களாகும். எல்லா யுகத்திலும் எல்லா நான்கு தர்மங்களும் உண்டு, இருந்தாலும் சொல்லப்பட்ட தர்மத்திற்கு யுகத்தை அனுசரித்து பலன் அதிகம்.

க்ருதயுத்தில் எலும்பையும் த்ரேதாயுகத்தில் மாம்ஸத்தையும் த்வாபரத்தில் ரத்தத்தையும் கலியில் அன்னத்தையும் ஆச்ரயித்து பலன் இருக்கிறது.

க்ருதயுகத்தில் பதிதனிடம் பேசுவதாலும், த்ரேதா யுகத்தில் பதிதனைத் தொடுவதாலும், த்வாபரயுகத்தில் பதிதனுடைய அன்னம் சாப்பிடுவதாலும் பதிதன் ஆவான் கலியுகத்தில் பாதித்யமான தப்பான கார்யம் செய்தவன் தான் பதிதன் ஆவான். இருந்தாலும் கூடியவரையில் பதிதனுடைய பழக்க வழக்கங்களை குறைக்க வேண்டியது க்ஷேமகரமாகும்.

விஷ்ணு புராணம்:— கலியில் எல்லோரும் வேதத்தைப் பற்றியும் ப்ரம்மத்தைப் பற்றியும் பேசு வார்கள்; ஆனால் அனுஷ்டானம் செய்கை சரியாக வேதத்தை அனுசரித்து இராது. வயிற்றை நிரப்பு வதற்கும் காமத்தை உத்தேசித்தும் விசேஷமாக ஈடுபடுவார்கள்.

எந்த எந்த சமயத்தில் வேதம் சொன்ன வழியில் அனுஷ்டானம் செய்யும் ஸாதுக்களுக்கு சிரமம் நாலா விதத்திலும் வருகிறதோ அப்பொழுது கலி ரொம்ப விருத்தி அடைந்ததாக ஊஹிக்கலாம். ஊஹித்து அதைத் தடுக்க பரிஹாரம் தேட வேண்டும் என்பது கருத்து.

வ்யாஸர்:— க்ருதயுகத்தில் எந்த தர்மம் பத்து வருஷத்தில் அனுஷ்டிக்கப்படுகிறதோ அதை த்ரேதை யில் ஒரு வருஷத்திலும், த்வாபரத்தில் ஒரு மாதத் திலும், கலியில் ஒரு நாளிலும் செய்யலாம். அதாவது பலன் சமானம், அனுஷ்டான செளகரியம்.

க்ருதயுகத்தில் பகவானை தியானம் செய்வதி னாலும், த்ரேதாயுகத்தில் அவரை யாகங்களினால் ஆராதனை செய்வதாலும், த்வாபரத்தில் முறைப்படி பூஜிப்பதாலும் என்ன புண்யம் ஏற்படுகிறதோ அது கலியில் பகவான் கேசவனை நாமஸங்கீர்த்தனம் செய்தாலேயே கிடைக்கும்.

எந்த பக்தர்கள் ஹரே, கேசவ, கோவிந்த, வாஸு தேவ, ஜனார்தன என்ற நாமாக்களை நாள்தோறும் ஸங்கீர்த்தனம் செய்கிறார்களோ அவர்களை கலி புருஷன் கெடுப்பது இல்லை.

எந்த பக்தர்கள் சிவ, சங்கர, ருத்ர, ஈச, நீலகண்ட, த்ரிலோசன என்ற நாமாக்களை நாள்தோறும் ஸங்கீர்த்த னம் செய்கிறார்களோ அவர்களை கலிபுருஷன் கெடுப்பது இல்லை.

கலியில் தள்ளத்தகுந்த சில கார்யங்கள்.

வானப்ரஸ்தாச்ரமம் – பெண்ணுக்கு மறுமணம் – ஸமுத்திரத்தில் யாத்ரை செய்வது – யாகத்தில் சுராக்ரஹம் செய்வது – கோக்களை யாகத்தில் பசுவாக உபயோகிப்பது – நைஷ்டிகப்ரம்மசர்யம், நரமேதம், அச்வமேதம், யோக்யதை, அத்யயனம், நன்னடத்தை இவைகளை அனுசரித்து ஆசௌசத்தைக் குறைப்பது – குருகேட்ட தக்ஷிணையை சிஷ்யன் கொடுப்பது – ஸன்யாஸிகள் எல்லா வர்ணங்களிலும் பிக்ஷை செய்வது, பிராம்மணன் இதரர்களின் அன்னம் சாப்பிடுவது, மஹாபாதகிகளுடன் சேர்ந்தவன் மஹாபாதகி என்பது இவைகள் கலியில் தள்ள வேண்டிய கார்யங்கள் என்று மஹர்ஷிகள் சொல்லுகிறார்கள்.

## 6. ஸ்ருஷ்டிப்ரகார

மனு:— இந்த பிரபஞ்சங்கள் உண்டாவதற்கு முன் பகவான் ஏகாங்கியாகப் பிரகாசித்தார். அவர் இந்திரியங்களுக்குப் புலப்படாதவர். ஸூக்ஷ்மம் நிரம்பியவர்,எக்காலத்திலும் இருப்பவர், ஸகல ப்ரபஞ்சங்களையும் தன்னிடத்தில் அடக்கிக் கொண்டவர், ஜகத்துக்கு எல்லாம் ஸாக்ஷிஸ்வரூபமானவர்.

அந்த பகவான் ஜந்துக்களை தன்னிடமிருந்து உண்டு பண்ணுவதின் பொருட்டு ஸங்கல்பம் செய்து ஸகல ப்ரபஞ்சங்களை ஸ்ருஷ்டிக்கும்விருப்பதுடன், முதலில் ஜலத்தை ஸ்ருஷ்டித்து, அதில் தன்வீர்யத்தை அனுப்ரவேசம் செய்வித்தார். இவ்விடத்தில் கூறப்பட்ட ஜலம் காரணோதகம் – ஸாதாரண ஜலம் அல்ல – ஸகலஸ்தாவர ஜங்கம ப்ரபஞ்சங்கள் ஸூக்ஷ்மரூபமாக இருப்பது – அது தன் கர்மாக்களை அனுசரித்து

ஆவிர்பவிக்க வேண்டும் – அது பகவத்ஸம்பந்தம் இல்லாவிடில் உண்டாகாது என்று ஜீவலக்ஷணமான ப்ரக்ருதி அனுப்ரவேசம் சொல்லப்படுகிறது.

ஏற்கனவே சொன்ன ஜலம், நரனான பகவானால் உண்டாக்கப்பட்டதாகையால் நாரர் என்று சொல்லப் படுகிறது. இந்த ஜலமே முன்கல்பத்தில் பகவானுக்கு இருப்பிடமாக இருந்தது. அதாவது ஸ்ருஷ்டித்த ப்ர பஞ்சத்தில் பகவான் அந்தர்யாமியாகவும் ஸாக்ஷியா கவும் இருந்தார். பகவானுக்கு நாரம் என்ற ஜலம் இருப்பிடமாகையால் பகவானுக்கு நாராயணன் என்று பெயர். பிறகு அந்த ஜலத்தில் தங்கமயமான அண்டம் உண்டானது. அது ஆயிரம் வருஷங்களுக்குப் பிறகு இரண்டாகப் பிளந்தது. அதில் விராட்ரூபியான ப்ரும்மா உண்டானார். அந்த அண்டத்தினுடைய (முட்டை) மேல்பாகம் ஸ்வர்க்கலோகாதிகள் – கீழ் பாகம் பூ பாகம் – மத்யம் அந்தரிக்ஷம். இது ஸ்தூலமானப்ரபஞ்ச ஸ்ருஷ்டி – விராட் என்பதாகும்.

இவ்விடம் ஸ்தூலமான ப்ரபஞ்சஸ்ருஷ்டி சொன்ன பிறகு ஸூக்ஷ்ம ப்ரபஞ்ச ஸ்ருஷ்டி சொல்லப்படுகிறது. சதுர்முகப்ரும்மாவினால் பரமாத்மாவினுடைய ஸமீபத்தில் இருந்து மனஸ்தத்வம் எடுக்கப்பட்டது. அது அனேக விஷயங்கள் அடங்கிக்கிடக்கும் அவஸ்தை; அந்த அவஸ் தையில் அஸத் என்றும், ஸத் என்றும் விஷயங்கள் வெளிக்கிளம்பும்பொழுது ஸத் அஸதாத்மகம் என்று சொல்லப்படுகிறது. அதிலிருந்து அஹங்காரதத்துவம் – இது கார்யம் செய்யும் ஸாமர்த்யம் உள்ளது, நான் செய்தேன் என்று அபிமானத்துடன் கூடியது.– இதற்கும் முன்பு மஹத்தத்வம், இது பரமாத்மாவினு

டைய அவ்யாக்ருத சக்தி. இதையும் — ஸத்வம் ரஜஸ் தமஸ் என்று குணங்கள், சப்த ஸ்பர்ச ரூப ரஸ கந்த என்ற விஷயங்கள், இவற்றை க்ரஹிக்கும் ஞானேந் திரியங்கள் (வாக் பாணி பாத பாயு உபஸ்தம்) இவை களும் ஸ்ருஷ்டிக்கப்பட்டன; இது பகவத்ஸ்ருஷ்டியாகும். ப்ரம்மா லோகங்களையும் மற்ற பௌதிகங்களையும் தான் ஸ்ருஷ்டிப்பார் — என்று வேதம் கூறுகிறது.

சதுர் முகப்ரம்மாவானவர் பகவானிடமிருந்து வேதங் களை அடைந்து அதைக்கொண்டு — ப்ரபஞ்சங்களில் உள்ள சராசர வஸ்துக்களுடைய பெயர் அவைகளு டைய காரியங்கள் — அவைகளுடைய பேதங்கள் — மரியாதைகள் — எல்லாவற்றையும் ஸ்ருஷ்டித்தார் — அதாவது காடுகள், மலைகள், நதிகள், பூப்ரதேசங்கள் — நான்கு வர்ணங்கள் (ப்ராம்மண க்ஷத்ரிய, வைச்ய சதுர்த்தர்கள்) ஆச்ரமங்கள் (ப்ரமசர்ய — கார்ஹஸ்த்ய — வானப்ரஸ்த — ஸந்யாஸங்கள்), தர்மங்கள் வர்ணாச் ரமதர்மங்கள் — இவைகளுடைய பலன்கள் — இவ் வளவும் வேதத்தை ப்ரமாணமாகக் கொண்டு முன் கல்பம் போல் ஸ்ருஷ்டித்தார். ஆகையால் ப்ரபஞ்சம் அனாதி — அனந்தமும் (இது ரொம்ப விஸ்தாரமா யுள்ள விஷயம், ஸங்கிரஹமாகச் சொல்லப்பட்டது).

### 7. ப்ராம்மண தர்மங்கள்

தேவலன்:— ப்ராம்மண ஸ்திரீயினிடத்தில் ப்ராம் மணனுக்குப்பிறந்து ஜாதகர்மாதி ஸம்ஸாரகாரத்தை அடைந்தவன் ப்ராம்மணனாகவும், இந்த மாதிரி அந்த அந்த ஜாதி ஸ்த்ரீயினிடத்தில் அந்த அந்த ஜாதி புருஷர்கள் இடத்தில் முறைப்படி ஸம்ஸ்காரத்துடன்

பிறந்தவன் க்ஷத்ரியன், வைச்யன், சதுர்த்தன் என்றும் அறியத்தகுந்தவர்கள் ஆவார்கள்.

மனு:— ப்ராம்மணனுக்கு வேதம் சொல்லி வைப்பது வேதம்படிப்பது, யாகம் செய்வது, யாகம் செய்து வைப்பது, தானம் கொடுப்பது, தானம் வாங்குவது, ஆக ஆறு கர்மங்கள் சொல்லப்பட்டிருக்கின்றன.

மாதவீயம்:— வேதாத்யனம் செய்ய ப்ராம்மணன் நம்பிக்கைக்குறைவினாலோ அல்லது சோம்பலினாலோ ஆதானம் செய்து கொண்டு அக்னிஹோத்ரம் முதலான யக்ஞம் செய்யாமல் போனால் நரகானுபம் ஏற்படும். ஆகையால் அதிகாரியாக உள்ள ப்ராம்மணன் ஆதானம் செய்து யாகங்களினால் பரமேச்வரனை ஆராதிக்க வேண்டும்.

கார்க்யர்:— ச்ரௌதகர்மா செய்ய தனக்கு யோக்யதை இல்லையேயானால் ஓளபாஸனம், ஸ்தாலீபாகம் முதலிய ஸ்மார்த்தகர்மாக்களைச் செய்யவும்; அதுவும் செய்ய சௌகரியமில்லையேனால் ஸ்நானம், ஸந்தியாவந்தனம். பூஜை முதலியவைகளை ச்ரத்தையுடன் செய்து ஆசா ரத்துடன் இருக்கவும்.

யமன்:— அத்யயனம் செய்துவைப்பது, தானம் வாங்கு வது, யாகம் செய்து வைப்பது, இவைகள் ப்ராம் மணனுக்கு நித்யகர்மாவாகாது. ஏனென்றால் இவை கள் ஜீவனத்தை உத்தேசித்துச் சொல்லப்பட்டவை. இவைகள் இல்லாமல் ஸ்வதஸ்ஸித்தமான தனம் இருந்தால் மேற்சொன்ன காரியங்கள் செய்ய வேண்டிய அவசியம் கிடையாது. இந்த மூன்றுள் ப்ரதிக்ரஹம்,

(தானம்) வாங்கி ஜீவனம் செய்வது உயர்ந்தது. அதனால் ஏற்பட்ட பாபத்தை ஜபஹோமங்களால் போக்கடித்துக் கொள்ளலாம், யாஜனத்தினால் ஸம்பவித்த பாபத்தை வேதங்கள் கூட பரிசுத்தம் செய்யாது.

மனு:— அநேகவிதமான நியமனத்துடன் சாஸ்திரத்தில் சொல்லப்பட்ட வ்ரதத்துடன் வேதம் பூர்ணமாக அத்யயனம் செய்யவேண்டும், உபநிஷத் பாகத்தையும் அத்யயனம் செய்யவேண்டும்.

தன் பரம்பரையாக வந்த வேத சாகையை விட்டு மற்றவருடைய (வேறு) வேத சாகையை அத்யயனம் செய்தால் அவன் பரம பாபியாகிறான். அவனுக்கு எந்த வைதிக கர்மாக்களிலும் அதிகாரம் கிடையாது.

மனு:— தபஸ் செய்யவிருப்பமுள்ள ப்ராம்மணன் வேதத்தையே திரும்பத் திரும்ப சொல்லவும். அது தான் பெரிய தபஸ் ஆகும்.

தக்ஷன்:— வேதத்தை குருமுகமாகக்ரஹிப்பது, அர்த்த விசாரம் செய்வது, திரும்பத் திரும்ப ஆவர்த்தி சொல்வது, நியமத்துடன் பாராயணம் செய்வது, சிஷ்யர்களுக்கு சொல்லிவைப்பது, என்ற ப்ரகாரம் வேதாப்யாஸம் ஐந்து விதமாகும்.

எமன்:— தினமும் காலையில் எழுந்து பல் தேய்த்து முறைப்படி ஸ்நானம் செய்து ஸந்தியாவந்தனம் — அக்னிஹோத்ரம் ஔபாஸனம் செய்து ஆசாரத்துடன் சிஷ்யர்களுக்கு வேதாத்யயனம் சொல்லி வைக்க வேண்டும். இது ஆசார்ய நியமம்.

மனு:— குருபுத்ரன், பணிவிடை செய்பவன், வேறு வித்தையை சொல்லிக்கொடுப்பவன், தார்மிஷ்டன், ஆசார சீலன், பந்து, புத்திசாலி, பணம் கொடுப்பவன், நல்ல வன், க்ஞாதி, இந்தபத்து பேர்களும் சிஷ்யர்களுக்கு அர்ஹதை உள்ளவர்கள். ஆகையால் அத்யயனம் செய்து வைக்கலாம். ஆகையால் அனாசாரன், நாஸ்தி கன், அஸூயை உள்ளவன் இவர்களுக்கு அத்யயனம் சொல்லி வைப்பது உசிதமல்ல என்பது சாஸ்திரத்தின் கருத்து.

8. தானம்.

யாக்ஞவல்கியர்:— தினமும் தானமாக ஏதாவது ஒரு பொருளை, அதை வாங்கி நல்லவழியில் உபயோகிக் கும் பாத்திரத்தில் கொடுக்கவேண்டும். க்ரஹணாதி புண்ய காலங்களில் வேதாத்யயன ஸம்பத்து உள்ள பெரியோர்களுக்கு தானம் செய்யவேண்டும். யாசித் தாலும் தன் சக்திக்குத் தகுந்தபடி ச்ரத்தையுடன் கொடுக்கவேண்டும்.

மனு:— ஜலம் கொடுப்பவன் த்ருப்தியையும், அன்னம் கொடுப்பவன் குறைவில்லா சுகத்தையும், எள்ளுகொடுப்பவன் நல்ல ஸந்ததியையும், தீபம் கொடுப்பவன் நல்ல கண்ணையும், பூமியைக் கொடுப் பவன் பூமியையும், தங்கம் கொடுப்பவன் தீர்க்கமான ஆயுஸ்ஸையும், வீடு கொடுப்பவன் உயர்ந்த வீடுகளை யும், வெள்ளி கொடுப்பவன் உயர்ந்த ரூபத்தையும், வேஷ்டி கொடுப்பவன் சந்திரலோகத்தையும், காளை மாடு கொடுப்பவன் அகண்ட ஐச்வர்யத்தையும், கோ கொடுப்பவன் ஸூர்யலோகத்தையும், வண்டி படுக்கை

கொடுப்பவன் அழகான பத்னியையும், அபய தானம் கொடுப்பவன் தனத்தையும், தான்யம் கொடுப்பவன் சாச்வதமான சௌக்கியத்தையும், வேத தானம் (வேதம் சொல்லிக் கொடுப்பது) செய்கிறவன் ப்ரம்மலோகத்தையும் அடைவான். அந்த அந்த் தானத்திற்கு தகுந்த படி பலன் கூறப்பட்டது.

எல்லாதானத்தைக் காட்டிலும் வேததானம் — வேதம் சொல்லி வைப்பது — உயர்ந்தது

தானம் யாருக்கும் செய்யலாம்; ஆனால் பாத்ரம் காலம் இவைகள் அனுசரித்து பலன் அதிகம். கலியில் தானத்திற்கு மகிமை அதிகம், ச்ரத்தையுடன் தானம் செய்யவேண்டும்.

சாண்டில்யர்:— எல்லாதானமும் யாசிக்காதவனுக்கு கொடுக்கவேண்டும். ஆனால் வித்யா — அன்னம் — கன்யா இவைகள் யாசிக்கிற அதிகாரியை பார்த்துக் கொடுக்க வேண்டும்.

ஒருவிசேஷம் — இரண்டு புருஷர்கள் ஸ்வர்க்க லோகத்துக்கு மேல் பிரகாசிக்கிறார்கள்; துர்பிக்ஷ காலத்தில் (அன்னம் அகப்படாத காலத்தில்) அன்னம் கொடுப்பவனும், சுபிக்ஷ காலத்தில் (ஊர்கள் சௌகரியமாக இருக்கும் சமயத்தில்) தங்கம்— வஸ்திரம் கொடுப்பவனும் பிரகாசிக்கிறார்கள் என்று கூறுகிறது.

தேவலன்:— தானம் அல்பமாகவோ அதிகமாகவோ இருக்கலாம், அது விசேஷமல்ல. கொடுக்கிறவனின் பக்தி ச்ரத்தையை அனுசரித்து அதிகம் குறைவு என்பது

— பலத்தில் தெரிகிறது.

யாகம் செய்தது, கொடுத்தது, வேதம் பாராயணம் செய்தது, இவைகளை சொல்லிக்கொள்ளுவதினால் புண்யம் அழிந்துவிடும். நாம் செய்த நல்ல காரியத்தை ச்லாகை செய்தாலும், தானம் கொடுத்து விட்டு அது பற்றி சோகப்பட்டாலும் நம் தேஜஸ் குறைந்து போகும். ஆகையால் பண்ணின நல்ல காரியங்களைக் கூறாதே.

தக்ஷன்:— பாத்ரத்தை அனுசரித்து பலன் ஏற்படு கிறது. அப்ராம்மணனுக்குக் கொடுத்த பொருளுக்கு சொல்லப்பட்ட பலன் உண்டு. அனுஷ்டானமில்லாத ப்ராமணனுக்குக் கொடுத்தது இரண்டு மடங்கு பலன் கொடுக்கும். வேதம் நன்றாக சொல்லுகிறவனுக்குக் கொடுப்பது லக்ஷ மடங்கு அதிகம், வேதம் அர்த்தத் துடன் அனுஷ்டானத்துடன் கரை கண்டவனுக்கு கொடுப்பது அளவில்லாத அளவு அதிகமாகப் பலன் கிடைக்கும்.

யமன்:— ஒருவருடைய ஸ்வபாவம் நல்லது கெட்டது என்பது கூட பழகுவதால் தெரியும். சௌசாசாரம் அவர்களுடைய நடவடிக்கையால் புரியும். பேசினால் படிப்பு யோக்யதை புரியும். இந்த மாதிரி பாத்ரம் தீர்மானிக்கப்பட வேண்டும்.

பிரஜாபதி:— எவன் ஸ்வதர்மமான ஸ்நான ஸந்தி யாதிகளை விட்டானோ அவன் பாஷண்டீ (அதாவது பாபீ) என்று சொல்லப்படுகிறது. அவனைச் சேர்ந்த வனும் பாபீ. எவன் வாசுதேவனை ஸாமான்யன்

என்று மட்டமாக நினைக்கிறானோ அவனும் பாஷண்டீ, (பாபீ). இவர்கள் நரகத்தை அடையப் போகிறார்கள். மட்டமான தரமற்ற மனுஷ்ய மிருகங்கள் ஆகையால் இவர்களுக்குப் பொருளைக் கொடுத்து உன்னைக் கெடுத்துக் கொள்ளாதே என்று பொருள்.

ப்ரதிக்ரஹம் பற்றி கொஞ்சம் தெரிவிக்கிறேன். நல்ல ச்ரோத்ரிய குடும்பங்களிலிருந்துதான் தானம் வாங்க வேண்டும். தன் குடும்ப நிலையை அனுசரித்துப் பார்த்து அனுஷ்டானக் குறைவு உள்ள ப்ராம்மணனி டமும் ப்ரதிக்ரஹம் செய்யலாம்.

மனு:— வயது முதிர்ந்த மாதாபிதாக்கள், பதிவர தையான மனைவி, குழந்தையான புத்திரன் புத்ரிகள் இவர்களைக் காப்பாற்ற வேண்டியது முக்யம். ஆகை யால் எப்படியாவது கூடியமட்டிலும் பார்த்து ப்ரதி க்ரஹம் செய்து காப்பாற்ற வேண்டும். அது முக்யம் என்று மனு சொல்லுகிறார்.

பராசரர்:— ஸ்நானம் ஸந்தியா — பூஜை — ஔபாஸனம் — ப்ரம்மயக்ஞம் — வைச்வதேவம் இவைகளை செய்கிற ப்ராம்மணன் பூமியில் உழுது பயிரிட்டுக் கார்யங்களைச் செய்யும்படிச் செய்து பண்ணை வைத்தும் பிழைக்கலாம். ஆபத்காலத்தில் வ்யாபாரம் செய்து, சிலபொருள்களை விற்றுப் பிழைக்கலாம்.

### 9. க்ஷத்திரிய தர்மங்கள்

விஷ்ணு புராணம்:— ராஜாவானவன் துஷ்டர்களை தண்டிப்பதாலும் சிஷ்டர்களை (நல்லவர்களை) ரக்ஷிப்ப

தாலும் உயர்ந்த விரும்பப்பட்ட லோகங்களை அடை கிறான். ஏனென்றால் வர்ணங்களுடைய மரியாதையைக் காப்பாற்றுகிறான் அல்லவா ?

மனு:— ராஜாவானவர் திக்பாலர்களுடைய அம்ச மாவார். அந்த திக்பாலர்களுடைய தேவர்களுடைய தேஜோயுக்தமான ஸ்வபாவத்தை அனுசரிக்க வேண்டும்.

எப்படி இந்திரன்-வர்ஷா காலமான நான்கு மாதங் களில் மழையை வர்ஷிப்பது போல், விரும்பிய வஸ்துக் களை வர்ஷிப்பதால், இந்திரனுடைய வ்ரதத்தை அனு- சரிக்கிறான் அரசன் என்பது கருத்து.

ஸூர்யன் எட்டு மாஸங்களில் தன் ரச்மிகளால் ஜலத்தை க்ரகித்துக் கொள்கிறான். அதுபோல் ராஜா எட்டு மாதங்களில் ஜனங்களிடமிருந்து உசிதமான கப்பங்களை (வரியை) சிரமப்படுத்தாமல் வாங்குகிறான். ஜனங்களுக்கு உபகாரம் செய்வதால் ஸூர்யனை அனுசரிக்கிறான்.

வாயுவானது எல்லா ப்ராணிகளிடமும் வெளி யிலும் ஸஞ்சரித்து நல்லது செய்கிறதோ அதேமாதிரி ராஜா சாரர்கள் மூலமாக தன் ராஜ்யத்திலும் ப்ரதேசங்களிலும் உள்நுழைந்து நல்லது கெட்டது தெரிந்து நடவடிக்கை எடுக்கிறான். அது வாயு வ்ரதமாகும்.

யமதர்மராஜா எவ்வாறு வேண்டியவன் வேண்டா தவன் என்று பாராமல் தண்டனை கொடுக்கிறானோ அவ்வாறு அரசன் துஷ்டர்களை (தப்பு செய்தவர் களை) தண்டிக்கிறான். இது யமனுடைய வ்ரதமாகும்.

வருணன் எவ்வாறு பாசாயுதங்களால் சத்துக் களைக் கட்டி அடக்குகிறானோ அவ்வாறு ராஜா பாபிகளை அவச்யம் அடக்கி தண்டிக்கிறான். இது வருண வ்ரதம்.

எவ்வாறு பூர்ணிமா சந்திரனைப் பார்த்த ஜனங்கள் ரொம்ப ஸந்தோஷப்படுவார்களோ, அதேமாதிரி ராஜாவைக் கண்ட ஜனங்கள் ஸந்தோஷப்படுகிறார்கள். அது சந்திர வ்ரதம்.

ப்ரதாபமுள்ள தேஜஸ்வியான ராஜாவானவன் குற்ற முள்ளவனிடம் அதிக கடுமையாகவும் சத்ரு ராஜாக் களை ஹிம்ஸிக்கிறவனாகவும் இருக்கிறான் என்பது அக்னி வ்ரதமாகும்.

எவ்வாறு பூமியானது எல்லா ப்ராணிகளையும் கருணையுடன் பொறுமையயாக தரிக்கிறாளோ அந்த மாதிரி ராஜா ஸகல ப்ராணிகளையும் தரிக்கிறான் என்பது பூமி வ்ரதமாகும்.

இந்த மாதிரி உபாயங்களினாலும் வேறு உபாயங் களாலும் சோம்பல் இல்லாமல் திருடர்களையும் கொள்ளை அடிப்பவர்களையும் அடக்க வேண்டும். பிற ராஜ்யங்களிலும் இந்த கார்யங்களுக்கு உதவ வேண்டும். கொள்ளை அடிப்பவர்களை வளரவிட்டால் பொருளாதாரம் சீர்குலையும் என்பது கருத்து.

பராசரர்:— க்ஷத்திரியனுக்கு ப்ரஜாஸம்ரக்ஷணம்—துஷ்ட சிக்ஷணை கார்யத்தை உத்தேசித்து ஆயுததாரணம், தர்மமானயுத்தம் செய்வது, சத்ருஸைன்யத்தை ஜயித்து பூமியை ஆளுவது இவைகள் உயர்ந்த கார்யங்கள்.

ப்ராம்மணர்களை விசேஷமாக பூஜிக்க வேண்டும். ஏனென்றால் அவர்கள் பிரத்யக்ஷ தெய்வமாவார். அவர்கள் நியமத்துடன் வேதத்தை அத்யயனம் செய்து, முறைப்படி யாகம் செய்து, தேவ பூஜை செய்து லோகத்தை ரக்ஷிக்கிறார்கள். ராஜாவுக்கும் அவர்கள் செய்யும் புண்ய கார்யங்களில் ஆறில் ஒரு பங்கு கிடைக்கிறது. இது அவர்களை ரக்ஷிப்பதால் ஏற்படும் பரிசு.

## 10. வைச்ய தர்மங்கள்

மனு:— மூன்றாவது வர்ணமான வைச்யர்கள், பசுக்களை ரக்ஷிப்பது, தானம் செய்வது, யாகம் செய்வது, அத்யயனம் செய்வது, தான்யம்—ரத்னம்—தங்கம்—வெள்ளி முதலியவைகளை வ்யாபாரம் செய்வது, பணத்தை முறைப்படி வட்டிக்குக் கொடுப்பது, சாகுபடி செய்வது என்பதான இந்த தர்மங்களை முறைப்படி செய்யவேண்டும்.

நான்கு வர்ணங்களும் பகவானால் ஸ்ருஷ்டிக்கப்பட்டது. ஆகையால் நான்காவது வர்ணத்தில் பிறந்தவர்களுக்கு தர்மங்கள் ஸுலபம். பகவானை பூஜிக்கலாம். இது எல்லோருக்கும் ஸமமானது. இது அவரவர்களுடைய க்ருஹத்தில் செய்யவேண்டிய விஷயம். வைதிக ப்ராமணர்களுக்கு பணிவிடை செய்வது முக்ய தர்மம் ஆகும். ஜீவனத்தை உத்தேசித்து ஜனங்களுக்கு உபயோகமான வஸ்துக்கள் செய்து கொடுத்து ஜீவிக்கலாம். இது சில்ப கார்யங்கள் என்று சொல்வது.

## 11. நான்கு வர்ணங்களுக்கும் பொதுவான தர்மங்கள்

விஷ்ணு:— பொறுமை, ப்ரியமாயும் ஹிதமாயும் இருக்கிற உண்மையை பேசுவது, மனதை அடக்குவது, சரீரத்தை மண்களினால் சுத்தி செய்து கொள்வது, முடிந்த அளவில் பிறருக்கு உபகாரமான பொருளை கொடுப்பது, இந்திரயங்களை அடக்குவது, பிறருக்கு ஹிம்சை செய்யாமல் இருப்பது,பெரியோர்களுக்கு பணிவிடை செய்வது, கங்கா நதி முதலிய புண்ய தீர்த்தங்களுக்கு யாத்ரை செய்வது, தயை, கபடம் இல்லாமல் இருப்பது, பேராசை இல்லாமல் இருப்பது, தேவர்களையும் ப்ராம்மணர்களையும் பூஜிப்பது, அஸுயை இல்லாமல் இருப்பது, இவைகள் நான்கு வர்ணத்தாருக்கும் பொதுவான தர்மங்கள். இவைகள் எல்லோருக்கும் அவச்யம். ஸங்கர ஜாதிகள் என்று சிலர் இருக்கின்றனர். இவர்கள் நம் காமக்ரோதங்களினால் ஏற்பட்டவர்கள். அவர்களுக்கும் இந்த தர்மங்கள் சொல்லப்பட்டிருக்கிறது.

### கர்மாக்கள் செய்ய சில பொது விதிகள்.

1. குறிப்பிட்ட காலத்தில் கர்மா செய்ய முடியாமல் போனால் கௌண காலத்தில் செய்ய வேண்டும். அதாவது கர்மா செய்யும் காலத்திற்கு பின்வரும் காலத்திற்கு கௌண காலம் என்பது பெயர்.

2. அந்த கௌண காலத்தில் கர்மா செய்யும் பொழுது முக்ய காலத்தில் செய்ய முடியாததற்கு ப்ராயச்சித்தம் செய்து செய்ய வேண்டும்.

3. பகலில் செய்ய வேண்டிய கர்மாக்கள் செய்ய முடியாமல் போனால் ராத்திரியின் முன் யாமத்தில் (9 மணிக்குள்) செய்யலாம். ஆனால் ஸூர்ய நமஸ்காரம் – ப்ரம்மயக்ஞம் இந்த இரண்டைத் தவிர மற்ற கர்மாக்களை செய்யலாம்.

4. முக்ய காலத்தில் செய்ய வேண்டிய கர்மாவுக்கு சொல்லப்பட்ட த்ரவ்யம் கிடைக்கவில்லையானால் கௌண காலத்தில் கிடைக்கும் என்றால் காலம் தான் முக்கியம். கௌண த்ரவ்யத்தை வைத்து கொண்டு முக்ய காலத்திலேயே கர்மா செய்ய வேண்டும்.

5. சில கர்மாக்கள் தன்னால் செய்ய முடியா விட்டால் புத்திரன், புரோஹிதன், ஸஹோதரன், பத்னீ, பிதா, ஸ்னேகிதன், இவர்களைக் கொண்டு செய்யச் சொல்லலாம்.

6. எதுவும் பொதுவாக வலது கையால் செய்ய வேண்டும்.

7. யக்ஞோபவீதம் இல்லாமல் கர்மாக்களை செய்யக் கூடாது.

8. பொதுவாக எந்த கர்மாக்களையும் உட்கார்ந்து கொண்டு செய்ய வேண்டும். விசேஷ விதி இருந்தால் நின்று கொண்டு செய்யலாம்.

9. எந்த கர்மாக்களுக்கும் கிழக்கு அல்லது வடக்கு (வடகிழக்கு) இவைகள் பார்த்துச் செய்ய வேண்டும்.

10. எந்த கர்மாவும் ஆசமனம்—சங்கல்பம் செய்து ஆரம்பிக்க வேண்டும்.

11. கர்மாவில் ப்ரதான கார்யம் மறந்தால் மறு படியும் செய்ய வேண்டும். அங்ககார்யம் மறந்தால் ப்ராயச்சித்தம் செய்தால் போதும்.

12. எந்த கர்மாவும் அவரவர்கள் ஸூத்ர ப்ரகாரம் செய்ய வேண்டும்.

13. முக்ய த்ரவ்யம் கிடைக்காவிடில் பிரதிநிதி த்ரவ்யத்தைக் கொண்டு கர்மாக்கள் செய்யலாம்.

14. ஸ்வ ஸூத்ரத்தில் சொல்லாததை பிற ஸூத்தி ரத்திலிருந்து எடுத்து அனுஷ்டானம் செய்யலாம், ஆனால் ஸ்வஸூத்ர் விரோதமாக இருக்கக் கூடாது.

15. ஸ்வஸூத்ர ப்ரகாரம் கார்யம் செய்ய சௌகரிய மில்லாமல் போனால் போதாயன ஸூத்ரப்ரகாரம் செய்யலாம் என்று வ்ருத்தமனு சொல்லுகிறார்.

16. சொல்லப்பட்ட காலம் வராமல் முன் காலத்தில் செய்வது செய்யாதது மாதிரி ஆகும். ஆகையால் காலம் வந்த பிறகு மறுபடியும் செய்ய வேண்டும்.

17. எந்த கர்மாவும் ஸாதாரணமாக சரியாக உட்கார்ந்து கொண்டு (ஸ்வதிகாஸனம்) செய்ய வேண்டும். சாஸ்திர விதியை அனுசரித்து மாற்றிக் கொள்ளலாம்.

18. கழுத்தில் வஸ்திரம் சுற்றிக் கொண்டு கர்மாக்கள் செய்யலாகாது.

19. எந்த கர்மாவும் இரண்டு முழங்காலுக்குள் செய்ய வேண்டும்.

20. எந்த கார்யங்களுக்கும் க்ருஷ்ண ஸ்மரணம் ப்ராயச்சித்தம் ஆகும்.

### 12. நாற்பது ஸமஸ்காரங்கள்

*யாக்ஞவல்க்யர்:—* நிஷேகம் என்பது கர்பாதானம் இது முதற்கொண்டு மூன்று வர்ணிக்கும் (ச்மசானாத்தா:) இறந்த பிறகும் கர்மாக்கள் சொல்லப் படுகின்றன.

*கௌதமர்:—* கர்பாதானம்—பும்ஸவனம்—ஸீமந்தம் —ஜாதகர்மா—நாமகரணம்—அன்னப்ராசனம்—சௌளம் —உபநயனம் (8), நான்கு வேதவ்ரதங்கள், ஸ்நானம், விவாஹம், பஞ்சமஹாயக்ஞங்கள் (தேவ—பித்ரு—மனுஷ்ய— பூத—ப்ரம்மயக்ஞங்கள்), அஷ்டகை— பார்வணம்—ச்ராத்தம்—ச்ராவணீ—அக்ரஹாயணீ— சைத்ரீ — ஆச்வயுஜீ — என்ற ஏழு பாகயக்ஞஸம்ஸதா:, ஆதானம், அக்னிஹோத்ரம், தர்சபூர்ணமாஸங்கள் —ஆக்ரயணம்— சாதுர்மாஸ்யங்கள், நிரூடபசுபந்தங்கள், ஸௌத்ராமணீ என்ற ஏழு உறவிர்யக்ஞங்கள், அக்னிஷ்டோமம், அத்யக்னிஷ்டோமம், உக்த்யம், ஷோடசீ, வாஜபேயம், அதிராத்ரம், அப்தோர்யாமம் என்ற ஏழு ஸோமஸம் ஸத்தைகள் ஆக 40 ஸம்ஸ்காரங்கள். ஸகல ப்ராணிகளிடமும், தயை, இரக்கம், பொறுமை, அஸூயை இல்லாமல் இருப்பது, சௌசம், அனாயாஸம், தன்

னையும் பிறரையும் சிரமப்படுத்தாமல் கார்யம் செய்வது, மங்களம், கார்பண்யம், (பெரும் மனதுடன் பிறருக்கு தனாதிகளால் உபகாரம் செய்வது), அஸ்ப்ருஹா —(பிறர் பொருளில் ஆசை இல்லாமல் இருப்பது)— இவைகள் எட்டு ஆத்ம குணங்கள் ஆகும்.

இந்த எட்டு ஆத்ம குணங்கள் மனுஷ்யனுக்கு முக்ய மானவை. இவை இருந்தால் மேற்கொண்ட ஸம்ஸ்காரங்கள் சோபிக்கும் என்பது சாஸ்திரம்.

இதில் கர்பதானத்திலிருந்து உபநயனம் பர்யந்தம் அவச்யம் செய்து கொள்ள வேண்டும். இதற்கு பிறகு வைராக்ய மிருக்குமேயானால் ஸந்யாஸம் செய்து கொள்ள லாம். வைராக்யமில்லாதபக்ஷத்தில் விவாஹாதிகள் செய்து கொள்ளலாம்.

## 13. கர்பாதானம்.

*யாக்ஞவல்க்யர்*:— ரஜோதர்சன முதல் 16 நாட்கள் ருது எனப்படும். அவைகளுள் இரட்டைப் படையான ராத்ரிகள் ஸ்த்ரீகமனத்துக்கு யோக்யமான காலங்கள். அதில் பர்வாக்கள் ஸம்பவித்தால் ப்ரம்மசர்யமாக இருக்க வேண்டும். முன் நான்கு தினங்கள் கூடாது.

*பராசரர்*:— ரஜோதர்சன முதற்கொண்டு முதல் தினம் சண்டாளியாவும், இரண்டாவது தினம் ப்ரம் மஹத்தி தோஷ முள்ளவளாயும், மூன்றாவது தினம் ரஜகீ என்றும் சொல்லப்படுகிறது. அதாவது அந்த மாதிரி உள்ளவர்களின் தோஷ ஸாம்யம் என்பது

கருத்து. விலகச் செய்ய வேண்டும். நான்காவது நாள் ஸ்னானம் செய்த பிறகு வீட்டு கார்யங்கள் செய்ய லாம். தெய்வீகமான கார்யத்திற்கு ஐந்தாவது தினம் சுத்தமாவாள்.

மூன்று நாட்கள் நியமத்துடன் இருக்க வேண்டும். அப்படி இருந்தால் பிறக்கும் குழந்தைகள் க்ஷேமங்கள் உடன் இருக்கும். இது ப்ரஜாஸம்ரக்ஷணத்திற்கு ஏற்பட்ட வ்ரதமாகும். அந்த காலங்களில் எண்ணெய் தேய்த்துக் கொள்வது, அலங்காரங்கள் செய்து கொள்வது பல்தேய்ப்பது இவைகளை வர்ஜிக்க வேண்டும்.

சாண்டில்யர்:— ஸ்திரீஸங்கம நியமம் சொல்லப் படுகிறது. கர்ப்பிணீ, அழுக்குள்ள வஸ்திரம் தரித்த வள், தலை நரைத்தவள், வயது ஆனவள், பஹிஷ்டை உள்ளவள், சரீர ஸ்வாஸத்யம் இல்லாதவள், இந்த மாதிரி உள்ள பார்யாளுடன் சேரக்கூடாது. பசியோடு சேரக்கூடாது அகுஹ்யமான இடங்களில் ரேதஸ்நேகம் உதவாது. ஆகையால் அலங்காரங்கள் செய்து கொண்டும் ஸ்னானம் செய்தவளும் சந்தோஷம் உள்ள மனஸுடன் இருப்பவளும் வ்யாதி இல்லாதவளுடன் சேரவேண்டும். நிந்திதமான நாட்களில் சேரக்கூடாது.

கௌமதர் :— ஸதிரீஸங்கமம் செய்தவன் உடனே சுத்தி செய்து கொள்ள வேண்டும். தாம்தம் செய்யக் கூடாது.

கூர்மபுராணம்:— ஷஷ்டி, அஷ்டமி, அமாவாசை. பூர்ணிமா, த்வாதசீ, ஏகாதசீ, சதுர்தசீ, ஜன்மானுஜன்ம

த்ரிஜன்மம் என்ற தன் நக்ஷத்ரங்கள், பகல் இவை களில் ஸ்திரிஸங்கமம் செய்யக் கூடாது.

### 14. பும்ஸவனம்

ஆபஸ்தம்பர்:— கர்ப்பம் நன்றாக தெரிந்த பிறகு புஷ்ய நக்ஷத்திரத்தில் பும்ஸவனம் செய்ய வேண்டும். பும்ஸவனம் என்பது கர்மாவுக்குப் பெயர்.

பும்ஸவனம் மூன்றாவது அல்லது நான்காவது மாஸத்தில் செய்யவேண்டும். கர்ப்ப ப்ரகாசம் அந்த மாதங்களில் ஸ்திரீகளுக்கு நன்றாக தெரியும் என்று காலாதர்சத்தில் சொல்லப்படுகிறது.

பாரஸ்கரர் என்பர் இரண்டாவது அல்லது மூன்றாவது மாஸத்தில் புருஷ நக்ஷத்திரத்தில் பும்ஸவனம் செய்ய லாம் என்கிறார். ஹஸ்தம்—மூலம்—ச்ரவணம்—புனர்வஸு — ம்ருகசீர்ஷம் — புஷ்யம் இவைகள் புருஷ நக்ஷத்ரங்கள் ஆகும். ஜாதூகர்ண்யர் என்ற ரிஷி ஸீமந்ததுடன் பும்ஸவனம் செய்யலாம் என்று சொல்லுகிறார். அதுதான் பெரும்பாலும் நடக்கிறது.

### 15. ஸீமந்தோன்னயனம்

காச்யபரிஷியானவர் ஆறாவது அல்லது ஏழாவது, எட்டாவது, ஒம்பதாவது கடைசியாக ப்ரஸவபர்யந்தம் ஸீமந்தம் செய்யலாம் என்று சொல்லுகிறார்.

ஆபஸ்தம்பர் ப்ரதம கர்பத்தில் நான்காவது மாதம் ஸீமந்தம் செய்யவேண்டும் என்று சொல்லுகிறார்.

ஸீமந்தம் ஸ்திரீகளுக்கு கர்ப்ப ஸமஸ்காரம் ஆகையால் ஒருதடவை ஸீமந்தம் செய்தால் போதும். அந்த கர்ப்பத்தில் பிறக்கும் அடுத்த குழந்தைகளுக்கும் ஸம்ஸ்க்ருதமான கர்ப்பத்தில் பிறப்பதால் மறுபடியும் செய்யவேண்டாம். இது மாதிரி பும்ஸவனமும் ஆகும்.

ஸீமந்தம் செய்யாமல் குழந்தை பிறந்தால் பெட்டியில் சிசுவை வைத்து ஸீமந்தத்தை செய்ய வேண்டும்.

பிறகு குழந்தையைப் பார்க்கவேண்டும் என்று கார்க்யர் சொல்லுகிறார். ஸீமந்தம் செய்யாமல் பர்த்தா (தவறி) இறந்துபோனால், மச்சினன் அல்லது ஆசார்யன், க்ஞாதிகள், இவர்கள் ஸீமந்தம் செய்ய வேண்டும்.

### 16. ஜாதகர்மா

மனு: — புருஷ சிசு பிறந்தவுடன் நாள ச்சேதத்திற்கு (தொப்பிள்கொடி) முன்பு ஜாதகர்மா செய்ய வேண்டும். அதில் மந்திரம் சொல்லி தங்கம், தேன், நெய், இவைகள் ப்ராசனம் செய்து வைக்கவேண்டும்.

நாளச்சேதத்திற்கு முன்பு நாந்தி ச்ராத்தம் ஆமரூபமாக அல்லது ஹிரண்ய ரூபமாக செய்ய வேண்டும். செய்ய முடியாவிட்டால் பிறகு நாமகரணத்துடன் சேர்த்து செய்யலாம்.

புத்ர ஜனனத்தில் தொப்பிள் கொடி அறுப்பதற்கு முன்பு வெல்லம், எள்ளு, தங்கம், பசு, வஸ்திரம்,

தான்யம், இவைகளுடைய ப்ரதிக்ரஹத்தில் தோஷம் கிடையாது. ஆகையால் அவச்யம் தானம் செய்ய வேண்டும். வாங்குகிறவர்களும் வ்ருத்தி ஆசௌச காலத்தில் வாங்கினால் தோஷமோ என்று நினைக்கவேண்டாம் என்பது கருத்து.

ஸம்வர்த்தர்:— புத்ர ஜனனத்தைக் கேட்டவுடன் உடுத்துக் கொண்ட வஸ்திரத்துடன் ஸ்நானம் செய்யவேண்டும், இரவானாலும் செய்யவேண்டும்.

இரவில் ஸ்நானம் செய்யும்படி நேரிட்டால் தீபத்தை வைத்துக் கொண்டு ஸ்நானம் செய்ய வேண்டும்.

## 17. நாமகரணம்

யாக்ஞவல்க்யர்:— பதினோறாவது நாள் புத்ரனுக்கு நாமகரணம் செய்யவேண்டும். 4வது மாதத்தில் நிஷ்க்ரமணமும், 6வது மாதத்தில் அன்ன ப்ராசனமும், சௌளமும் குலாசாரப்படி செய்யவேண்டும். நிஷ்க்ரமணம் என்பது குழந்தையை வீட்டுக்கு வெளியில் கொண்டுவருவது.

ப்ராமணன் சர்மா என்பதையும், க்ஷத்ரியன் வர்மா என்பதையும், வைச்யன் குப்தா என்பதையும் நான்காவது வர்ணத்தவன் தாஸ என்பதையும் பெயருக்கு கடைசியில் வைத்துக்கொள்ள வேண்டும்.

மனு:— ஸ்திரீகளுக்கு சுகமாக உச்சரிக்கத் தகுந்ததாயும், க்ரூரமில்லாததும் ஸ்பஷ்டமான அர்த்தத்தை

உடையதாயும், மனோகரமாயும், மங்கள வாசகமாயும், ஆ, ஈ இந்த மாதிரி தீர்க்க வர்ணத்தை முடிவில் உடையதாயும் ஆசீர்வாதத்தைக் குறிக்கிறதாயும் பெயர் சூட்ட வேண்டும்.

புருஷர்களுக்கு இரட்டைப்படை அக்ஷரங்கள் உள்ளதாயும், ஸ்திரீகளுக்கு ஒற்றைப்படை ஆக்ஷரங்கள் உள்ளதாயும் பெயர்கள் வைக்க வேண்டும். ராம, க்ருஷ்ண, சிவ, ஸ்ரீ— யசோதா, பார்வதீ— இந்த மாதிரி இருக்க வேண்டும் என்று கருத்து.

## 18. அன்னப்ராசனம்

பிறந்த முதல் 6வது மாதத்தில் நாந்தி புண்யாக வாசனம் செய்து தயிர், தேன், நெய், அன்னம் இவைகளைச் சேர்த்து மந்திரம் சொல்லி குழந்தைக்கு அன்னப் ப்ராசனம் செய்ய வேண்டும்.

## 19. சூடாகரணம்

ஆபஸ்தம்பர்:— பிறந்து முதல் 3வது வருஷம் ஆன பிறகு 6 மாதம் கழித்து 3 1/2 வருஷத்தில் சௌளம் செய்யவேண்டும்.

நாரதர் :— குழந்தையின் தாயார் கர்பிணியாக இருந் தால் சௌளம் செய்யக்கூடாது.

## 20. ஸ்திரீகளுக்கு ஜாதகர்மா முதலியன.

யாக்ஞவல்க்யர்:— ஜாதகர்மா முதலியவைகள் ஸ்திரீகளுக்கு மந்திரமில்லாமல் செய்யவேண்டும். விவாஹம் மந்திரத்துடன் செய்ய வேண்டியது.

சொல்லப்பட்ட காலத்தில் ஜாதகர்மா முதலியவை கள் ஸ்திரீ புருஷர்களுக்கு செய்யாவிட்டால் ஆஜ்யத் தால் வ்யாஹ்ருதி ஹோமம் செய்து ஒவ்வொன்றுக்கும் பாதக்ருச்ரம் செய்யவேண்டும். சௌளத்திற்கு அர்த க்ருச்ரம் செய்யவேண்டும்.

மார்கண்டேயர்:— குழந்தைகளுக்கு ஐந்தாவது வயது வந்துபிறகு பகவான் விஷ்ணு எழுந்த பிறகு ஷஷ்டி, ப்ரதமை, அஷ்டமீ, ரிக்த திதி, அமாவஸ்யை — பூர்ணிமா, ஞாயிறு செவ்வாய் இவைகளை தவிர்த்து மற்ற சுப காலங்களில் வித்யாரம்பம் அக்ஷராப்யாஸம் ஆரம்பிக்கவும்.

## 21. உபநயனம் ஆகாத குழந்தைகளுடைய தர்மங்கள்.

தக்ஷன்:— சிசு பிறந்து எட்டுவயது பர்யந்தம் குழந்தை யாகவே பாவிக்கப்படுகிறான். அதாவது குழந்தை பிறந்தும் கர்பத்தில் இருப்பவனுக்கு ஸமமாவான். ஸமம் என்பதால் கர்ப்பத்தில் சிசுவை— யூஹிக்க வேண்டும். சிசு பிறந்து தெரிகிறது இது தான் வித்யாசம்.

ஆஹாரத்திலும், பானத்திலும், சாப்பிடக் கூடாதது— சாப்பிடத் தகுந்தது— என்பது கிடையாது— தோஷ மில்லை என்பது கருத்து. உபநயனம் ஆனால் அவிஹித அனுஷ்டான தோஷம் வரும். ப்ராயச்சித்தம் சொல்லப் பட்டிருக்கிறது. எல்லாம் சாப்பிடலாம் என்றால் மத்யம் (கள்) சாப்பிடக் கூடாது. கள் சாப்பிட்டால் மஹாபாதகம். ப்ராயசித்தம் மரணம் தான் என்று கூறுகிறது.

உபநயனமாகாதவன் ஆறாவது வயது ஆரம்பத்தி லிருந்து பொதுவான வர்ண தர்மங்களில் பழக்க வழக்கங்கள் ஏற்பட பிதா முதலியவர்களால் சிக்ஷை செய்யப்பட வேண்டியவன். காமசாரகாமபக்ஷங்கள் ஆறாவது வயதுக்கு முன்பு தோஷமில்லை என்று சொல்லப்பட்டது.

உபநயனமாகாதவன் வேத மந்திரங்களை உச்சரிக்கக் கூடாது. ஆனால் பிதா மாதா முதலியவர்களுடைய அபரகார்யங்களில் உச்சரிக்கலாம்.

## 22. உபநயனம்

ஆபஸ்தம்பர்:— கர்பத்திலிருந்து எட்டாவது வருஷத் தில் ப்ராம்மணனுக்கு உபநயனம் செய்ய வேண்டும். கர்பத்திலிருந்து எட்டாவது வருஷம் என்பது குழந்தை கர்பத்தில் இருக்கும் பொழுது ஒரு வயது. அந்தமாதிரி எட்டாவது வருஷம் உபநயனகாலம். க்ஷத்ரியனுக்கு இதே மாதிரி கர்பத்திலிருந்து 11வது வருஷத்திலும், வைச்யனுக்கு 12வது வருஷத்திலும் உபநயன்ம் செய்ய வேண்டும். ப்ராம்மணனுக்கு வஸந்த ருதுவும், க்ஷத்ரி யனுக்கு க்ரீஷ்மருதுவும், வைச்யனுக்கு சரத் ருதுவும் உபநயன காலமாகும்.

மனு:— புத்ரனுக்கு சீக்ரம் வேத சாஸ்திரங்கள் சொல்லிக்கொடுக்க வேண்டும், பெரிய வித்வானாக ஆக வேண்டும் என்ற எண்ணம் உள்ள பிதா 5வது வயதிலும் உபநயனம் செய்யலாம்.

மனு:— முன் சொன்னது முக்கிய காலம். அதில் உப நயனம் செய்ய சௌகரியமில்லையேயானால் காலாதீக

ப்ராயசித்தம் செய்து பதினாறாவது வயது பர்யந்தம் ப்ராம்மணனுக்கு உபநயனம் செய்யலாம். அதற்கு மேல் வயது தாண்டக் கூடாது. இவ்விடத்தில் ஸாவித்ரீ என்பது உபநயனம் என்பதாகும். க்ஷத்ரியனுக்கு 22 வது வருஷ பர்யந்தமும் வைச்யனுக்கு 24வது வருஷ பர்யந்தமும் கௌணகாலம் சொல்லப்பட்டிருக்கிறது. அதற்கு மேல் ஸாவித்ரீ பதிதா உபநயனம் ஆகாதவர் கள் வ்ராத்யர்கள் ஆவார்கள்.

ஸ்ம்ருத்யர்த்த ஸாரத்தில் 16 வயதுக்குப் பிறகு ப்ராயச்சித்தம் செய்து கொண்டு பிறகு உபநயனம் செய்யவேண்டும் என்று கூறப்பட்டுள்ளது.

வசிஷ்டர்:— உபநயனத்தை அதிக்ரமித்தவன் உத்தாலக மஹர்ஷியினால் கண்டுபிடிக்கப்பட்ட வ்ரதம் செய்து பிறகு உபநயனம் செய்துகொள்ளலாம். அச்வ மேத அவப்ருதஸ்னானம் செய்தால் பிறகு உபநயனம் செய்து கொள்ளலாம். அல்லது வ்ராத்யஸ்தோமம் செய்து பிறகு உபநயனம் செய்து கொள்ளலாம். உத்தாலகப் ப்ராயச்சித்தம் கஷ்டமானது. அதாவது இரண்டு மாதம் கஞ்சி ஆஹாரம், ஒரு மாதம் பால், பக்ஷம் ஆமிக்ஷா, எட்டு நாள் சுத்த உபவாஸம், ஆக நான்கு மாத காலத்தில் இந்த ப்ராயச்சித்தம் முடிகிறது. பிறகு உபநயனம் செய்யவேண்டும். ஆகையால் சீக்ரம் சொன்ன காலம் தாண்டாமல் உபநயனம் செய்யவும். ஆபஸ்தம்பரும் ப்ராயச்சித்தம் சொல்லி இருக்கிறார். பெரியோர்களை கலந்து ப்ராயச்சித்தம் செய்து கொள்ளவும். சிலர் நிறைய தக்ஷிணை தானம் செய்து செய்யலாம் என்று கூறுகிறார்கள்.

## 23. யக்ஞோபவீதம்.

மனு:— ப்ராம்மணனுக்கு பருத்தி பஞ்சால் செய்யப் பட்டதும், க்ஷத்ரியனுக்கு சணலினால் செய்யப்பட்டதும், வைச்யனுக்கு ஆட்டுரோமத்தினால் செய்யப் பட்டதும் யக்ஞோபவீதமாகும்.

உபவீதத்தை ஒம்பது நூல் உள்ளதாக செய்து மூன்று நூல்களை கீழாகவும் ஒம்பது நூல்களை மேலாகவும் முருக்கி செய்யவும். பிறகு முடிச்சு போட்டு உபவீதம் செய்யவேண்டும். பிறகு ப்ரதிஷ்டை செய்து தரித்துக் கொள்ளவேண்டும். நூற்ற நூலை — நான்கு விரல்களில் 96 தடவை மூன்றாக சுற்றினது ஷண்ணவதி எனப் படும். அதை அப்லிங்கமான ஆபோஹிஷ்டா — ஹிரண்ய வர்ணா:— பவமாந: என்ற மந்திரங்களினால் ப்ரோக்ஷித்து பிறகு காயத்ரியினால் த்ரிகுணிதம் மூன்றாக மடித்து முறுக்கி பிறகு உள்ளங்கையில் மூன்று தரம் அடித்து பிறகு ஆத்தி முடிச்சு போட்டு சுத்தமான இடத்தில் வைத்து நவதந்து தேவதைகள், க்ரந்தி தேவதைகள், இவர்களை ஆவாஹணம் செய்து பூஜித்து "உத்தயம்" என்ற மந்திரத்தினால் ஸூர்யனுக்கு காண்பித்து பிறகு "யக்ஞோபவீதம் என்ற மந்திரத்தினால் தரித்துக்கொள்ள வேண்டும். ஓங்காரம், அக்னி: பசு: ஸோம: பிதர: ப்ராஜபதி: விஷ்ணு: தர்ம: ஸகல தேவதா, இவர்கள் நவதந்து தேவதைகள். உபவீத ப்ரதிஷ்டை அநேக இடங்களில் சொல்லப்பட்டிருக்கிறது. கொஞ்சம் மாறுதல் இருக்கலாம். ஒன்றை அனுசரித்துச் செய்யவும்.

ப்ருகு:— உபவீதம் ப்ரம்மசாரிக்கு ஒன்று க்ருஹஸ்தன், வநஸ்தன் இவ்விருவருக்கும் இரண்டும், த்ரி

தண்டி ஸந்யாஸிகளுக்கு ஒன்றும் சாஸ்திரங்களில் தெரிவிக்கப்பட்டிருக்கிறது.

மூன்றாவது உபவீதம் உத்தரீயார்த்தம் தரித்துக் கொள்ளலாம். இது உத்தரீயம் இல்லாவிடில் தரிக்க வேண்டும்.

ப்ருகு:— எப்பொழுதும் உபவீதியாக இருக்க வேண்டும். அதேமாதிரி சிகையை முடிந்து கொண்டும் கர்மா செய்ய வேண்டும். குடுமி, உபவீதம்,இந்த இரண்டும் இல்லாமல் செய்தால் அது செய்ததாக சாஸ்திரம் ஸம்மதிக்காது. தேவதைகள் அங்கீகரிக்க மாட்டார்கள்.

வியாஸர்:— சிகை (குடுமி) யக்ஞோபவீதம் இல்லாமல் செய்த கார்யம் ராக்ஷஸமாகும். அதாவது, லோகத்திற்குக் கெடுதலை உண்டுபண்ணும், கர்த்தாவுக்கு கர்மா செய்த பலன் வராது.

ப்ருகு:— கால் செருப்பு — வஸ்திரம் — யக்ஞோபவீதம், பூஷணம், பூமாலை, சிறிய சொம்பு ஆசாரத்திற்காக உபயோகப்படுத்தியது, இவைகள் அவரவர்கள் உபயோகித்தை மற்றவர் உபயோகப்படுத்தக் கூடாது.

உபநயனம் ஆகி நான்கு நாள் தீக்ஷா, அதன் மத்தியில் தரித்த பூணல் அறுந்தோ, காணாமல் போனாலோ ஒருவ்யாஹ்ருதி ஹோமம் செய்து அனாக்ஞாத மந்திரம் சொல்லி மறுபடியும் யக்ஞோபவீதம் தரித்துக் கொள்ளவேண்டும்.

## 24. தண்டதாரணம்

மனு:— ப்ராம்மண ப்ரம்மசாரிக்கு — பில்வம் பாலாசம் , க்ஷத்ரியனுக்கு — ஆல் கருங்காலி வைச்யனுக்கு — அரசு அத்தி. இந்த மரங்களில் தண்டம் லக்ஷணத்துடன் க்ரஹித்து தரித்துக்கொள்ளவேண்டும். இரண்டு சொல்லப்பட்டிருக்கிறது. அதில் இஷ்டம் போல் ஒன்று க்ரஹிக்க வேண்டும்.

வியாஸர்:— சிரஸ்சு பர்யந்தம், நெற்றி, மூக்கு நுனி பர்யந்தம் மூன்று வர்ணத்தாருக்கும் தண்டம் அளவு குறிப்பிடப்பட்டிருக்கிறது. யூபம்போல் கொஞ்சம் அக்ரம் வளைந்து இருக்கவேண்டும். பட்டையுடனும், அழகாகவும் இருக்கவேண்டும் என்று சாஸ்திரம் கூறுகிறது.

## 25. வஸ்த்ர அஜினதாரணம்

வசிஷ்டர்:— ப்ராம்மண ப்ரம்மசாரிக்கு பருத்தி வஸ்திரமும், க்ஷத்ரிய ப்ரம்மசாரிக்கு மஞ்சிஷ்டா சாய மேறிய பட்டும், மஞ்சள் நிறமுள்ள கௌசேயம் வைச்ய ப்ரம்மசாரிக்கும் உத்தரீயமாக சொல்லப்பட்டிருக்கிறது.

உபநயனத்தில் ப்ரம்மசாரிக்கு கௌபீநம் முதலில், பிறகு புது வஸ்திரத்தை சுற்றிக் கட்டுவது, பிறகு க்ருஷ்ணாஜினம் உத்தரீயமாக போட்டுக் கொள்வது என்பது முறை.

கொஞ்சம் வெளுப்பாயும் தலைப்பு உள்ளதாயும் மற்றவர்களால் தரிக்கப்படாததாயும் இருக்கிற வஸ்திரத்

துக்கு அஹதவாஸம் என்று பெயர். இதை தரித்து எல்லா கர்மாக்களும் செய்யலாம். பரிசுத்தமானது.

கௌதமர்:— மூன்று ப்ரம்மசாரிகளுக்கும் க்ரமமாக க்ருஷ்ணாஜினம் — குருமான் அஜினம் — வெள்ளாட்டு அஜினம் உத்தரீயமாக தரித்து கொள்ளவேண்டும். (கிருஷ்ணாஜினம் என்பது க்ருஷ்ணம்ருகம் என்ற மானின் தோல்).

மனு:— முஞ்சப்புல்களால் திரிக்கப்பட்டதும் மூன்று பிறி உள்ளதும் ஸமமானதும் ம்ருதுவானதும் உள்ள மேகலை ப்ராம்மண ப்ரம்மசாரிக்கும், மூர்வா என்ற புல்களால் திரிக்கப்பட்ட நாண்கயிறு க்ஷத்ரிய ப்ரம்மசாரிக்கும், சணலினால் செய்யப்பட்ட மேகலை வைச்ய ப்ரம்மசாரிக்கும் மேகலையாகும். (மேகலை என்பது வஸ்திரத்திற்குமேல் இடுப்பில் தரித்துக்கொள்ளும் அரைஞாணுக்குப் பெயர்).

ஸ்வர்த்தர்:— மேகலையை தவிர கடிஸூத்ரம் தனியாக தரித்துக் கொள்ளவேண்டும். இது இல்லாமல் செய்கிற ஸ்மார்த்த கார்யங்கள் அல்லது அக்னி ஹோத்ரம் முதலிய ச்ரௌத கார்யங்கள் இரண்டும் பலனை கொடுக்காது. ஆகையால் அவச்யம் கடிஸூத்ரம் தரிக்கவேண்டும். இது க்ரஹஸ்தனுக்கும் சேர்த்துச் சொல்லப்பட்டது.

மனு:— மேகலை—மான்தோல்—தண்டம்— உபவீதம்— தீர்த்த பாத்ரம் இவைகள் ஜீர்ணமாகிவிட்டால் ஜலத்தில் த்யாகம் செய்து பிறகும் மந்திரம் சொல்லி புதியவைகளை க்ரஹித்துக் கொள்ளவும்.

### 26. ப்ரம்மசாரி தர்மங்கள்,

மனு:— தண்டம் தரித்து ஸூர்யனை ஸ்துதித்து அக்னியை ப்ரதக்ஷிணம் செய்து பிறகு நித்யம் பிக்ஷை எடுக்கவேண்டும்.

ப்ராம்மண ப்ரம்மசாரி பவதி பிக்ஷாம் தேஹி என்றும், க்ஷத்ரியன் பிக்ஷாம் பவதி தேஹி என்றும், வைச்யன் பிக்ஷாம் தேஹி பவதி என்றும் பிக்ஷை எடுக்கவேண்டும். பவதி— சப்தம் ஆதி—மத்யம்— அந்தம் என்ற க்ரமத்தில் இருக்கவேண்டும் என்று கருத்து.

மனு:— ப்ரம்மசாரியானவன் வேதாத்யயனம் செய்து கொண்டு நியமத்துடன் இருக்கவேண்டும் அவன் ஒரு வருடைய அன்னத்தையே போஜனம் செய்யக்கூடாது. அனேக ப்ராம்மண க்ருஹத்தில் தனக்கு வேண்டிய அளவு பிக்ஷை எடுத்து புஜிக்கவேண்டும். அப்படி செய்வது உபவாஸ ஸமமாக சொல்லப்படுகிறது.

மனு:— பிக்ஷை எடுத்து அன்னத்தை கபடம் இல்லா மல் குருவிடம் காண்பித்து, தெரிவித்து பிறகு கிழக்கு முகமாக ஆசமனம் செய்து சாப்பிடவேண்டும். குரு வெளியூர் சென்றிருந்தால் குரு பத்னி அல்லது குரு புத்ரன். தன்னுடன் வாசிக்கும் ஸஹகத்யாயீ இவர் களிடம் காண்பித்து புஜிக்கவேண்டும்.

வசிஷ்டர்:— எட்டு கபளங்கள் ஸன்யாஸிக்கும், பதினாறு கபளங்கள் வானப்ரஸ்தர்களும், முப்பத்தி ரண்டு க்ருஹஸ்தர்களும், ப்ரம்மசாரிகள் இஷ்டப்படி கபளங்களும் புஜிக்க வேண்டும்.

ஜைமினி:— ப்ரம்மோபதேசம் ஆகும்வரையில் ஸந்தியாவந்தனம் கிடையாது. ப்ரம்மோபதேசம் ஆனபிறகு மாத்யான்ஹிகம் முதல் காலத்ரய ஸந்தியாவந்தனம் அனுஷ்டிக்கவேண்டும்.

பிரம்மயக்ஞம் ப்ரம்மோபதேசம் ஆன மறுநாள் மாத்யான்ன காலத்தில் ஆரம்பிக்கவேண்டும். வேதம் சொல்லவேண்டிய இடத்தில் காயத்ரீயை ஜபிக்க வேண்டும்.

மனு:— கிராம எல்லை கடந்து ஸமித்துக்களை கொண்டு வந்து அவைகளை ஆகாயத்தில் பரணியில் வைத்து ப்ராதகாலத்திலும் ஸாயங்காலத்திலும் அக்னியில் ஸமிதாதானம் செய்யவேண்டும்.

ஆபஸ்தம்பர் ஸமித்துகளை ப்ரோக்ஷிக்காமல் அக்னியில் வைக்காதே என்று கூறுகிறார். ஆகையால் அக்னியில் ஹோமம் செய்யும் ஸமித்துக்களை ப்ரோக்ஷணம் செய்து ஸமிதாதானம் செய்யவேண்டும்.

மனு:— ப்ரம்மசாரியானவன் ஸமிதாதானம் — பிக்ஷா (கீழே) பூமியில் படுப்பது — (அதாவது கட்டிலில் படுக்கக்கூடாது என்பது கருத்து) — குருவுக்கு ஹிதமான கார்யங்களைச் செய்வது இவைகளை ஸமாவர்த்தனம் வரையில் செய்ய வேண்டும்.

ஆபஸ்தம்பர்:— ஜலத்தில் வாஸனாதி த்ரவ்யங்கள் தேய்த்துக் கொண்டு ஸ்னானம் செய்யக் கூடாது.

மனு:— குரு சொன்னாலும் சொல்லாவிட்டாலும் வேதாத்யயனத்தில் விசேஷ முயற்சி உள்ளவனாக

இருக்கவேண்டும். ஆசாரியனுக்கு பணிவிடை கார்யங்களிலும் விசேஷ சிரத்தையுடன் இருக்கவேண்டும்.

சரீரம், வாக்கு, ஞானேந்திரியங்கள் , மனது இவைகளை அடக்கிக் கொண்டு அஞ்சலி பந்தத்துடன் குரு முகத்தை பார்த்து நின்று கொண்டு அவர் சொல்லுகிற நல்ல விஷயங்களை க்ரஹித்துக் கொள்ள வேண்டும்.

எப்பொழுதும் குரு ஸந்நிதியில் மேல் வேஷ்டியை போர்த்திக் கொண்டு இருக்கக் கூடாது. நெற்றி இட்டுக் கொண்டு நல்ல ஆசாரத்துடன் இருக்கவேண்டும். குரு உட்காரவும் என்று சொன்னால் அவர் எதிரில் அடக்கமாக உட்காரவேண்டும். இந்தமாதிரி குருவை உபசரிக்க வேண்டும்.

குருவைப் பற்றி தப்பாக பேசும் இடத்திலும், நிந்தனை செய்யும் இடத்திலும் காதை மூடிக்கொள்ள வேண்டும். வேறு இடம் செல்லலாம்.

தேன், மாமிசம், தந்தம், மாலை, ரஸமுள்ள வஸ்துக்கள், ஸ்த்ரீகள், புளித்துப்போன பழைய பதார்த்தங்கள் இவைகளை வர்ஜிக்கவேண்டும். ப்ராணிகளை ஹிம்ஸிக்கக் கூடாது.வாசனை எண்ணெய் தேய்த்துக் கொள்வது, கண்ணுக்கு மை இட்டுக்கொள்வது, செருப் பணிவது, குடை தரித்துக் கொள்வது கூடாது. காமம், கோபம், பேராசை இவைகளை வர்ஜிக்கவேண்டும். நாட்டியம், பாட்டு, சூதாட்டம், அக்கப்போர் பேச்சு, பொய் சொல்வது, ஸ்திரீகளைப் பார்ப்பது, ஸ்பர்சனம், பிறருக்கு அபகாரம் இவைகளையும் வர்ஜிக்கவேண்டும். ப்ரம்மசாரி பகலில் தூங்கக் கூடாது.

ப்ரம்மசாரி வேதாத்யயனத்துடன் சாஸ்திரம் வாசிக்க வேண்டும். தர்ம சாஸ்திரம் – வ்யாகரணம் – மீமாம்ஸா, தர்க்கம், புராணம், இதிஹாஸம், பெரியோர்களுடைய சரிதம் இவைகளையும் தெரிந்துகொள்ள வேண்டும். (அவசியம் சாஸ்திரமும் வாசிக்க வேண்டும் என்பது கருத்து)

தேவவர்:— உபாத்யாயர், தகப்பனார், மூத்த ஸஹோதரன், ராஜா, மாமா, மாமனார், காப்பாற்றியவன், மாதாமஹர், பிதாமஹர், க்ஞாதியில் ச்ரேஷ்டர் தகப்பனாரின் ஸஹோதரர் இவர்கள் புருஷர்களில் குரு ஆவார்கள்.

தாயார், தாயாரின் தாயார், குருவின் பத்னீ, அப்பா அம்மாவுடைய ஸஹோதரிகள், மாமியார், அப்பாவின் அம்மா, மூத்த ஸஹோதரீ, வளர்த்தவள் இவர்கள் ஸ்த்ரீகளில் குரு ஆவார்கள்.

இந்தமாதிரி குருவர்கங்கள் தாயார் வழியிலும் தகப்பனார் வழியிலும் இரண்டு ப்ரகாரமாக சொல்லப் பட்டது. இவர்கள் விசேஷமாக பூஜிக்கத் தகுந்தவர்கள் ஐந்து பேர்கள் ரொம்ப ரொம்ப பூஜிக்கத் தகுந்தவர்கள்.

(1) தன்னை மதித்து கொண்டாடி கௌரவிப்பவர் (2) எவள் தன்னைப் பெற்றாளோ அந்தத் தாய் (3) எவராலே வித்தை உபதேசிக்கப்பட்டதோ அவர் (4) மூத்த ஸஹோதரர் (5) அன்னம்போட்டு ரக்ஷித்தவர் இந்த

ஐவரும் பூஜிக்க விசேஷ தகுதியுடையவர்கள் . இவர்களி லும் முதலில் கூறப்பட்ட மூவர் சிறந்தவர்கள். அதிலும் மாதா ரொம்ப ரொம்பச் சிறந்தவள். அவளு க்கு ஸமானம் கிடையாது.

மனு:— மாத்ரு பக்தியினால் பூலோகத்தையும் பித்ரு பக்தியினால் அந்தரிக்ஷலோகத்தையும் ஆசார்ய சுச்ருஷையினால் ப்ரம்ம லோகத்தையும் ஜயித்து அனுபவிக்கிறான்.

புத்ரனைப் பெற்று வளர்த்து, உபநயனம் செய்து, வேதம் சொல்லிவைத்து, ஜீவனத்துக்கு சொத்தைக் கொடுத்த தகப்பனார் மஹா குரு என்று சொல்லப் படுகிறது.

வ்யாசர்:— பத்து மாதம் வயிற்றில் இடம் கொடுத்து தரித்து, வலியினாலும் வேதனையாலும் அனேக துக்கங் களை அனுபவித்து, புத்ரனைப் பெற்றவள் தாயார். தான் கஷ்டப்பட்டு ஸகல ஸௌக்யங்களையும் குழந்தைக்கு அர்ப்பணம் செய்கிறாள் தாயார். அந்த தாயாருக்கு யாராலும் எதைச் செய்தாலும் செய்த கார்யம் அவளுடைய சிரமத்திற்கும் நம்மிடம் வைத்த வாத்ஸல்யத்திற்கும் ஈடாகாது.

மனு:— பணம் காசு உள்ளவர், பந்து, வயதானவர் கள், யாகாதி கர்மாக்கள் செய்தவர், உயர்ந்த வித்தையை அடைந்தவர் இவர்கள் பூஜ்யர்கள். இதிலும் மேலும் மேலும் உள்ளவர்கள் பூஜ்யர்கள். எல்லாவற்றைக் காட்டிலும் வித்தையினால் சிறந்தவர் ரொம்பப் பெரியவர்.

போதாயனர்:— ப்ராம்மணன் , ராஜா, குருடன், பசு, வயதானவன், பாரம் வஹிக்கிறவன், கர்பிணீ, பலமில்லா தவன் இவர்கள் எதிரில் வந்தால் உடனே வழிவிட வேண்டும்.

மனு:— பெரியோர்களைக் கண்டால் உடனே நமஸ் காரம் செய்யவேண்டும். அந்தமாதிரி நமஸ்காரம் செய்து பெரியோர்களை ஸேவிப்பவனுக்கு ஆயுஸ், புத்தி, புகழ், பலம் இவைகள் வ்ருத்தி அடைகின்றன.

உபஸ்ங்க்ரஹணம் என்பது குரு ஸமீபத்தில் நமஸ் கரித்து, தான் இந்த கோத்ரத்தில் பிறந்தவன், தேவுதத் தன் என்று பெயருள்ளவன், நமஸ்கரிக்கிறேன் என்று சொல்லி, காதுகளைத் தொட்டு பிறகு தன்னுடைய வலது கையினால் வலது காலையும் இடது கையினால் இடது காலையும் தொட்டுக்கொண்டு சிரஸினால் குனிந்து இருப்பது. இது குருவுக்குத் தான் செய்ய வேண்டும். குருவுக்கு ஸமமானவர்களையும் உபஸங்க்ர ஹிக்கலாம்.

நமஸ்காரத்தை பெற்றுக் கொண்ட பெரியோர்கள் மேற்கொண்டவாறு மூன்று மாத்ரா காலம் ப்லுதஸ் வரம் சொல்லி ஆசீர்வதிக்கவேண்டும். இந்த மாதிரி வெகு தர்மங்கள் ப்ரம்மசாரிக்கு சொல்லப்பட்டிருக் கின்றன. இந்த முதல் ஆச்ரமத்தில் நல்ல சிக்ஷை அடைந்தவன் பிற்காலத்தில் ரொம்ப உயர்ந்தவனாக விளங்குவான்.

### 27. உபநயனம் செய்து வைக்கிறவர்கள் தர்மங்கள்.

பாஸ்கரர்:— விவாஹத்தில் முடிந்த அளவில் ப்ராம்மண போஜனம் செய்துவைக்கவேண்டும். ஆதானத்தில் 100ம், உபநயனத்தில் 100ம் ப்ராம்மண- போஜனம் செய்யவேண்டும். சௌகரியமில்லாவிடில் முடிந்த அளவில் போஜனம் செய்விக்கலாம். ஆக உபநயனத்திற்கு ப்ராம்மண போஜனம் அவசியம்.

ஆபஸ்தம்பர்:— விஷயம் தெரியாதவன் உபநயனம் செய்துவிப்பானேயானால் உபநயனம் செய்துகொண்டவடுவும், உபநயனம் செய்வித்தவனும் இரண்டு பேரும் இருட்டிலிருந்து இருட்டுக்குச் செல்வதுபோல் ஆகும். ஆகையால் ஆசாரமில்லாதவன் வேதம் முதலிய படிப்பு இல்லாதவன் உபநயனம் செய்து வைக்கக்கூடாது. நல்ல அடக்கமுள்ளவனும் உபநயனம் செய்ய அதிகாரியாகிறான்.

இரட்டையாக பிறந்தவர்களுக்கு, இரண்டு குமாரர்களுக்கும் ஜாதகர்மா முதல் உபநயனம் வரையில் உள்ள கார்யங்கள் ஒரே லக்னம் ஒரு நாளில் சேர்த்து செய்யவேண்டும். உபநயனம் ஒரே லக்னத்தில் சேர்த்து செய்ய முடியாததால் மற்றவரைக் கொண்டு அதே லக்னத்தில் செய்யலாம்.

ஊமை, ஊருவாயன், உன்மத்தன், நொண்டி, இவர்களுக்கும் உபநயனம் முதலிய ஸமஸ்காரங்கள் உண்டு. ஊமை, சித்தப்ரமம் உள்ளவர்களுக்கு ஆசார்யனே எல்லா கார்யங்களும் செய்து பிறகு காயத்ரீயை ஜபித்துக்

கொண்டு இவர்களைப் பார்க்கவும். பாக்கி உள்ளவர் சரியாக செய்து கொள்ளலாம். ஆனால் இவர்கள் பிறர் காரியங்களுக்கு உபயோகப்பட மாட்டார்கள். யாகாதி களில் அதிகாரம் கிடையாது என்பது கருத்து.

## 28. உபாகர்மா.

உபாகர்மா என்பது க்ருஹஸ்தர்கள் ப்ரம்மசாரிகள் எல்லோரும் செய்ய வேண்டிய கார்யமாகும். உபா கர்மா உத்ஸர்ஜனம் என்ற இந்த இரண்டு காரியங் களும் தான் அத்யயனம் செய்த வேத மந்திரங்கள் வீர்யத்துடன் ப்ரகா சிப்பதற்காக செய்யவேண்டிய கார்யங்கள். வீர்யமுள்ள மந்திரங்களால் செய்யப்பட்ட கர்மா நமக்கு க்ஷேம லாபங்களைக் கொடுக்கும். நாம் அடிக்கடி மந்திரங்களை கர்மாக்களில் உபயோகப் படுத்துவதாலும் நியமலோபத்தாலும் மந்திரங்களுக்கு வீர்யம் குறையும். அதை யாதயாமமாகிவிடும் என்பார் கள். ஆகையால் மந்திரங்களுக்கு அயாதயாமத்வஸி த்யர்த்தம் உபாகர்மா—உத்ஸர்ஜனம் செய்ய வேண்டும் என்பது கருத்து.

காத்யாயனர்:— பிரதி வருஷம் ப்ராம்மணர்களால் செய்யப்படுகிற உபாகர்மா உத்ஸர்ஜனத்தால் அத்யய னம் செய்த வேத பாகங்களுக்கு மறுபடியும் உயர்ந்த வீர்யம் புஷ்டி ஏற்படும்.

கார்க்கியர்:— க்ருஷ்ண யஜுர்வேதிகள் சிராவண மாஸத்தில் உதயவ்யாப்தியான பௌர்ணமியிலும், ருக் வேதிகள் சிராவண மாஸசிரவண நக்ஷத்திரத்திலும், உபாகர்மா செய்ய வேண்டும். செய்யும் தினத்தில்

கிரஹணம், ஸங்க்ரமணம் சம்பவிக்காமல் இருக்க வேண்டும். இவைகள் ஸம்பவித்தால் அந்த தினத்தில் உபாகர்மா செய்யக்கூடாது என்பது கருத்து.

தைத்ரீய சாகை கிருஷ்ண யஜுர் வேதம் அத்ய யனம் செய்த கிருஷ்ண யஜுர் வேதிகள் சிராவண பூர்ணிமையில் உதயவ்யாப்தியுடன் கூடின பூர்ணிமை யில் சிராவணம் செய்ய வேண்டும். ருக்வேதிகள் சிரவண நக்ஷத்திரத்திலும், ஸாமவேதிகள் ஹஸ்த நக்ஷத்திரத்தி லும் உபாகர்மா செய்ய வேண்டும்.

கிருஷ்ண யஜுர் வேதிகளுக்கு பூர்ணிமா உதயத்தி லிருந்து ஸங்கவ காலத்திற்கு பிறகு மாத்யான்ன காலத் திலும் வ்யாப்தி இருக்க வேண்டும். அதற்கு தான் ஔதயிகீ என்று பெயர்.

பூர்ணிமையும் பிரதமையும் ஸங்க காலத்திற்கு பிறகு (12 நாழிகைக்கு பிறகு) மத்யான்னத்தினுடைய முன்பு சேருமேயானால் அன்றைய தினமே உபாகர்மா –(காயத்ரீ ஜபம்) காயத்ரீ ஸமித் ஹோமம் இந்த இரண்டையும் செய்ய வேண்டும். ஸங்க காலத்திற்கு முன்பு பூர்ணிமையும் பிரதமையும் சேருமேயானால் முதல் நாள் உபகர்மா, மறுநாள் காயத்ரீ ஸமிதா தானம் செய்ய வேண்டும் என்பது ஸ்மருதியில் கூறப் படுகிறது.

உதய கால வ்யாப்தி உள்ள சிரவண நக்ஷத்திரத்தில் ருக்வேதிகள் உபாகர்மா செய்ய வேண்டும். ஸங்ககாலத் திற்கு மேல் வ்யாப்தி உள்ள பூர்ணிமையில் யஜுர் வேதிகள் உபாகர்மா செய்யவேண்டும். அதேமாதிரி

உதயத்திலிருந்து 12 நாழிகைக்குமேல் வ்யாப்தி உள்ள ஹஸ்த நக்ஷத்திரத்தில் பாத்ரபதமாதத்தில் ஸாம வேதிகள் உபாகர்மா செய்ய வேண்டும்.

ஸிம்மபாத்ரபதம் மௌட்யாதி தோஷ தூஷிதமாக இருந்தால் கன்யாமாத க்ருஷ்ண பக்ஷத்தில் ஸாயங் காலத்தில் ஆறு நாழி வ்யாப்தி உள்ள ஹஸ்த நக்ஷத் திரத்தில் உபாகர்மா செய்யவேண்டும்.

ருக்வேதத்திற்கு குரு சாகாதீசன், யஜுஸ்சுக்கு சுக்ரனும், ஸாமவேதத்திற்கு அங்காரகனும், அதர்வ வேதத்திற்கு புதனும் சாகாதீசன் ஆவார்கள். ஆகையால் அந்த அந்த சாகாதீசன் பலமாக இருக்கும்பொழுது உபாகர்மா செய்யவேண்டும். சாகாதி பதி மௌட்யதோஷத் துடன் இருக்கும்பொழுதும், கிரஹணமும் ஸங்கர மணமும் ஸம்பந்தப்பட்டாலும் உபாகர்மா செய்யக் கூடாது.

யஜுர் வேதிகளுக்கு சிராவண பூர்ணிமா உபாகர் மாவுக்கு முக்கிய காலம். அது தோஷ யுக்தமாக இருந் தால் ஆஷாட பூர்ணிமையில் உபாகர்மா செய்யவும், அதிலும் தோஷ மிருந்தால் சிராவண பூர்ணிமையில் எந்த எந்த தோஷ மிருக்கிறதோ அதை உத்தேசித்து சாந்தி செய்து உபாகர்மா செய்யவேண்டும்.

ருக்வேதிகள் சிராவண மாஸசிரவண நக்ஷத்ரத்தில் உபாகர்மா செய்ய வேண்டும். அதில் தோஷங்கள் ஸம்ப வித்தால், சிராவண மாஸத்தில் ஹஸ்த நக்ஷத்திரம் கூடிய பஞ்சமியில் செய்யவேண்டும்.

சுக்ல யஜுர்வேதிகள் சிராவண மாஸ பூர்ணிமை யில் உபாகர்மா செய்யவேண்டும். அது தோஷயுக்த மாக இருந்தால் சிரவண நக்ஷத்திரத்தில் அதே மாதத் தில் உபாகர்மா செய்யலாம்; அல்லது ஹஸ்த நக்ஷத்ரம் கூடிய பஞ்சமியிலாவது சுத்த பஞ்சமியிலா வது, சுத்த ஹஸ்தத்திலாவது உபாகர்மா செய்யலாம். பாத்ரபத பௌர்ணமியிலும் செய்யலாம். குலாசாரப்படி செய்ய வும்.

ப்ரம்மசாரிகள் க்ஷௌரம் செய்து கொண்டு உபாகர்மா செய்யவேண்டும். புஷ்ய மாத பூர்ணிமையில் யஜுர் வேதிகள் உத்ஸர்ஜனம் செய்யவேண்டும். சௌகரிய மில்லாவிடில் மாக மாதத்திலும் உத்ஸர்ஜனம் செய்ய லாம்.

சாண்டில்யர்:— ஈரவேஷ்டியுடன் உபாகர்மாவும் மற்ற எந்த கர்மாவும் செய்யக்கூடாது. அப்படிச் செய் தால் அது, ராக்ஷஸமெனச் சொல்லப்படுகிறது. உபா கர்மாவில் அவசியம் புது உபவீதம் முதலியது தரிக்க வேண்டும். அதாவது உபவீதம், புது வஸ்திரம், ப்ரம் மசாரி புது மேகலை கிருஷ்ணாஜினம், தண்டம் இவைகளைத் தரித்துக் கொண்டு செய்யவேண்டும்.

### 29. விவாஹம்.

வ்யாஸர்:— குருவினுடைய ஸமீபத்தில் வஸித்து, பணிவிடைசெய்து முறைப்படி வேதம் வேதார்த்தம் —சாஸ்த்திரம் இவைகளை க்ரமமாக அப்யஸித்து — வேதவ்ரதமான ப்ராஜாபத்ய,ஸௌம்ய, ஆக்னேய, வைச்வதேவ, என்ற நான்கு வ்ரதங்களையும் அனுஷ்

டித்து, குருவுக்கு கோ முதலிய தக்ஷிணை கொடுத்து, சக்தி இல்லாவிடில் அவருடைய அனுமதியைப் பெற்று ஸமாவர்த்தனம் செய்து கொண்டு கன்னிகையை உத்வாஹம் (விவாஹம்) செய்து கொள்ளவும். வைராக்யமிருக்குமேயானால் ஸன்யாஸம் செய்து கொள்ளலாம்.

நைஷ்டிக பிரம்மசாரி— உபகுர்வாண பிரம்மசாரீ என்று இரண்டுவித பிரம்மசாரிகள். இதில் நைஷ்டிக பிரம்மசர்யம் கலியில் நிஷேதிக்கப்பட்டிருக்கிறது. ஆகையால் அவர்களுடைய தர்மங்கள் இவ்விடம் குறிப்பிடவில்லை. உபகுர்வாண பிரம்மசாரி என்பவர் ஆச்ரமத்தை முடித்துக் கொண்டு கல்யாணம் செய்து கொண்டு க்ருஹஸ்தனாக விரும்புகிறவர் ஆவார்.

வ்யாஸர்:— ஸமாவர்தனம் செய்துகொண்டவன் லக்ஷணம் சொல்லப்படுகிறது. ஸமாவாத்தனம் செய்து கொண்ட ஸ்னாதகர் மூங்கில் தண்டம் தரித்துக் கொண்டு பஞ்சகச்சம் உத்தரீயம் தரித்து, இரண்டு உபவீதம் தரித்து, தீர்த்தப் பாத்ரம், குடை, தலைப் பாகை, பாதுகை—செருப்பு, காதுக்கு தங்க குண்டலம், தர்ப்ப முஷ்டி, இவைகளை தரித்துக் கொண்டு இருக்கவேண்டும். நன்றாக கேசம் நகம் இவைகளை வபனம் செய்துகொண்டு, புஷ்பமாலை தரித்து, வேதம் சொல்லிக் கொண்டு, வெளுப்பு வஸ்திரம் தரித்துக் கொண்டு இருக்கவேண்டும். ஸ்நான கர்மா தற்சமயம் தூஷ்ணீமாக, மந்திரமில்லாமல் செய்கிறோம். இப்படி ஒரு முறை இருக்கிறது, மந்திரங்கள் சொல்லி ஹோமங்கள் செய்து மேல் சொன்ன ஆபரணங்கள் தரிக்க வேண்டும். இந்தவிதானத்தை சிலபேர்கள் மட்டும் அனுஷ்டிக்கிறார்கள்.

தக்ஷன்:— ஸ்நான கர்மாவை விவாஹம் தீர்மானம் செய்து கொண்டு செய்கிறோம். அதற்கு காரணம், ஸ்னான கர்மா செய்துகொண்டால் அனாச்ரமீயா கிறான். அனாச்ரமீயாக ஒரு நாள், அல்லது ஒரு பகல்கூட தாண்டக்கூடாது என்பது கருத்து. அநேக மாக ஸ்னான கர்மா தூஷ்ணீமாக செய்வதால், அப் பொழுதே, அதாவது அந்த பகல்வேளையிலேயே விவாஹம் நடத்துகிறோம். விவாஹ காலங்களில் மாப்பிள்ளை பரதேசிகோலம் வருகிறார் என்று கூறு கிறோம். அது சமயம் செய்துகொள்ளும் அலங் காரங்கள் ஸ்னாதகனுடைய லக்ஷணம் என்று அறியவும்.

மனு:— ப்ராம்மம், தைவம், ஆர்ஷம், ப்ராஜாபத்யம், ஆஸுரம், காந்தர்வம், ராக்ஷஸம், பைசாசம் என்று எட்டு விதமாக விவாஹங்கள் சாஸ்திரங்களில் கூறப் படுகிறது என்றும் மனு தெரிவிக்கிறார். இவைகளுக்கு தனித்தனியாகவே லக்ஷணம் சொல்லுகிறார். ஆனால் நடைமுறையில் ப்ராம்ம விவாஹம் மட்டும் அனுஷ் டிக்கப்படுகிறது. இவைகளில் முதல் நான்கு வித விவாஹங்கள் ச்லாக்யமானவை.

மனு:— வேத சாஸ்திரங்கள் படித்தவனாயும் நல்ல வம்சத்தில் பிறந்து நற்குணங்களுடன் ப்ரகாசிக்கிற வனாயும் இருக்கிற ப்ரம்மசாரியை அழைத்து பூஜித்து வஸ்திரங்கள் கொடுத்து, அலங்காரத்துடன் கூடிய கன்னிகையை தானம் செய்வது ப்ராம்ம விவாஹம் என்று சொல்லப்படுகிறது.

ப்ராம்ம விவாஹம் செய்துகொண்டு அதனால் ஸம்பவித்த புத்ரன் தனக்கு முன்பு பிறந்த பத்து வம்சத்

தார்களையும், தனக்கு பின்பு பிறக்கும் பத்து வம்சத் தார்களையும், தன்னையும் சேர்த்து ஆக 21 தலை முறை ஸம்பந்தப்பட்டவர்களுடைய பாபங்களைப் போக்கி காப்பாற்றுகிறான். ஆகையால் ப்ராம்ம விவா ஹம் பித்ருக்களுக்கு ப்ரீதியைக் கொடுக்க வல்லமை உள்ளது என்பது கருத்து.

யாகத்தில் தக்ஷிணைகள் கொடுக்கும் ஸமயத்தில், வேதியின் நடுபாகத்தில் ருத்விக்கு தக்ஷிணையுடன் கன்னிகையை தானம் செய்வது தைவம் என்ற விவாஹமாகும்.

ஒரு பசு ஒரு காளை மாடு இவைகளை, தர்மத்தை உத்தேசித்துப் பெற்றுக் கொண்டு, கன்யா பிதா தன் கன்னிகையை நல்ல வரனுக்கு தானம் செய்வது ஆர்ஷ விவாஹம் என்று கூறப்படுகிறது.

நல்லவரனை பூஜித்து, அலங்காரத்துடன் கூடிய கன்னிகையை தானம் செய்து, பிறகு கன்யா பிதா வானவர் நீங்கள் இருவரும் எப்பொழுதும் தர்மங்களை அனுஷ்டித்துக் கொண்டு இருக்கவும் என்று வாக்கி னால் சொல்லி செய்யும் விவாஹம் ப்ராஜா பத்யம் என்று கூறப்படுகிறது.

ப்ராம்மம், தைவம், ஆர்ஷம், ப்ராஜாபத்யம் என்ற நான்கு விவாஹங்கள் தர்மத்தை அடிப்படையாகக் கொண்டவை. இவைகளில் பிறந்த ஸந்ததிகள் நல்ல படிப்பு உள்ளவர்களாயும், ஆசார சீலர்களாயும், பெரி யோர்களால் ச்லாகிக்கத் தகுந்தவர்களாயும் இருப்பார் கள்.

நல்ல பலம், சீலம், ரூபம், தனம், புகழ், பூர்ண மான இல்லரவாழ்க்கையின் சுகங்கள், தர்ம கார்யங் களில் ச்ரத்தை, தீர்க்கமான ஆயுஸ்சு இவைகளும் மேலே சொன்ன விவாஹங்களில் ஸம்பவித்த ஸந்ததி களுக்கு ஏற்படும். ஆகையால் முதல் நான்கு விவா ஹங்கள் தார்மீகமானவை.

மற்ற விவாஹங்கள், அனுலோமப்ரதிலோம ஸங்கர ஜாதிகளுக்குப் ப்ரியமானவை. அவைகளில் பிறக்கும் ஸந்ததிகள் க்ரூரர்களாயும், பொய் பேசுகிறவர்களாயும், வைதிக கார்யங்களில் த்வேஷமுள்ளவர்களாயும் இருப் பார்கள். ஆகையால் சாஸ்திரங்களில் நிந்தை செய்த விவாஹத்தைச் செய்யக்கூடாது. செய்தால் நல்ல ஸந்ததிகள் ஏற்படாது. அவைகளால் லோகங்களுக்கு க்ஷேம லாபங்கள் கெட்டுவிடும் என்பது கருத்து.

யாக்ஞவல்க்யர்:— விதி முறையை அனுசரித்து ப்ரம் மசர்யத்தை அனுஷ்டித்து, ப்ரம்மசாரியானவன் லக்ஷண மான கன்னிகையை விவாஹம் செய்துகொள்ள வேண்டும். கன்னிகை லக்ஷணம் சொல்லப்படுகிறது. முன் வேறு புருஷனால் க்ரஹிக்கபடாதவளாயும், மனதுக்கு உகந்தவாளாயும், ஸபிண்டை இல்லாத வாளாயும்,ரோகமில்லாதவளாயும், அண்ணா தம்பி யுடன் கூடினவளாயும், ஸமானகோத்ரம், ஸமான ப்ரவரம் இல்லாதவளாயும் (அதாவது—புருஷ கோத் ரத்தைக் காட்டிலும் வேறு கோத்ரத்தில் பிறந்தவள் என்று பொருள். தவிர, வேறு கோத்ரத்திலும் புருஷ கோத்ரத்தில் உள்ள ரிஷிகளில் ஒரு ரிஷி ஸ்த்ரீ கோத்ரத்தில் காணப்பட்டால் ஸமான ப்ரவரம் என்று சொல்லப்படுகிறது. அந்த மாதிரி உள்ள கன்னி

கையையும் விவாஹம் செய்துகொள்ளக் கூடாது என்பது கருத்து) மாதா வம்சத்தில் 5க்கு மேலும், பிதா வம்சத்தில் 7க்கு மேலும் ஜனித்தவளாயும் இருக்கிற கன்னிகையை விவாஹம் செய்துகொள்ள வேண்டும்.

சாதாதபர்:— ஹம்ஸம் போன்ற குரல் உள்ளவளாயும், மேகம் போன்ற நிறம் உள்ளவளாயும், தேன் போன்ற கண்ணுடையவளாயும் இருக்கிற கன்னிகையை விவாஹம் செய்து கொண்டிருப்பவன் க்ஷேம லாபங்களை அடைந்து வ்ருத்தி அடைவான்.

விஷ்ணு:— குதிரையை அதன் பிதாவைப் பார்த்தும், கன்னிகையை தாயாரைப் பார்த்தும், பூமியை செழிப்பான புல்லைப் பார்த்தும், குலத்தை ஆசாரத்தைப் பார்த்தும் க்ரஹிக்க வேண்டும். ஆகையால் ஆசாரம், அத்யயன ஸம்பத்து உள்ள க்ருஹத்தில் பெண்ணை க்ரஹிக்கவேண்டும் என்பது கருத்து.

யமன்:— நல்ல குலம், சீலம், நன்நடத்தை, சரீரம், வயது, படிப்பு, பந்துக்கள், பணம் காசு இவைகளைப் பார்த்து கன்யா பிதா பெண்ணை கல்யாணம் செய்து கொடுக்கவேண்டும். பிறகு ஏற்படுவது நல்லதாகத் தான் இருக்கும், அதை நாம் சிந்திக்க வேண்டியது இல்லை, பகவததீனம்.

ஆபஸ்தம்பர்:— பந்துக்கள், நன்னடத்தை இவைகளுடன் கூடிய படிப்பு, வியாதியின்மை இது வரஸம்பத்து ஆகும்.

விஷ்ணு:— கல்யாணத்தில் வரன் நல்ல குலத்தில் பிறந்தவனாக இருக்க வேண்டும். அப்படி இருந்தால் நல்ல குணமுள்ளவனாக இருப்பான் என்பது கருத்து. கன்யாதானத்திலும் சிராத்தத்திலும் படிப்பு இவைகளை வேண்டாம் என்று சொல்லவில்லை; குணம் முக்யம். அவைகள் இல்லாவிடில் எதுவும் உபயோகப் படாது. நல்ல குலம், குணம் இருந்தால் ஏழையாக இருந்தாலும் பெண்ணைக் கொடுக்கலாம் என்று தாத்பர்யம்.

ஸம்வர்த்தர்:— எட்டு வயது ஆன பெண்ணுக்கு கௌரீ என்றும், ஒன்பது வயது ஆனவளுக்கு ரோஹிணீ என்றும், பத்து வயது ஆனவளுக்கு கன்யை என்றும் அதற்கு பிறகு ரஜஸ்வலை என்றும் சொல்லு கிறார். அதாவது எட்டாவது வயதில் பெண்ணுக்கு விவாஹம் முக்ய காலம். பிறகு பத்து வயது பர்யந்த மும் விவாஹம் செய்யலாம். அதற்கு மேல் தாண்டு வது உசிதமில்லை என்று கருத்து. கௌரியை விவா ஹம் செய்து கொடுத்தவனுக்கு ஸ்வர்க்கலோகம், ரோஹிணியை கல்யாணம் செய்து கொடுத்தவனுக்கு ப்ரம்ம லோகம், பிறகு காலம் தள்ளிப் போனால் நரகம் கிடைக்கும் என்று கூறப்படுகிறது.

யமன்:— உபநயனத்திற்கு முக்ய காலம் கர்பாஷ் டமமாகும். பிறப்பிலிருந்து எட்டாவது வயதும் விவா ஹத்துக்கு யோக்யமான காலம். ஆகையால் ஸ்திரீகளு க்கு விவாஹம் உபநயனஸ்நானம்; ஸ்திரீகள் அவசியம் விவாஹம் செய்து கொள்ள வேண்டும். அப்படி செய்து கொள்ளாவிடில் எந்த புண்ய கார்யத்திற்கும் அர்ஹதை இல்லை என்று சொல்லுவார்கள்.

பெண்ணுக்குப் பொறுப்பு உள்ளவர்கள் காலத்தில் விவாஹம் செய்ய வில்லையேயானால் நரகத்தை அடைவார்கள்; அப்படி பொறுப்பு உள்ளவர்கள் மாதா, பிதா, மூத்த ஸகோதரன் ஆவார்கள். ருதுமதீயான பெண்ணுக்கு பரிஹாரம் செய்து கல்யாணம் செய்ய வேண்டும்.

## 30. வேறு வழியில்லாமையால் செய்யும் ருதுமதீப்ராயசித்தம்.

சௌனகர்:— ருதுமதீ விவாஹ விஷயத்தில் சௌனகர் பரிஹாரம் சொல்லுகிறார். கன்னிகைக்கு விவாஹம் செய்து கொடுக்கும்' பிதா விவாஹம் செய்வதற்குள் எவ்வளவு ருது ஆகி இருக்கிறதோ அதை எண்ணிப் பார்த்து ஒரு ருதுவுக்கு ஒரு கோ(பசு) என்று ருதுஸங்கியையை அனுசரித்து பசுக்கள் தானம் செய்யவேண்டும். வசதியில்லாவிடில் ஒரு பசுவாவது தானம் செய்யவேண்டும். அதற்கும் வசதியில்லாவிடில் ருதுஸங்கியை அனுசரித்து தக்ஷிணை கொடுத்து ப்ராம்மணாளுக்கு போஜனம் செய்து வைக்கவேண்டும். இது கன்யாபிதா செய்யவேண்டிய காரியம். விவாஹம் செய்துகொள்ளும் கன்னிகை மூன்று நாள் உபவாஸம் இருந்து சிகப்பு ரத்னத்தை ஐந்து வயதுக்குள்பட்ட பெண்ணுக்கு தானம் செய்யவேண்டும். கல்யாணம் செய்து கொள்ளுகிற வரன் வ்ரதஸமாவர்த்தனம் செய்துகொண்டு கூச்மாண்ட ஹோமம் ஒரு தடவை செய்யவேண்டும். இப்படி மூன்று பேர்களுக்கும் பரிஹாரம் சொல்லப்பட்டிருக்கிறது.

கூச்மாண்ட ஹோமம் விவாஹத்திற்கு முன்பு செய்யவேண்டும். அப்பொழுதுதான் அந்தப் பெண்ணை கல்யாணம் பண்ணிக் கொள்ள யோக்யதை வருகிறது; வ்ருஷளீபதித்வ தோஷமும் ஏற்படாது. விவாஹம் ஆனபிறகு செய்தால் வ்ருஷளீ பதித்வ தோஷத்தை பரிஹரிக்க முடியாது.

## 31. விவாஹத்தில் சில பொது விதிகள்

கர்கர்:— ஒரு தாயின் வயிற்றில் பிறந்தவர்களுக்கு ஒரு வருஷத்தில் விவாஹம் செய்யக் கூடாது. ஆனால் 6 மாதம் சென்ற பிறகு செய்யலாம். ஒரே வீட்டில் செய்யக்கூடாது என்பது கருத்து. சில ரிஷிகள் வேறு மாதங்களில் செய்யலாம் என்று சொல்லுகிறார்கள். லக்ன பேதமிருந்தாலும் ஒரே நாளில் சுபகார்யங்கள் செய்யலாம் என்று சிலர் கூறுகிறார்கள்.

ஆகையால் தேசா சாரத்தையும் குலாசாரத்தையும் அனுசரித்து சுபகார்யங்கள் செய்யவும்.

அத்ரி:— ஜன்ம நக்ஷத்திரத்திலும் ஜன்ம மாஸத்திலும் ஜன்ம வாரத்திலும் சுபகார்யம் உபநயன விவாஹாதிகள் செய்யக் கூடாது. ஜ்யேஷ்ட மாஸத்தில் மூத்த பெண், மூத்த புத்ரன் இவர்களுக்கு சுப காரியங்களை வர்ஜிக்கவேண்டும்.

வ்யாசர்:— பகவான் வாசுதேவன் தூங்கும் காலமான ஆஷாடத்திலிருந்து கார்த்திகை பர்யந்தம் உபநயனம் – விவாஹம் செய்யக் கூடாது. வேறு உத்ஸவகார்யங்களும் செய்யக் கூடாது.

தேவலர்:— தேவர்களுக்கு உத்ஸவம் ஆரம்பித்த பிறகு மனுஷ்ய சுபகாரியங்கள் அந்த கிராமத்தில் செய்யக்கூடாது.

ஸ்கந்தர்:— நாம கோத்ரங்களைச் சொல்லி கிழக்கு முகமாக இருந்துகொண்டு தீர்த்த பூர்வமாய் வடக்கு முகமாக இருக்கும் வரனுக்கு வயசில் சிறியவளான பெண்ணை தானம் செய்யவேண்டும்.

கல்யாண காலத்தில் ஔபாஸனம் ஆரம்பிப்பதற்கு முன் அக்னி அணைந்தால் புனர் விவாஹம் செய்து கொள்ள வேண்டும். இது விவாஹ காலத்தில் சொன்னோம். பிறகு ஔபாஸனம் செய்யும் காலத்தில் அக்னி அணைந்தால் ப்ராயச்சித்தாஹுதி செய்தால் போதும். புனர் விவாஹம் என்றால் விவாஹ மந்திரங்களைப் படிப்பது என்பதாகும்.

ராத்ரியில் ஆக்னேய ஸ்தாலீ பாகம் செய்து ஔபாஸனம் ஆரம்பிக்க வேண்டும். ஒன்பது நாழிகைக்குள் ஆரம்பிக்கவேண்டும். கல்யாணம் நான்கு தினம் அனுஷ்டிக்க வேண்டும். அதாவது ப்ரவிச்ய ஹோமம் வரனுடைய க்ருஹத்தில் செய்யவேண்டும். அதிலிருந்து நான்கு நாள் சொல்லப்பட்டிருக்கிறது. நான்காவது நாள் பின் ராத்திரியில் சேஷஹோமம் செய்யவேண்டும். பிறகு அதே அக்னியில் ஸ்தாலீபாகம் செய்யவேண்டும்.

ஸ்தாலீபாகம் செய்யாமல் (2 மாதம்) ஒரு ருது ஆகிவிட்டால் அக்னி லௌகிகமாகிவிடும். ஔபாஸனாக்னி என்று கூறமுடியாமல் போய்விடும் என்பது கருத்து. பூர்ணிமாஸ ஸ்தாலீபாகம் முதலில் செய்யவேண்டும்.

பிறகு தர்ச ஸ்தாலீபாகம். இரண்டையும் முக்ய காலத்தில், க்ருஷ்ண சுக்ல ப்ரதமைகளில் செய்ய வேண்டும்.

கர்கர்:— மூத்த ஸகோதரன் இருக்கும்பொழுது அடுத்தவன் விவாஹம் செய்துகொள்ளக்கூடாது. அதேமாதிரி ஆதானமும் செய்யக்கூடாது.

யாக்ஞ்யவல்கியர்:— விவாஹம் செய்து கொள்ளு வதால் புத்ர பௌத்ரன் முதலிய வம்ச வ்ருத்தி தர்மா னுஷ்டானங்கள், பரத்திலும் உயர்ந்த புண்யலோகங் களை அடைவது முதலியது ஏற்படுகிறது. ஆகையால் ஸ்திரீகளை சாஸ்திரீய முறையில் கௌரவித்து ரக்ஷிக்க வேண்டும்.

### 32. ஸ்திரீயின் தர்மங்கள்

மனு:— தகப்பனார் சிறு ப்ராயத்திலும், பர்த்தா (கணவன்) யௌவனத்திலும், வயதான காலத்தில் புத்ரனும் ஸ்திரீகளைக் காப்பாற்றவேண்டும். அவர் களை இஷ்டப்படிவிட்டால் தனக்கே துக்கத்தை உண்டுபண்ணிக் கொள்வார்கள். காரணம் அபலை, பலமில்லாதவள். ஆகையால் ஸ்வதந்த்ரையாக இஷ்டப் படி இருக்கவிடக் கூடாது.

சின்னச் சின்ன காரியங்களிலும்கூட ஸ்திரீகள் கெட்டுப் போகாமல் இருக்கவேண்டுமே என்ற கவ லையில் விசேஷமாக கவனித்து ரக்ஷிக்கவேண்டும். தவறு ஏதாவது நடந்தால் தன் பிறந்த குலம், புகுந்த குலம் இரண்டுக்கும் சோகதுக்கங்கள் உண்டுபண்ணி

னவர்களாக ஆவார்கள். இந்த ஸ்திரீ ரக்ஷணம் என்ற உத்தமமான தர்மம் எல்லா வர்ணத்தாருக்கும் உரியது.

குடிப்பது, கெட்டவர்களுடன் துஷ்டர்களுடன் ஸ்னேஹம், பர்த்தாவை விட்டு பிரிந்து இருப்பது, ஊர்சுற்றுவது, அகாலத்தில் தூங்குவது, பிறர் க்ருஹத்திற்குப் போய் வஸிப்பது இந்த ஆறு கார்யங்களை ஸ்திரீகள் பரிஹரிக்க வேண்டும். இவைகள் ஸ்திரீகளை பாதிவ்ரத்யத்திலிருந்து கெடுத்துவிடும்.

மனு:— ஸ்திரீகளுக்கு வேறு தர்ம கார்யம் சாஸ்திரத்தில் குறிப்பிடவில்லை. பர்தாவுக்குப் பணிவிடை செய்வது தான் உத்தம தர்மம். அதனால் ஸ்வர்க்க லோக நிவாஸம் ஸித்திக்கும். வேறு வ்ரதானுஷ்டானம், பட்டினி இருப்பது இதெல்லாம் தர்மமாகாது.

ஸ்வபாவம் மட்டமாக இருந்தாலும், குணங்கள் குறைவாக இருந்தாலும் கணவனை உதாஸீனம் செய்யக் கூடாது. பணிவிடை செய்யவேண்டும். ஸ்திரீகளுக்கு பர்த்தா ப்ரத்யக்ஷ தெய்வம் அல்லவா.

எப்பொழுதும் ஸந்தோஷமுள்ளவளாயும் க்ருஹ கார்யங்களில் ஸமர்த்தையாயும், க்ருஹங்களில் உள்ள பண்டம் பாத்ரங்களை சுத்தமாக வைத்துக் கொள்ளுகிறவளாயும், நியாயமான செலவு காரியங்களில் தாராளமாக இருப்பவளாயும் இருக்கவேண்டும்.

அத்ரி:— ஸ்திரீகள் உபவாஸத்தாலோ அல்லது வ்ரதத்தாலோ தர்மமான மற்ற கார்யங்களாலோ நல்ல

லோகத்தை அடைய முடியாது. கணவனை பூஜிப்ப தால் மட்டும் தான் நல்ல லோகத்தை அடைய முடியும். எவள் பணத்தாலும் ஜீவனத்தாலும் வஞ்சிக் கிறாளோ அவள் நூறு ஜன்மாக்கள் புழுவாகப் பிறப் பாள், கடைசியில் மட்ட ஜாதியில் பிறந்து திண்டாடு வாள். ஜபம், தபம், தீர்த்தாடனம், ஸன்யாஸி மாதிரி இருப்பது, மந்திரங்களை அதிக ஆவர்த்தி செய்து ஸ்வாதீனம் செய்வது, தேவதைகளை உபாஸிப்பது, இவை பாதிவ்ரத்யத்தைக் கெடுக்கும் ஆறு வகையான காரியங்கள்.

வ்யாசர்:— மஞ்சள், குங்குமம், ஸிந்தூரம், மை, ரவிக்கை, தாம்பூலம், மங்களகரமான ஆபரணம், தலைமயிரை வாரிக்கொள்வது, கைவளை, காது தோடு இவைகளை சுமங்கலிகள் ச்ரத்தையுடன் இருந்து தரிக்க வேண்டும். இதனால் கணவனுக்கு ஆயுர பிவ்ருத்தி ஏற்படும்.

தினம் காலையில் சூரியனை உத்தேசித்து ஜலத் தினால் அர்க்யம் கொடுக்க வேண்டும். அப்படி செய் வதால் ஏழு ஜன்மாக்கள் விதவையாக மாட்டாள் என்பது கருத்து.

எந்த ஸ்திரீ தினமும் வீட்டுக்கு வெளியில் மண்டலம் போட்டு அக்ஷதை முதலியவைகளால் பூஜிக் கிறாளோ அவளிடத்தில் தேவதைகள் சந்தோஷத் துடன் இருக்கிறார்கள். எந்தக் கிருஹம் நன்றாக மெழுகி கோலம் போட்டு ப்ரஹாசிக்கிறதோ அங்கு லக்ஷ்மி நித்யவாஸம் செய்கிறாள்.

கணவனுக்குப் பணிவிடை செய்து பதிவ்ரதை யாக விளங்குகிற ஸ்திரீகளுக்கு இஹ லோகத்திலும், பரலோகத்திலும் பாபம் வராது. அவர்களை ஸாக்ஷாத் பார்வதியாக நினைக்க வேண்டும். அவர்களை யாரும் அவமானப்படுத்த நினைக்க மாட்டார்கள். அப்படி அவமானப்படுத்த நினைத்தால் தெய்வம் தகுந்த தண்டனை கொடுக்கும் என்பது கருத்து.

தூஷன்.— எவன் நல்ல குணமுள்ளவளாயும், அடக்க முள்ளவளாயும் இருக்கும் பத்னியை யௌவன காலத்தில் அழவைத்து ஹிம்ஸிக்கிறானோ, தள்ளி வைக்கிறானோ, அவன் பாபியாவான். ஏழு ஜன்மாக் கள் ஸ்திரீ ஜாதியாகப் பிறந்து வியாதிகளால் கஷ்டப் பட்டு, கணவனை இழந்து மறுபடியும் மறுபடியும் கஷ்டப்படுவான். ஜாக்கிரதையாக இருக்கவேண்டும் என்று கணவன்மார்களுக்கு எச்சரிக்கை செய்கிறார் என்று கருத்து. சாஸ்திரம் பொய்யாகாது. மஹர்ஷி வசனம். தாய்குலத்தை இழிவுபடுத்துகிறவன் க்ஷேம த்தை நினைப்பது ஸமுத்ரத்தில் கருங்கல் மிதக்குமா னால் நடக்கும்.

கர்பிணீ ஸ்திரீகள் ஸந்தியா காலத்தில் சாப்பிடக் கூடாது. ஸ்நானம் செய்யக் கூடாது. மரத்தடியில் எப்பொழுதுமே போகக்கூடாது.

கர்பிணீ ஸ்திரீகள் அமங்கலமான வார்த்தைகளைப் பேசக் கூடாது, அனாவசியமாக சிரிக்கக் கூடாது. மாமனார், மாமியார்களுக்குப் பணிவிடை செய்ய வேண்டும். தெளிவான முகத்துடன் பர்த்தாவினுடைய ஹித கார்யங்களில் ஆஸக்தி உள்ளவளாக இருக்க வேண்டும்.

யாக்ஞயவல்கியர்:— ஸ்திரீகளுக்கு மசக்கையின் காரணமாக எது கேட்கிறாளோ அதைக் கொடுத்து திருப்தி செய்து வைக்கவேண்டும். அலக்ஷயம் செய்யக் கூடாது. அலக்ஷ்யம் செய்து கொடுக்காவிடில் கர்பத் தில் உள்ள குழந்தைகளுக்கு ஆபத்து நேரிடலாம். ஆகையால் பிரியத்தைச் செய்யவும்.

வ்யாஸர்:— கணவன் மரணத்தை அடைந்தால் ஸ்திரீகளுக்கு வைதவ்யம் வருகிறது. அந்த வைதவ்ய தர்மத்தை அனுஷ்டித்தால் பரலோகத்தில் பர்த்தாவு டன் க்ஷேம லாபங்களை அடையலாம்.

விதவா ஸ்திரீகள் கேசங்களை விஸர்ஜனம் செய்ய வேண்டும். விதவை கேசங்களை முடிந்துகொண்டு இருந்தால் பர்த்தாவுக்கு பரலோகத்தில் சிரமம் ஏற்படும். ஒருவேளை சாப்பிடவேண்டும்.

வாஸனாதி த்ரவ்யங்கள் முதலியது உபயோகப் படுத்தக் கூடாது. தினமும் பர்த்தாவை உத்தேசித்து பர்த்தாவின் நாமகோத்ரங்களைச் சொல்லி எள்ளு ஜலத்தால் தர்பங்களுடன் தர்ப்பணம் செய்யலாம்.

தினமும் விஷ்ணு பூஜை செய்யவேண்டும். பதியை விஷ்ணுவாக பாவிக்க வேண்டும். இந்தமாதிரி தர்மா னுஷ்டானம் செய்கிற விதவை க்ஷேமத்தை அடைவாள்.

பர்த்தா மரித்த ஸ்திரீகள் புத்தரன் உள்ளவளோ இல்லாதவளோ யாராக இருந்தாலும் அப்பா முதலிய பந்துக்களை ஆச்ரயித்து அடக்கத்துடன் காலம் கடத்த வேண்டும்.

## 33. க்ருஹஸ்த தர்மங்கள்.

பராசரர்:— ச்ராத்தத்தால் பித்ருக்களையும், யக்ஞங் களால் தேவதைகளையும், அன்ன போஜனங்களால் அதிதிகளையும், வேதம் ஜபிப்பதால் மஹர்ஷிகளை யும், க்ருணாவாத்ஸல்யங்களினால் மற்ற ஜகத்தில்

உள்ளவர்களையும், புத்தரனை அடைவதால் பிர ஜாபதியையும், வைச்வதேவ பலியினால் ஸகல ப்ராணிகளையும் ஸந்தோஷப் படுத்துகிறவர்கள் க்ருஹஸ் தர்கள் என்று கூறப்படுகிறது.

க்ருஹஸ்தர்கள் தங்கள் புண்ய கர்மாக்களால் ஸம்பாதிக்கப்பட்ட புண்ய லோகத்தை அடைகிறார் கள்.

பிக்ஷை எடுத்து சாப்பிடுகிற ஸன்யாஸி, பிரம்ம சாரிகள் கூட க்ருஹஸ்தனை ஆச்ரயித்து இருக்கிறார் கள். ஆகையால் எல்லோருக்கும் கிருஹஸ்தாச்ரமம் ஆச்ரயமாக இருப்பதால் அது உயர்ந்த ஆச்ரமம். அந்த ஆச்ரம காரியங்களை சாஸ்திரங்களில் சொல்லப் பட்டவைகளை அனுஷ்டித்தால் கர்ம பந்தத்திலிருந்து விடுபட்டு மோக்ஷத்தை அடைவார்கள்.

வ்யாஸர்:— தினம் வேதாப்யாஸம் செய்கிற வனாயும், யக்ஞோபவீதம் தரித்துக்கொண்டு இருப்ப வனாயும், ஸத்யம் பேசுகிறவனாயும் க்ரோதங்களை ஜயித்தவனாயும் இருக்கிற க்ருஹஸ்தன் ப்ரம்மஸா யுஜ்யத்தை அடைகிறான்.

தினம் ஸந்தியா ஸ்நானத்தில் ஆஸக்தி உள்ள வனாயும் ப்ரம்மயக்ஞ அனுஷ்டான ச்ரத்தை உள்ள வனாயும் அஸூயை இல்லாதவனாயும் ம்ருதுவாயும், இந்திரியங்களை ஜயித்தவனாயும் இருக்கிற க்ருஹஸ் தன் மேல்லோகத்தில் க்ஷேமத்தை அடைகிறான்.

ராகம், பயம், க்ரோதம், பேராசை, மூடத்தனம், இவைகளை விட்டவனும் காயத்ரீ ஜபத்தில் விசேஷ ச்ரத்தை உள்ளவனும், சிராத்தம் செய்கிறவனாயும் இருக்கிற க்ருஹஸ்தன் ஸகல பாபத்திலிருந்தும் விடு படுகிறான்.

மாதா, பிதாக்களை பூஜிப்பவனும், கோப்ராம் மணாளைப் பூஜிப்பவனும், யாகம் செய்கிறவனும், தேவதைகளிடம் பக்தி உள்ளவனாயும் இருக்கிற க்ருஹஸ்தன் ப்ரம்மலோகம் அடைந்து ப்ரகாசிக் கிறான்.

வேத சாஸ்திரங்களில் சொல்லப்பட்ட தர்மங் களை அனுஷ்டித்துக் கொண்டு ஜீவனம் செய்கிறவன் இஹலோகத்தில் யசஸ்ஸையும் பிறகு உயர்ந்த லோகங் களையும் அடைவான்.

வானப்ரஸ்தாச்ரமம் கலியில் மஹர்ஷிகளால் நிஷேதம் செய்யப்பட்டிருக்கிறது. ஆகையால் அதைப் பற்றி எடுத்துச் சொல்ல வேண்டிய அவச்யம் கிடை யாது.

## 34. ஸன்யாஸ தர்மங்கள்.

அங்கீரர்:— எப்பொழுது ஸகலவஸ்துக்களிலும் வைராக்யம் உண்டாகிறதோ அப்பொழுதுதான் ஸன்யாஸம் பெற்றுக் கொள்ளலாம். வைராக்யம் இல்லாமல் ஸன்யாஸம் வாங்கிக்கொண்டால் பதிதர்கள் ஆவார்கள்.

ஹாரீதர்:— வைராக்யம் உள்ளவன் அவசியம் ஸன்யாஸம் பெற்றுக் கொள்ளலாம்; விஷயத்தில் பற்றுதல் உள்ளவன் க்ருஹஸ்தனாக இருந்து கர்மாக்கள் செய்வதுதான் உசிதம். தீமான் என்பது யோஜித்துச் செய்யவேண்டும் என்பதைக் குறிக்கிறது. புத்திமான் என்று அர்த்தம். பற்றுள்ளவன் ஸன்யாஸம் வாங்கிக் கொண்டால் நரகத்தை அடைவான்.

ஜாபலச்ருதியில் ஆச்ரம ஸமுச்சயம் சொல்லப்பட்டிருக்கிறது. அதாவது அந்த அந்த ஆச்ரமங்களில் இருக்கும்பொழுது வைராக்யம் வரவில்லையேயானால் மூன்று ஆச்ரமமும் ஸ்வீகரித்து பிறகு வைராக்யம் ஸம்பாதித்துக் கொண்டு ஸன்யாஸம் பெற்றுக் கொள்ள வேண்டும். எந்த ஆச்ரமத்தில் இருக்கும் பொழுது வைராக்யம் பலமாக வருகிறதோ அடுத்த ஆச்ரமம் செல்லாமல் ஸன்யாஸம் பெற்றுக்கொள்ள லாம். ஆகையால் வைராக்யத்தை அனுசரித்து ஆச்ரம ஸமுச்சயம் விகல்பம் என்று கூறப்படுகிறது.

யமன்:— வம்சங்களினால் உண்டான தோஷம், புண்ய பாப கர்மாக்களினால் ஏற்பட்ட தோஷம் இவைகளை ஸன்யாஸம், (உமி—நெருப்பு தங்கத்தைச்

சுத்தம் செய்வதுபோல்) ஜீவனுடைய சகல பாபங்களையும் தஹிக்கும், பஸ்பமாகச் செய்துவிடும்.

வ்யாஸர்:— பகவான் வாசுதேவனுக்கு ஒரு ரூபம் ஸன்யாஸி, மற்றொண்று ப்ரதிமா ரூபம்; ஸஞ்சரிப்பது ஸன்யாஸ ரூபம், ஸ்திரமாக இருப்பது பிரதிமா ரூபம், என்று இரண்டு ரூபங்கள்.

தக்ஷன்:— ஸன்யாஸம் பெற்றுக்கொண்டவன் தனக்கு முன்பு உள்ள 30 தலைமுறைகளில் உள்ள பித்ருக்கள், பின்பு உள்ள 30 தலைமுறைகளில் உள்ள பித்ருக்கள், அதற்கு பின்பு முன்பு உள்ள பித்ருக்கள் ஆக ஸகல பித்ருக்களையும், ஸன்யாஸம் வாங்கிக் கொண்ட மாத்ரத்தாலே நரகத்திலிருந்து காப்பாற்றுகிறான்.

ஆதுரனாக இருந்தால் மனதினால் வாக்கினால் ப்ரைஷோச்சாரணம் செய்து ஸன்யாஸம் பெற்றுக் கொள்ளலாம். இது ஆபத்ஸன்யாஸம். அதாவது ஆதுரன் வ்யாதியினால் பீடிக்கப்பட்டவன், அங்கங்களான நாந்திச்ராத்தம்; பூர்ணாஹுதி, ஸக்துப்ராசனம் முதலிய கார்யங்களை செய்ய முடியாதவன் ஆபத் ஸன்யாஸத்துக்கு அதிகாரியாவான். க்ரம ஸன்யாஸம் பார்த்து தெரிந்து கொள்ள வேண்டும்.

ஸம்வர்த்தர்:— பிக்ஷுக்கள் ஸன்யாஸிகள், குடீசகர், பஹூதகர், ஹம்ஸர், பரமஹம்ஸர் என்று நான்கு பிரிவினர்களாவார்கள். இவர்களில் பின் உள்ளவர்கள் உயர்ந்தவர்கள்.

போதாயனர்:— குடீசகர் என்ற ஸன்யாஸீ ஸன்யாஸம் செய்துகொண்டு தன் வீட்டிலேயோ அல்லது

பந்துக்கள் வீட்டிலோ பிக்ஷை எடுத்துச் சாப்பிட வேண்டும். சிகை, யக்ஞோபவீதம் ஒன்று, மூன்று தண்டங்கள், தீர்த்த பாத்ரம் இவைகளை தரிக்க வேண்டும். காயத்ரீ ஜபம் அதிகமாகச் செய்ய வேண்டும்.

அனுஷ்டான காலம் போக பாக்கி காலங்களில் ஜபம் த்யானம், பாகவதம் ராமாயணம் முதலிய க்ரந்த ச்ரவணாதிகள் செய்யவேண்டும். ஹ்ருதய கமலத்தில் பகவானை த்யானம் செய்யவேண்டும்.

பஹூதகர் என்ற ஸன்யாஸீ பந்து புத்ராதிகளை தியாகம் செய்து வேறு க்ருஹங்களில் பிக்ஷை எடுத்து புஜிக்கவேண்டும். ஏழு க்ருஹங்களுக்கு மேல் பிக்ஷை எடுக்கக்கூடாது, இரண்டு மூன்று க்ருஹங்களில் போது மானது கிடைத்தால் மேல்கொண்டு எடுக்கக்கூடாது. பாக்கி விஷயங்களுக்கு குடீசகர் மாதிரி தான் அனுஷ் டானம் என்று அறியவும்.

விஷ்ணு:— ஹம்ஸர் என்ற ஸன்யாஸீ ஏக தண்டம். கஷாய வஸ்திரம், அஹிம்ஸை உத்தேசித்து பூமியில் உள்ள ஜந்துக்களை நகர்த்த சௌகரிய முள்ள வஸ்திரம், இவ்வளவு தான் தரிக்கவேண்டிய ஸாமான்கள், ஹம்ஸனுக்கு சிகை கிடையாது என்று தோன்றுகிறது. பாக்கிவிஷயங்கள் முன்பு மாதிரியாக அறியவும்.

அத்ரி:— பரமஹம்ஸ ஸன்யாஸியானவர் இரண்டு கௌபீனம், மேலே போர்த்திக் கொள்ள ஒரு கந்தை ஒரு தண்டம் இவைகளைத் தரிக்கவேண்டும். தீர்த்தப்

பாத்ரம் அவசியம் தரிக்கவேண்டும். மனது முதலிய இந்திரியங்களை அடக்கி ப்ரம்மத்யானம் செய்ய வேண்டும். எப்பொழுதும் ப்ரணவ ஜபம் செய்ய வேண்டும். வேதாந்தச்ரவணம்—மனனம், நிதித்யாஸனம் செய்யவேண்டும். ஆத்மா ஏக: என்ற எண்ணத்துடன் ஸ்வயம் விஷ்ணு ரூபமாக இருக்கவேண்டும். எங்கு வேண்டுமானாலும் சுத்தமான இடத்தில் வஸிக்கலாம்.

பராசரர்:— காமம், க்ரோதம், தர்ப்பம், பேராசை, மூடத்தனம் இவைகளை விட்டு அஹங்கார மமகார மில்லாதவராக இருக்கவேண்டும்.

தண்டம் மூங்கிலினுடையது; அழகாயும், தோல் உள்ளதும், இரட்டைப்படை கணு உள்ளதும், புண்ய ஸ்தலத்தில் உண்டானதும், அனேக கருப்புப் புள்ளி உள்ளதும், (இது முற்றியது என்பதற்கு அடையாளம்) கிளைகள் இல்லாததும், நேராக இருப்பதும், பூமியில் இருந்து முளைத்திருப்பதும், மூக்கு வரையில், புருவம் வரையில் உள்ள உயரமுள்ளதுமான இப்படி லக்ஷண முள்ள தண்டத்தை முறைப்படி தரிக்க வேண்டும்.

யாக்ஞயவல்கியர்:— வேதாந்த புஸ்தகம் அபேக்ஷை இருந்தால் க்ருஹஸ்தர்களிடமிருந்து க்ரஹிக்கலாம்.

எப்பொழுதும் தனியாக இருக்கவேண்டும். கேட்டால் உசிதமான பதில் நாராயண சப்தத்துடன் இருக்கவேண்டும். அனாவசியப் பேச்சு கூடாது.

த்யானம், சௌசம், பிக்ஷை, எப்பொழுதும் தனிமையாக இருப்பது, இந்த நான்கு கார்யங்களை

தவிர ஐந்தாவது காரியம் பரமஹம்ஸாளுக்கு கிடையாது என்பது கருத்து.

பரமஹம்ஸாள் ஹரிஹர பூஜை செய்யவேண்டும். ஆனால் செடியிலிருந்து துளசி முதலியவைகளை கிள்ளி எடுக்கக்கூடாது. கீழே விழுந்த பத்ர புஷ்பங்களை கொண்டு பூஜிக்கவேண்டும். மோக்ஷம் விஷ்ணு கொடுப்பார், ஞானம் பரமேச்வரன் கொடுப்பார்.

கன்வர்:— ஒரு நாள் கிராமத்திலும், ஐந்து நாள் நகரத்திலும், வர்ஷா காலத்தில் நான்கு மாதம் சௌகர்யமான ஒரே இடத்திலும் வஸிக்கவேண்டும்.

வ்யாஸர்:— எந்த ப்ராம்மணர் முறைப்படி மோக்ஷாச்ரமமான ஸந்யாஸத்தை க்ரஹித்துக் கொண்டு த்ருடபுத்தியுடன் அனுஷ்டிக்கிறாரோ, அவர் சாந்தமான அக்னிபோல் ப்ரம்ம ஸ்வரூபத்தை அடைகிறார்.

விஷ்ணு:— வயதானவர்கள், உடம்பு முடியாதவர்கள், இந்த ஸன்யாஸிகள் கால தேசத்தை அனுசரித்து நகரத்திலோ அல்லது சௌகரியமான கிராமத்திலோ ஒரே இடத்தில் வஸிக்கலாம். தோஷமில்லை என்று கருத்து. இவர்களை க்ருஹஸ்தர்கள் விசேஷமாக சுச்ருஷை செய்து பிக்ஷை முதலியவைகளினால் ஆராதிக்கவேண்டும்.

ஆத்ம ஸாக்ஷாத்காரத்தை அடைந்தவர்கள், ஆத்ம ஸாக்ஷாத்காரத்தை உத்தேசித்து முயற்சிப்பவர்கள் பகவத் ஸ்வரூபமாவார்கள். ஆகையால் அவர்கள் ஸங்கல்பம் செய்வது நடக்கும். ஐச்வர்யம் விரும்பும் க்ருஹஸ்தர்கள் அவர்களுக்கு பணிவிடை செய்வதால் ஸகலவிதமான க்ஷேமலாபங்களையும் அடைவார்கள்.

# ஸம்க்ஷேப தர்ம சாஸ்திரத்தில் ஆஹ்னிகப்ரகரணம்

வர்ணாச்ரம தர்மங்களைத் தெரிவித்த பிறகு ஆஹ்னிக தர்மங்களைத் தெரிவிக்கிறோம். ஆஹ்னிகம் என்றால், பகல் இரவு இந்த இரண்டு வேளைகளிலும் செய்யவேண்டிய தர்ம காரியங்கள் என்பது பொருள். அவைகள் மனு, யாக்ஞவல்க்யர் முதலிய மஹரிஷிகளால் தெரிவிக்கப்பட்டிருக்கின்றன. இவ்விடத்தில் அந்த தர்மங்கள் ஸம்க்ஷேபமாக தெரிவிக்கப்படுகிறது.

## 1. விடியற்காலையில் விழித்துக் கொள்ள வேண்டிய காலம்.

மனு:— ப்ராம்ம முகூர்த்தத்தில் விழித்துக் கொண்டு எழுந்திருக்கவேண்டும். பிறகு, நேற்றைய தினம் என்ன தர்மங்கள் அனுஷ்டித்தோம், என்ன பொருள் ந்யாயமாக ஸம்பாதித்தோம், இனி இன்றைய தினம் என்ன தர்மங்கள் செய்யவேண்டும், எப்படி தர்மமாக பொருள் ஸம்பாதிக்கவேண்டும், பொருள் ஸம்பாதிக்கும் முறையில் பிறருக்குக் கெடுதலும், தனக்கு பாபமும் ஸம்பவிக்காமல் இருக்க எப்படி நடந்து கொள்ளவேண்டும், தர்மார்த்தங்களை சேகரிக்கும் பொழுது ஏற்படக்கூடிய தேக சிரமங்களையும் சிந்தனை செய்யவேண்டும். அதனால் ச்ரமங்களை குறைத்து, தர்மங்களை அபிவிருத்தி செய்ய உபாயம் தெளிவாகப் புரியும். பிறகு வேத தத்வார்த்தமான ஸ்ரீபகவானை சிந்திக்கவேண்டும். இது முக்கியமானது.

ராத்திரியினுடைய கடைசீ யாமத்தில் ஒரு முகூர்த்தம் ப்ராம்மம் என்பதாகும். அதாவது இரவு

காலம் நான்கு யாமங்கள் கொண்டது. ஒரு யாமத்திற்கு 71/2 நாழிகைகள்.ஒரு யாமத்திற்கு 3 3/4 (மூன்றே முக்கால்) மூகூர்த்தங்கள். இந்த ரீதியில் கடைசி யாமத்தில் பின் இரண்டு மூகூர்த்தங்கள், அதாவது ஸூர்யோதயத்திலிருந்து முன்பு இரண்டு முகூர்த்தங்கள். அதில் முதல் முகூர்த்தம் ப்ராம்மம் என்பது; இரண்டாவது முகூர்த்தம் ரௌத்ரம் என்பது. அதாவது மணிக்கணக்கில் 41/2 மணிக்கு ப்ராம்ம மூகூர்த்தம் என்று அறியவும்.

விஷ்ணு:— தினம்தோறும் விடியற்காலையில் எழுந்து நாம் சென்ற தினத்தில் என்ன நல்ல கார்யம் செய்தோம், யாருக்காவது பொருள்தானம் செய்தோமா, நாம் கொடுக்காவிட்டாலும் பிறரைப் பொருள் கொடுக்கச் சொன்னோமா, நிஜம் என்ன பேசினோம், வயது தினம் போய்க் கொண்டிருக்கிறது, மரணம், வ்யாதி, சோக மோஹங்கள், வயது ஆக ஆக வந்து விடுமே, அப்பொழுது நாம் என்ன செய்யப் போகிறோம் என்று நினைத்துப் பார்க்கவேண்டும்.

**2. ப்ராம்ம முகூர்த்தத்தில் ஜபிக்கவேண்டியவைகள் (பார்க்க : அனுபந்தம் 1)**

இந்த ஸ்லோகங்களை படுக்கையை விட்டு எழுந்தவுடன் சொல்லவேண்டும். பாபங்கள் விலகும். புண்ணியம் விருத்தியடையும்.

சாண்டில்யர்:— விடியற்காலத்தில் உரத்த குரலில் பகவன் நாமாக்களைச் சொல்லவேண்டும். பகவானுடைய நாமாக்களை ஸங்கீர்த்தனம் செய்வதே பகவானை ஸ்தோத்ரம் செய்வதாகக் கருதப்படுகிறது.

காலையில் வேதாத்யயனம் செய்த ப்ராம்மணன், பாக்யசாலி, பசு, அக்னி, தீக்ஷிதர் இவர்களை தரிசனம் செய்கிறவன் ஸகல ஆபத்துகளிலிருந்தும் விடுபடுவான், ஆபத்துக்கள் வராது என்பது கருத்து.

### 3. சௌசம் செய்யும் முறை.

அங்கீரர்:— படுக்கையைவிட்டு எழுந்தவுடன் வாயைக் கொப்பளித்து பிறகு ஆசமனம் செய்து வஸ்த்திரத்தினால் சிரஸை மூடிக்கொண்டு பேசாமலும், காரித்துப்பாமலும் பெருமூச்சுவிடாமலும் இருந்து கொண்டு பூஜைக்கு உபயோகமில்லாத புல்களால் பூமியை மறைத்துக்கொண்டு மல மூத்திரங்களை விஸர் ஜனம் செய்யவேண்டும். மல மூத்திர விஸர்ஜனம் செய்யவேண்டிய அவசிய காலங்களில் முன்பு செய் யும் காரியத்தை நிமித்தமாக வைத்து ஆசமனம் செய்து பிறகுதான் மல மூத்ர விஸர்ஜனம் செய்யவேண்டும் என்பது கருத்து. தூங்கிய பிறகு ஆசமனம் விதிப்ப தால் இது விளங்குகிறது.

யாக்ஞவல்க்யர்:— பகல், ஸந்தியாகாலம் இவை களில் வலது காதில் பூணூலை சுற்றிக்கொண்டு வடக்கு முகமாகவும், இரவில் தெற்கு முகமாகவும் மல மூத்திர விஸர்ஜனம் செய்யவேண்டும்.

முன்பு ஜலம், மண், இவைகளை எடுத்துக் கொண்டு வாக்நியமத்துடன் பகலில் வடக்கு முக மாகவும், இரவில் தெற்கு முகமாகவும், மல மூத்திர விஸர்ஜனம் செய்யவும். மல மூத்ர விஸர்ஜனத்திற்குப் பிறகு ஜலம், மண் எடுத்து சுத்தி செய்து கொண்டால்

உடுத்திக்கொண்ட வஸ்த்திரத்துடன் உடனே ஸ்நானம் செய்வது ப்ராயச்சித்தமாகும்.

அங்கீரர்:— ஜலமில்லாத இடத்தில் மூத்திர, புரீஷ விஸர்ஜனம் செய்ய நேர்ந்தால் பிறகு ஜலம் கிடைத்த இடத்தில் சௌசம் செய்து ஸ்னானம் செய்யவும். ஈர வஸ்த்திரத்துடன் மல மூத்ர விஸர்ஜனம் செய்தால் சுத்தி செய்துகொண்டு மூன்று தடவை ப்ராணாயாமம் செய்து மறுபடியும் ஸ்னானம் செய்யவும். எண்ணெய் தேய்த்துக் கொண்டும், வாந்தியிலும், க்ஷவரம் செய்து கொண்டும், மைதுன காரியத்திலும், அதற்கு ஏற்பட்ட சுத்தி செய்து கொள்ளாமல் மல மூத்ர விஸர்ஜனம் செய்தால் மூன்று நாள் அசுத்தனாகிறான். கர்மாக்களுக்கு மூன்று நாள் அனர்ஹன் என்று கருத்து.

மனு:— மார்க்கம், சாம்பல், மாட்டுக் கொட்டில், வாயு, அக்னி, ப்ராம்மணன், ஸூர்யன், ஜலம், பசு, இவைகளைப் பார்த்துக் கொண்டு மல மூத்ர விஸர்ஜனம் செய்யக் கூடாது.

உழுத பூமியில், ஜலத்தில், யக்ஞபூமியில், பழுது அடைந்த கோவிலில், கரையான் புற்றில், ப்ராணி உள்ள பொந்துகளில் மல மூத்திர விஸர்ஜனம் செய்யக் கூடாது. நின்று கொண்டும், நடந்துகொண்டும், நதி தீரங்களிலும், மலையின் உச்சியிலும், மல மூத்திர விஸர்ஜனம் செய்யக்கூடாது. அக்னி, ஸூர்யன், சந்திரன், ஜலம், ப்ராம்மணன், பசு, காற்று இவைகள் உடைய எதிரில் மல மூத்ர விஸர்ஜனம் செய்யக் கூடாது. இந்த மாதிரி தப்புக் காரியம் செய்தால் விவேக புத்தி நசித்துவிடும், பயித்தியம் ஏற்படும்

என்பதாகும்.

செருப்பு, பாதுகை, குடை, இவைகளை தரித்துக் கொண்டும் மல மூத்திர விஸர்ஜனம் செய்யக் கூடாது. ஆகாயத்தில், ஸ்திரீ, குரு, ப்ராம்மணன் இவர்கள் எதிரிலும் மல மூத்திர விஸர்ஜனம் செய்யக் கூடாது.

பூணூலை காதில் சுற்றிக் கொள்ள மறந்து (உப வீதமாகப் போட்டுக் கொண்டு) மல மூத்திர விஸர் ஜனம் செய்தால் வேறு புது பூணூல் தரித்துக் கொள்ள வேண்டும்.

தேவலர்:— மல மூத்திர விஸர்ஜனம் செய்த பிறகு குளம், நதி, முதலிய தீர்த்தங்களில் இறங்கி சௌசம் செய்யக்கூடாது. ஜலத்தை பாத்திரத்தில் எடுத்துக் கொண்டு வெளியில் சுத்தி செய்துகொள்ள வேண்டும்.

மரீசி:— எந்த தேசத்தில், எந்த ஜலம், எந்த மண் கிடைக்கிறதோ, அது சௌசத்திற்கு உயர்ந்தது. அவைகளால் சுத்திசெய்து கொள்ளவேண்டும்.

மனு:— மண்ணினால் சுத்தி செய்யும் முறை சொல்லப்படுகிறது. ஒரு தடவை சிச்னத்திலும், மூன்று தடவை அபானப்ரதேசத்திலும், ம்ருத் ஜலத்தினால் சுத்தி செய்து கொள்ளவேண்டும். பிறகு இடது கையில் பத்து தடவையும், இரண்டு கைகளுக்கும் சேர்த்து ஏழு தடவையும் மண் ஜலத்தினால் சித்தி செய்துகொள்ள வேண்டும். இந்த ஸங்கியா முறை கிருஹஸ்தனுக்குச் சொல்லப்படுகிறது. பிரம்மச்சாரிகளுக்கு இந்த சௌச

கிரமத்தை இரண்டு மடங்காகவும், வானப்ரஸ்தர்களுக்கு மூன்று மடங்காகவும், ஸந்நியாஸிகளுக்கு நான்கு மடங்காகவும் பெருக்கிக் கொள்ளவேண்டும். பாதங்களிலும் ஏழு தடவை மண் ஜலத்தினால் சுத்தி செய்து கொள்ளவேண்டும். மனு வசனத்தில் பாத சுத்திச் சொல்லவில்லை என்று நினைக்கவேண்டாம். வேறு மஹரிஷிகள் பாத சௌசம் சொல்லியிருக்கிறார்கள். வாய் அகலமுள்ள பாத்திரத்தில் உள்ள ஜலத்தை வலது கையினால் அந்த அந்த பிரதேசத்தில் இறைத்து இடது கையினால் சுத்தம் செய்துகொண்டு பிறகு மண்ணை இடதுகையில் வலதுகையால் போட்டுக் கொண்டு வலது கையால் இறைக்கப்பட்ட ஜலத்தினால் மண்ணுடன் சுத்திசெய்து கொள்ளவேண்டும். ஸங்கியை மேற்கொண்டு தெரிவித்தது ஞாபகத்துடன் அனுஷ்டிக்க வேண்டும்.

வ்யாஸர்:— முதலில் மலத்தின் சௌசத்தையும், பிறகு மூத்திர சௌசத்தையும் பிறகு பாத சௌசத்தையும், பிறகு கைகளுக்கு சௌசத்தையும் செய்து கொள்ளவேண்டும்.

ஆபஸ்தம்பர்:— மேற்கொண்டு சொன்ன சௌசம் பகலில் அனுஷ்டிக்கவேண்டும். இரவில் பாதி அனுஷ்டிக்கவும், வழியில் கால்பாகம் அனுஷ்டிக்கவும், உடம்பு முடியாதவர்கள் முடிந்த அளவில் சௌசம் அனுஷ்டிக்க வேண்டும்.

உபநயனம் ஆகாத பையன்கள், அப்ராம்மணர்கள், ஸ்திரீகள், இவர்களும் ம்ருத் ஜலங்களால் சுத்திசெய்து கொள்ள வேண்டும், (துர்நாற்றம் போகும் வரையில்),

ஸங்கியா நியமம் கிடையாது. ஆகையால் ம்ருத் இல்லாமல் சுத்தி செய்துகொள்ள கூடாது என்று அறியவும்.

தேவலர்:— பிறருடைய மலம் ஸ்பரிசித்த விஷயத்தில் சுத்தி சொல்லுகிறார் தேவ... மனிதனுடைய எலும்பு, வஸை, அமேத்யம், ரஜஸ், மூத்ரம், சுக்லம், மஜ்ஜை, ரத்தம் இவைகளைத் தொட்டால் ஸ்நானம் செய்து லேபங்களை நன்றாக சுத்தம் செய்து ஆசமனம் செய்யவேண்டும். பிறகு சுத்தனாகிறான். இவைகள் தன்னுடையதாக இருந்தால் அந்த இடத்தை அலம்பி சுத்தம் செய்து ஆசமனம் செய்யவும்.

சாஸ்த்திரங்களில் சொல்லப்பட்ட கார்யங்களைச் செய்கிறவர்களுக்கு நம்பிக்கையுடன் மனதில் ஒரு நிம்மதி ஏற்படவேண்டும். அது இல்லாவிட்டால் எதையும் சரியாக நடத்தமுடியாது என்று சொல்லப்படுகிறது. அதாவது ஸமஸ்தகங்கா ஜலத்தினால் மலை அளவு மண்ணை எடுத்து மரணகால பர்யந்தம் ஒருவன் சௌசம் செய்து கொண்டாலும் மனதில் நம்பிக்கை இல்லாவிடில், திருப்தி ஏற்படவில்லை என்றால், சௌசத்தினுடைய பலமான சுத்தியை அடையமுடியாது என்று சொல்லப்படுகிறது. ஆகையால் மனதில் சாஸ்திரீய கார்யங்களை அனுஷ்டிக்கிறவன் நல்ல எண்ணங்களை அபிவிருத்தி செய்துகொள்ள வேண்டும்.

போதாயனர்:— காலம் அசுத்தத்தை சுத்தம் செய்யும். அதே மாதிரி அக்னியும் சுத்தம் செய்கிறது. ஜலம், மண் இவைகளும் சுத்தம் செய்கிறது. செய்த காரியங்களில் மனதினுடைய ஸந்துஷ்டியும் சுத்தம்

செய்கிறது. அசுத்திக்குக் காரணம் தெரியவில்லை என்றாலும் சுத்தம் ஏற்படுகிறது. ஆக ஆறு விதமான சௌசம் இருக்கின்றன என்று போதாயனர் சொல்லு கிறார்.

ஆகையால் எப்பொழுதும் சௌசத்தில் விசேஷ முயற்சி எடுத்துக் கொள்ள வேண்டும். சௌசத்தினால் தான் ப்ராம்மணனுக்குப் பெருமை. சௌசம், ஆசாரம், இவைகள் இல்லாதவனுடைய காரியங்கள் எதிர் பார்த்துப் பலனைக் கொடுக்காது என்பது கருத்து.

4. வாய்க் கொப்பளித்தலின் முறை.

பராசரர்:— சௌசம் செய்த பிறகு, பாதங்கள் கைகள் இவைகளை சொன்ன ஸங்கியைக் கொண்டு மண், ஜலம், இவ்வகளால் அலம்பி சிகை, கச்சம் இவைகளைக் கட்டிக் கொண்டு பிறகு வாயை கொப் பளித்து ஆசமனம் செய்யவேண்டும்.

வ்யாஸர்:— ப்ராம்மணனுடைய வலது பக்கத்தில் தேவதைகள் இருக்கிறார்கள். ஆகையால் உட்கார்ந்து கொண்டு இடது பக்கமாக வாய் கொப்பளிக்க வேண்டும்.

மல விஸர்ஜன காலத்தில் 12 தடவை வாய் கொப்பளிக்க வேண்டும். மூத்திர விஸர்ஜனத்தில் 4 தடவையும், போஜனம் செய்த பிறகு 16 தடவையும் வாய் கொப்பளிக்க வேண்டும்.

### 5. ஆசமனம் செய்யும் முறை.

வ்யாஸர்:— கை கால்களை அலம்பிக்கொண்டு, முகத்தை அலம்பிக்கொண்டு, கவனத்துடன் உபவீதி யாக இருந்து கொண்டு இரண்டு கைகளையும் முழங் கால் நடுவில் வைத்து ஆசமனம் செய்யவும். பிறகு தந்ததாவனம் (பல் துலக்குவதை) ஆரம்பிக்கவேண்டும்.

வலது கையை பசுவின் காதுபோல் செய்து அதனால் மூன்று தடவை ஜலம் சாப்பிடவும், பிறகு இரண்டு தரம் வாயை துடைத்துக் கொள்ளவும்.

எல்லா விரல்களையும் சேர்த்துக் கொண்டு கையி னால் ஜலம் எடுத்துக்கொண்டு பிறகு சுண்டு விரலை யும், கட்டைவிரலையும் நீக்கி பாக்கி உள்ள ஜலத்தைச் சாப்பிடவும். இது ஆசமன முறை என்று சொல்லப் படுகிறது.

உளுந்து முழுகும் அளவுள்ள ஜலத்தை மூன்று தடவை சாப்பிடவும்.

மனு:— சுத்தியுடன் இருக்கவிரும்புகிறவன் உஷ்ண மில்லாததுமான ஜலத்தினால் ப்ராம்ம தீர்த்தத்தினால் தனிமையில் கிழக்கு அல்லது வடக்கு முகமாக ஆச மனம் செய்யவேண்டும்.

மார்பை அடையும் ஜலத்தால் ப்ராம்மணனும், கழுத்தை அடைந்த ஜலத்தால் க்ஷத்ரியனும், முகத்வா ரத்தில் சென்ற ஜலத்தால் வைச்யனும், வாயினுடைய அடி பாகத்தில் ஜலஸ்பர்சத்தால் அப்ராம்மணனும்,

ஸ்திரீகளும் சுத்தி அடைகிறார்கள்.

மரீசி:— முழங்கால்களுக்கு வெளியில் கைகளை வைத்துக் கொண்டும், ஆஸனத்தில் உட்கார்ந்துகொண்டும், நின்றுகொண்டும் ஆசமனம் செய்யக்கூடாது. போஜனத்திற்குப் பிறகு ஆஸனத்தில் உட்கார்ந்து ஆசமனம் செய்யலாம். மற்ற சமயத்தில் செய்யக்கூடாது. இடுப்பு வஸ்த்திரத்தின் ஒரு பாகத்தால் உத்தரீயமாக தரித்துக்கொண்டும் தோளை வஸ்த்திரத்தினால் மறைத்துக்கொண்டும்,ஒரு ஸமயத்திலும் ஆசமனம் செய்யக் கூடாது. யக்ஞோபவீதம் இல்லாமலும் அசுத்த வஸ்த்திரம் தரித்துக்கொண்டும், தலைமயிரை விரித்துக் கொண்டும் ஆசமனம் செய்து, வேறு கர்மா செய்தால் செய்த காரியத்தை மறுபடியும் செய்யவேண்டும். தெற்கு திக்கு மேற்கு திக்கு இவைகளைப் பார்த்து ஆசமனம் செய்தால் ஸ்நானம் செய்து ஆசமனம் செய்யவேண்டும்.

எமன்:— இடதுகையினால் தீர்த்தத்தை தொட்டுக் கொண்டு ஆசமனம் செய்யவேண்டும். இடது கையில் 12 ஆதித்யர்கள், ஜலத்துக்கு அதிபதியான வருணன், இவர்கள் இருக்கிறார்கள். ஆகையால் குளம், நதி, இந்துமாதிரி தீர்த்தக்கரையில் ஆசமனம் செய்யும் பொழுது இடது கையால் தீர்த்தத்தை தொட்டுக் கொண்டு ஆசமனம் செய்யவேண்டும் என்று கருத்து.

வெண்கலப் பாத்திரம், தாமிரப் பாத்திரம், வெள்ளிப் பாத்திரங்கள் இவைகளில் உள்ள தீர்த்தம் எப்பொழுதும் சுத்தமானது. ஆகையால் உத்தரணியினால் இடது கையால் வலதுகையில் தீர்த்தம் எடுத்து

ஆசமனம் செய்ய வேண்டும். மேற்படி சொன்ன பாத்திரங்களில் இருக்கும் ஜலத்தை இந்தமாதிரி எடுக்கவேண்டும். வெறும் இடதுகையால் எடுத்து ஆசமனம் செய்தால் அது ஸுராபானம் செய்ததாகும் என்பது கருத்து.

மனு:— ப்ராம்மணன் ப்ரம்ம தீர்த்தத்தால் எப்பொழுதும் ஆசமனம் செய்யவேண்டும். ரிஷிதீர்த்தத்தாலும் தைவதீர்த்தத்தாலும் ஆசமனம் செய்யலாம். ஆனால் பித்ரு தீர்த்தத்தால் ஒரு சமயமும் ஆசமனம் செய்யக் கூடாது.

அந்த அந்த தீர்த்தங்கள் உள்ளங்கையில் எங்கு இருக்கின்றன என்று சொல்லப்படுகிறது. கட்டைவிரலுடைய அடிபாகத்தில் ப்ராம்ம தீர்த்தம், சுண்டு விரலுடைய அடிபாகத்தில் ரீஷி தீர்த்தம், நான்கு விரல்களுடைய நுனி பாகத்தில் தேவ தீர்த்தம், ஆள் காட்டிவிரல் கட்டைவிரல் இவைகளுடைய நடு பாகத்தில் பித்ரு தீர்த்தம் என்று அறியவும்.

சௌனகர்:— கைகால்களை அலம்பி கண்ணால் பார்த்த ஜலத்தை மூன்று தடவை சாப்பிடவும், உளுந்து மூழ்கும் அளவு தீர்த்தம் மார்பு தேசம்வரையில் அடைந்தால் சுத்தனாகிறான்.

உதடுகளை மூடிக்கொண்டு கட்டைவிரல் அடியால் இரண்டு தடவை துடைக்க வேண்டும். பிறகு எல்லா விரல்களையும் சேர்த்து ஒருதடவை வாயைத் தொட வேண்டும்.

இவ்வாறு ஆசமனம் செய்து விரல்களால் இந்திரியங்களைத் தொடவேண்டும் என்று சொல்லப்படுகிறது. நாம், அச்யுதாய நம: அனந்தாய நம: கோவிந்தாய நம: என்று ஆசமனம் செய்து, கேசவாதி 12 நாமாக்களுடன் விரல்களால் இந்திரியங்களைத் தொடுகிறோம். இது நம் பெரியோர்களுடைய சிஷ்டாசாரமாகும். கட்டை விரல் பவித்ர விரல் இவைகளால் இரண்டு கண்களையும், கட்டை விரல் ஆள்காட்டி விரல் இவைகளால் இரண்டு மூக்கையும், சுண்டுவிரல் கட்டைவிரல்களால் இரண்டு காதுகளையும், கட்டை விரல் நடுவிரல்களால் இரண்டு பாஹுவையும், கட்டைவிரல் நுனியால் தொப்புளையும், மூன்று விரல்களால் மார்ப்பையும், எல்லாவிரல்களால் சிரஸ்ஸையும் தொடவும். இவைகளில் கொஞ்சம் வித்தியாசம் காணப்படலாம். அவர்களுடைய குலாசாரத்தின் படி அனுஷ்டிக்கவும்.

ஜலமத்யத்தில் நின்றுகொண்டு ஆசமனம் செய்யலாம். ஆனால் முழங்கால் அளவுக்கு குறைவாக உள்ள ஜலத்தில் நின்று கொண்டு ஆசமனம் செய்யக்கூடாது. தரையில் நின்றுகொண்டு ஒரு சமயமும் ஆசமனம் செய்யக்கூடாது.

ஸம்வர்த்தர்:— ஸ்நானம் செய்த பிறகும், சாப்பிட்ட பிறகும், திரவப் பதார்த்தங்களைப் பருகின பிறகும், தும்மிய பிறகும், தூக்கத்திற்குப் பிறகும் முறைப்படி ஆசமனம் செய்ய வேண்டும்.

ஜப காலங்களில் அசுத்தத்தைப் பார்த்தால் ஆசமனம் செய்து பிறகு ஜபிக்கவும்.

பராசரர்:— ப்ரபாஸாதி தீர்த்தங்கள் கங்காதிநதி கள், ஆதித்யன், வருணன், சந்திரன், அக்னி, வாயு, இவர்கள் ப்ராம்மணனுடைய வலது காதில் எப்பொழு தும் இருக்கிறார்கள் என்பது மனு, பராசரர் இவர் களுடைய அபிப்ராயம்.

ஆசமனம் செய்ய முடியாவிட்டால், ஆசமன யோக்யமான ஜலம் கிடைக்காவிட்டாலும், முன் சொன்ன ஆசமன நிமித்தம் ஏற்பட்டால் வலது காதைத் தொடவும். அது ஆசமன ஸமானமாகும். போஜனம், ஹோமம், தானம், பக்ஷணம் தின்பது, தானம் வாங்குவது இந்த காரியங்களில் இரண்டு தடவை ஆசமனம் செய்யவும்.

மார்கண்டேயர்:— மாம்பழம், கரும்புத்துண்டு, தாம்பூலம், ஸோம பானம், இவைகளை பக்ஷித்த பிறகு ஆசமனம் செய்யவேண்டாம். விஷ்ணு பாத தீர்த்தம் சாப்பிட்ட முன்பும், பின்பும் ஆசமனம் செய்யக்கூடாது. கையையும் அலம்பக்கூடாது.

## 6. பல் துலக்கும் முறை.

அத்ரி:— பிரதி தினமும் முகம்(வாய்) பழையதாக ஆகிறது. ஆகையால் அசுத்தனாக ஆகிறான். விதிக்கப் பட்ட மரக்குச்சிகளைக் கொண்டு பல் துலக்க வேண்டும். பிறகு பல், வாய் சுத்தமாகிறது.

பரத்வாஜர்:— கால்கள், கைகள், முகம், இவை களை அலம்பிக்கொண்டு ஆசமனம் செய்து கிழக்கு முகமாக உட்கார்ந்து கொண்டு பல்துலக்க வேண்டும்.

எந்த மரக்குச்சியினால் பல் துலக்கும் காரியம் செய்கிறோமோ அந்த மரக்குச்சியை "ஆயு:" என்ற மந்திரத்தினால் அபிமந்த்ரணம் செய்யவேண்டும். மந்திரம் சொல்லாமல் செய்யும் தந்ததாவன காரியம் வீணாக ஆகிறது என்பது கருத்து.

ரிஷி சந்தஸ் தேவதையுடன் இந்த மந்திரம் சொல்லி பல் குச்சியினால் பற்களைத் துலக்கவும்.

ஹாரீதர்:— முள்ளுள்ள எல்லா மரங்களுடைய குச்சிகளும் பல் துலக்க தகுந்தவைகள், புண்யத்தைக் கொடுக்கக் கூடியவைகள். பால் உள்ளவை கீர்த்தி யைக் கொடுக்கும். எட்டு அங்குல நீள முள்ளதாகவும், சுண்டு விரலின் நுனி அளவு பெருமன் உள்ளதாயும் இருக்கிற பச்சை குச்சியினால் பல் துலக்கவேண்டும்.

கருங்காலி, கடம்பை, புன்கு, சாரடை, க்ளா, மூங்கில், வெண் மந்தாரை, நாவல், வேம்பு, நாயுருவீ, பில்வம், எருக்கு, அத்தி, இந்த வ்ருக்ஷங்களுடைய குச்சிகள் பல்துலக்க ச்லாக்கியமானவை என்று அறிய வும். அச்வத்தம், புரசு, சிம்சுபா, இந்த வ்ருக்ஷங்கள் பல் துலக்க வர்ஜிக்க வேண்டியவை. பில்வமும் பல்துலக்க உகந்தது இல்லை என்று சில மஹரிஷிகள் நிஷேதித் திருக்கிறார்கள்.

எமன்:— சதுர்தசீ, அஷ்டமீ, அமாவாஸ்யை, பூர்ணிமா, சங்கரமணம், இவைகளில் ஸ்த்ரீ ஸங்கமம், மாமிஸம், தந்த காஷ்டம் இவைகளை வர்ஜிக்க வேண்டும். (மாமிஸம் க்ஷத்ரிய விஷயம் என்று அறியவும்.)

ச்ரார்த்தம், உபவாஸம் இந்த தினங்களில் குச்சியினால் பல் துலக்குவது பாப காரியமாகும். தவறிச் செய்தால் 100 தடவை காயத்ரீ ஜபித்த தீர்த்தத்தைப் பருகவேண்டும். இது ப்ராயச்சித்தம் என்று அறியவும்.

புல், இலை இவைகளால் அமாவாஸ்யை. ஏகாதசீ, திதிகள் தவிர எந்த நாளும் பல்துலக்கலாம். நாவல், இச்சி, மாவிலை, இவைகளுடைய இலைகளால் என்றைக்கும் பல் துலக்கலாம். இவைகளில் மாவிலை பல் துலக்க ச்லாக்கியமானது. விதவை, ப்ரம்மசாரி, கன்னிகை ஒரு நாளும் குச்சியினால் பல் துலக்குவது கூடாது.

பல் துலக்கும் சூர்ணங்களைக் கொண்டு ஆள் காட்டி விரலைத் தவிர்த்து மற்ற நடுவிரல், பவித்ரவிரல் கட்டை விரல் இவைகளால் தந்ததாவனம் செய்யவும்.

## 7. ஸ்நானம் செய்யும் முறை.

வ்யாஸர்:— ப்ராத: காலம் வந்தவுடன் எழுந்து, அவசியம் செய்யவேண்டிய சரீரசுத்தி, தந்ததாவனம், இவைகளைச் செய்து கொண்டு மஹா நதிகளில் முறைப்படி ஸ்நானம் செய்யவேண்டும்.

ஸத்யவ்ரதர்:— மனிதன் ஸ்நானம் செய்வதால் பலம், அழகு, புகழ், தர்மம், ஞானம், சுகம், தைரியம், உயர்ந்த ஆரோக்கியம் இவைகளை அடைகிறான்.

அத்ரி:— ஸ்நானம் செய்யாமலும், ஜபம் செய்யாமலும், ஹோமம் செய்யாமலும், தானம் கொடுக்காமலும்,

சாப்பிடக்கூடாது. அப்படி சாப்பிட்டால் சாப்பிட்ட பதார்த்தம் மலத்திற்கும், சீ, ரக்தத்திற்கும், புழுவுக்கும், விஷத்திற்கும் சமமாகும் என்பது கருத்து.

வேத தர்ம சாஸ்திரங்களில் சொல்லப்பட்ட ஸகல காரியங்களும் மனுஷ்யர்களுக்கு ஸ்நானம் செய்த பிறகு அனுஷ்டிக்கவேண்டும் என்று சொல்லப்பட்டிருக்கிறது. ஸ்னானம் செய்யாதவன் ஜபம், ஹோமம், முதலிய எந்த கர்மாக்களுக்கும் தகுதியுள்ளவானாக மாட்டான் என்பது கருத்து.

ப்ராத: காலத்திலும், மத்யான்ஹத்திலும் ஆக இரண்டு காலத்திலும் க்ருஹஸ்தன் வநஸ்தன் இரண்டு ஆச்ரமிகளும் ஸ்நானம் செய்யவேண்டும். ஸந்நியாசிகள் ப்ராத:காலம், மத்யானிஹம், ஸாயங்காலம் ஆக மூன்று காலங்களிலும் ஸ்னானம் செய்யவேண்டும். ப்ரம்மசாரி காலையில் மட்டும் ஒரு வேளை ஸ்னானம் செய்ய வேண்டும்.

எல்லா ஆச்ரமிகளும் உடம்பு அசௌகரியமாக இருந்தால் ஒரு தரம் ஸ்நானம் செய்யலாம். போதுமான ஜலம் இல்லாவிட்டாலும் ஒரு தரம் ஸ்னானம் செய்யலாம். உடம்பு சௌகரியமாக இருந்து ஜல சௌகரியமிருந்து சோம்பேறித்தனம் காரணமாக ஸ்நானம் செய்யாமல் இருக்கக்கூடாது. ஸ்நானம் ப்ராம்மணர்கள் அப்ராம்மணர்கள் எல்லோருக்கும் விஹிதமானது என்று அறியவும்.

சௌனகர்:— ஜல மத்யத்தில் நின்றுகொண்டு ப்ராம்மணன் மனதில் வேறு எண்ணம் இல்லாமல்

ஹரியை ஸ்மரித்து ஸ்நானம் செய்து ஆசமனம் செய்து ஜலத்தில் முழுகிக் கொண்டு மூன்று தரம் அகமர்ஷன ஸூக்தம் சொல்லவேண்டும்.

தக்ஷன்:— ஸ்நானம் முதலிய ஸகல காரியங்களி லும் நாராயணனை அவசியம் தியானம் செய்ய வேண்டும். அதனால் கர்ம பந்தும் விலகி ப்ரம்மலோ கத்தை அடைகிறான். மறுபடியும் இந்த லோகத்தில் பிறக்கமாட்டான்.

ஸங்கல்பம், வருணஸூக்தம் சொல்வது, மந்திரத் துடன், தீர்த்தத்தை ப்ரோக்ஷித்துக் கொள்வது, அகமர் ஷன ஸூக்தம் சொல்வது, தேவதைகளுக்குத் தர்ப் பணம் செய்வது என்று ஸ்நானமானது ஐந்து அங்கத் துடன் கூடியதாகும்.

குளங்களில் ஸ்நானம், ப்ராம்மணனுடைய காலை அலம்புவது, காயத்ரீ ஜபம், அர்க்யம் இவைகள் ஸூரியனுக்கு எதிர் முகமாகச் செய்ய வேண்டும்.

நதிகளில் ஸ்நானம் செய்யும் பொழுது ப்ரவா ஹத்திற்கு எதிர் முகமாக ஸ்நானம், மார்ஜனம், அகமர்ஷணம், இவைகள் செய்யவேண்டும். மற்ற இடங்களில் ஸூர்யனுக்கு எதிரில் ஸ்நானம் செய்ய வேண்டும். ராத்திரியில் கிழக்கு முகமாகவோ அல்லது வடக்கு முகமாகவோ ஸ்நானம் செய்யவேண்டும். தேவதைகளுக்கு எதிரில் உள்ள குளங்களில் தீர்த்தங் களில் தேவதைகளுக்கு எதிர்முகமாக ஸ்னானம் செய்யவேண்டும்.

ஸ்னானம் செய்யும் முறை சொல்லப்படுகிறது. குடுமியை முடிந்துகொண்டு ஆசமனம் செய்து கரையை அலம்பி தர்ப்பத்தை வைத்துவிட்டு பவித்ரம் தரித்து ஸங்கல்பம் செய்து, அஞ்சலி செய்து வருணஸூக்தம் முதலியவையால் ஜல தேவதையை நமஸ்கரித்துப் பிறகு ஸ்நானம் செய்யவேண்டும். பிறகு கக்ஷம் முதலியவைகளைத் துடைத்துக்கொண்டு மறுபடியும் ஸ்நானம் செய்து இரண்டு தரம் ஆசமனம் செய்து 'ஆபோஹிஷ்ட' என்ற மந்திரத்தினால் மார்ஜனம் செய்துகொண்டு அகமர்ஷணம் ஜபித்து மறுபடியும் ஸ்நானம் செய்து இரண்டு தரம் ஆசமனம் செய்து தர்ப்பனம் செய்யவேண்டும். இவைகள் சிஷ்டர்களைப் பார்த்துத் தெரிந்து கொள்ளவும்.

உடம்பு சரியாக இல்லாதவன் வென்னீரில் ஸ்நானம் செய்யவும்.

ஸ்கந்தர்:— உதயத்திற்கு முன்பு நான்கு நாழிகைகள் அருணோதய காலமாகும். அப்பொழுது ஸ்நானம் செய்வது ச்லாக்கியமானது. அதாவது 41/2 மணி அளவில் விடியற்காலையில் ஸ்நானம் செய்யவேண்டும் என்பது கருத்து.

ஸ்நானமானது நித்யஸ்நானம், நைமித்திகம் ஸ்நானம், காம்யம் ஸ்நானம், என்று மூன்று விதமானது. அவைகளிலும் தர்ப்பணம் முதலியவைகள் அவசியம் செய்யவேண்டும். க்ஷவரம் செய்துகொண்டு ஸ்நானம் செய்வது நைமித்திக ஸ்நானமாகும். அதே மாதிரி தீட்டு ஸம்பவித்தால் ஸ்னானம் நைமித்திக ஸ்நானமாகும். இந்த இடங்களில் இரண்டு ஸ்நானங்கள்

சொல்லப்பட்டிருக்கிறது. அப்பொழுது முதல் ஸ்நானம் சாதாரணமாக செய்து துடைத்துக்கொண்டு மறுபடியும் செய்யும் ஸ்னானத்தில் தர்பணம் முதலியவைகள் அவசியம் செய்யவேண்டும்.

விஷ்ணு:— ஸ்னானங்க தர்ப்பணம் ஈரவேஷ்டியுடன் ஜலத்தில் நின்றுகொண்டு செய்யவேண்டும்.

பரத்வாஜர்:— தேவர்கள் முதலியவர்களுக்குத் தர்ப்பணத்தை அந்த அந்த தீர்த்ததினால் செய்யவேண்டும். பசுவின் கொம்பு அளவு உயர்த்தி ஜலத்தால் தர்ப்பணம் செய்யவும். தேவர்கள், பித்ருக்கள் ரிஷிகள் இவர்களுக்குச் சொல்லப்பட்ட தீர்த்தத்தால் தர்ப்பணம் செய்யவேண்டும். மாற்றிச் செய்தால் ஜலம் ரக்தமாக ஆகிவிடும். தேவர்கள் முதலியவர்களுக்குத் திருப்தியை உண்டுபண்ணாது என்பது கருத்து.

கிழக்கு முகமாக உபவீதியாக இருந்துகொண்டு தேவர்களுக்கும், வடக்கு முகமாக ப்ராசீனவீதியாகப் பிதுர்களுக்கும் ஜலமத்யத்தில் நின்றுகொண்டு இரண்டு கையாலும் ஜலத்தினால் தர்ப்பணம் செய்யவேண்டும்.

தேவரிஷிதர்ப்பணம் செய்த பிறகு யக்ஷ்மா என்ற தேவதையை உத்தேசித்து கரையில் தர்ப்பணம் செய்யவேண்டும். நான் ஜலத்தில் ஸ்நானம் செய்ததால் என் சரீரத்தின் அழுக்கு ஜலத்தை அசுத்தமாகச் செய்தது. அந்த தோஷத்தை விலக்குவதற்காக யக்ஷ்மா என்ற தேவதையை உத்தேசித்துத் தர்ப்பணம் செய்கிறேன் என்பது மந்திரத்தின் பொருள் என்று அறியவும்.

ப்ராம்மணன் ஸ்நானம் செய்த பிறகு, கரையில் பூணூலை இடம்போட்டுக்கொண்டு, தேஹத்தில் உள்ள ஜலம் வடியும் வரையில் மௌனமாக பிராணிகள் திருப்தியடைவதின் பொருட்டு நிற்கவேண்டும்.

குடுமியின் ஜலம் பின்புறமாக விழுந்தால் கள்ளு க்கு ஸமமாகும், அந்த ஜலம் முன்புறமாக விழுந்தால் கங்கா தீர்த்தத்திற்கு ஸமமாகும். ஆகையால் முன் புறமாக குனிந்து கொண்டு நின்று ஜலத்தை பூமியில் விழச்செய்ய வேண்டும்.

மேல் வேஷ்டியை நான்காக மடித்து ஜலத்தை வஸ்த்திரத்தின் நுனிவழியாக விழும்படி பிழிய வேண்டும். மூன்றாக மடித்துப் பிழியக்கூடாது. ஜல மத்யத்தில் பிழியக்கூடாது. கரையில் தான் பிழிய வேண்டும். நிவீதியாக ஜலம் பிழிய வேண்டும்.

நாலாக மடித்த மேல் உத்தரீயத்தை கரையில் பிழிந்து பிறகு பூணூலை சரியாக உபவீதியாகப் போட்டுக்கொண்டு இடது கை மணிகட்டு பாகத்தில் வஸ்த்திரத்தை வைத்து இரண்டு ஆசமனம் செய்ய வேண்டும்.

ஸ்நானம் செய்து, தேவர்கள், ரிஷிகள், பித்ருக்கள் இவர்களுக்குத் தர்ப்பணம் செய்து,பிறகு ஆசமனம் செய்து இரண்டு துண்டு வஸ்த்திரங்களால் சிரஸ்ஸை யும், உடம்பையும் துடைத்துக்கொள்ள வேண்டும். தலைமயிரைக் கையினால் தட்டக்கூடாது.

## 8. அநேகவிதமான ஸ்னானங்கள்.

ஸ்னானமானது கௌணம், முக்யம் என்று இரண்டு விதமாகச் சொல்லப் படுகிறது.

தக்ஷன்:— ஆக்னேயம், வாருணம், ப்ராம்மம், வாயவ்யம், திவ்யம், மானஸம், பார்த்திவம், காபிலம், ஸாரஸ்வதம் என்று ஒன்பது விதமான ஸ்நானங்கள் சாஸ்திர பிரஸித்தமானவைகளாகும்.

பாரத்வாஜர்:— கை கால்களை அலம்பிக்கொண்டு கிழக்குமுகமாக ஆசமனம் செய்து ப்ராணாயாமம் செய்து, ஸங்கல்பம் செய்து பஸ்மஸ்நானத்தை ஆரம் பிக்கவேண்டும்.

அக்னிஹோத்ரம் முதலியவற்றிலிருந்து ஏற்பட்ட வெளுப்பான பஸ்மாவை எடுத்து ஈசான மந்திரத்தி னால் சிரஸில் உத்தூளனம் செய்துகொள்ள வேண்டும்.

தத் புருஷ மந்திரத்தினால் முகத்திலும், அகோர மந்திரத்தினால் ஹ்ருதயத்திலும், வாமதேவ மந்திரத்தி னால் குஹ்யத்திலும், ஸத்யோஜாத மந்திரத்தினால் பாதங்களிலும், ப்ரணவத்தினால் எல்லா அங்கங்களி லும் பஸ்மத்தினால் ஸ்னானம் என்று மஹரிஷிகள் சொல்லுகிறார்கள். இதற்கு அக்னிஹோத்ரபஸ்மா கிடைத் தால் ச்லாக்யம். ஆனால் எல்லா பஸ்மாவினாலும் ஆக்னேயஸ்நானம் செய்யலாம்.

வ்யாஸர்:— ஜல் தேவ தாக மந்திரத்தினால் ஜலத்தில் முழுகி ஸ்நானம் செய்து, பித்ருக்களுக்கும்

தர்ப்பணம் செய்து, தேவர்களுக்கும் செய்வது வாருணம் ஸ்நானம் என்று கூறப்படுகிறது.

*காத்யாயனர்:—* குசங்களுடைய நுனிபாகங்களால் ஆபோஹிஷ்டா முதலிய மந்திரங்களால் தேவ தீர்த்தத்தால் ப்ரோக்ஷணம் செய்து கொள்வது ப்ராம்ம ஸ்நானம் என்பதாகும். இதற்கு மந்திரஸ்நானம் என்றும் சொல்லுவார்கள்.

*பிரஹஸ்பதி:—* ஸூர்யன் அஸ்தமிக்கும் தருணத்தில், ஸாயங்காலத்தில் பசுமாட்டுக் குளம்பு அடிபட்டு அதிலிருந்து கிளம்பின புழுதி நம் சரீரத்தில் காற்றினால் விழுவது (அதனால் ஏற்பட்டது) வாயவ்ய ஸ்நானம் என்று சொல்லப்படுகிறது.

மஹான்களுடைய வாக்கினால், உபதேசத்தால் ஏற்பட்ட ஸ்நானம் ஸாரஸ்வதம் என்று கூறப்படுகிறது.

உத்தராயண காலத்தில் வெய்யிலோடு மழை ஏற்பட்டால் அதில் நனைந்ததினால் ஏற்படும் ஸ்நானத்திற்கு திவ்ய ஸ்நானம் என்று கூறப்படுகிறது.

சங்கு சக்ர கதாதரனாயும், சதுர்புஜங்களோடு கூடினவனாயும் இருக்கிற மஹா விஷ்ணுவை மனதினால் தியானம் செய்வது மானஸ ஸ்நானம் என்று சொல்லப்படுகிறது.

சுத்தமான பூமியிலிருந்து மண்ணை க்ரஹித்து மந்திரங்களினால் சரீரத்தில் பூசிக்கொண்டு ஸ்லானம் செய்வது பார்த்திவ ஸ்நானம் என்று கூறப்படுகிறது.

### 9. ஸ்நானத்திற்கு உகந்த ஜலங்கள்.

மனு:— மனுஷ்யர்களால் வெட்டப்பட்டது துடாகம் (குளம்) என்பதாகும். மனுஷ்யர்களால் வெட்டப்படாதது தேவகாதம் என்பதாகும், ரிஷிகளால் ஸேவிக்கப் பட்டது ஸரஸ் என்பதாகும். ஆக நதீ, தேவகாதம், துடாகம், ஸரஸ், கர்த்தம், அருவி இவைகளில் ஸ்நானம் செய்யலாம். கர்த்தம் என்பது வாய்க்கால் என்று பெயர். எண்ணாயிரம் வில் தண்ட தூரம் எது ஓடு கிறதோ அதற்கு நதீ என்று பெயர். அதற்குக் குறை வான தூரம் ஓடினால் கர்த்தம் என்று பெயர்.

மார்கண்டேயர்:— முன்னோர்களான அரசர்களா லும், மஹாத்மாக்களான ரிஷிகளாலும், தேவர்களா லும் நிர்மானம் செய்யப்பட்ட கிணறு, குளங்களில் தினம்தோறும் ஸ்நானம் செய்யலாம். கிணற்றில் எடுத்துச் செய்வதைக் காட்டிலும் பூமியில் உள்ள ஜலத்தில் முழுகி ஸ்னானம் செய்வது உத்தமம். அதைக் காட்டிலும் மலை அருவி ஜலம் புண்ணியம். அதைக் காட்டிலும் ஸரஸ்ஸில் உள்ள ஜலம் புண்ணியம். அதைக் காட்டிலும் நதி ஜலம் புண்ணியம். அதைக் காட்டிலும் பெரியோர்களால் ஸேவிக்கப்பட்ட தீர்த்தம் புண்ணியமானது. எல்லாவற்றையும் காட்டிலும் கங்கா ஜலம் மஹா புண்ணியமானது.

யோகயாக்ஞவல்க்யர்:— மற்றவர்களால் நிர்மாணம் செய்யப்பட்ட குளம் முதலியவைகளில் ஸ்நானம் செய்யக் கூடாது, அப்படி செய்ய நேர்ந்தால் ஏழு மண் பிண்டங்களை குளங்களிலிருந்து கரையில் எடுத்துப் போட்டுவிட்டுப் பிறகு ஸ்நானம் செய்யவும். பிறர்

கிணற்றில் ஸ்நானம் செய்ய நேர்ந்தால் மூன்று குடங்கள் ஜலத்தை கிணற்றிலிருந்து வெளியில் இறைத்துப் பிறகு ஸ்னானம் செய்யவும். தர்மத்திற்கு என்று கட்டிவிடப்பட்ட கிணறு, குளங்களில் மேற்கொண்டு சொன்ன நியமம் இல்லாமல் ஸ்நானம் செய்யலாம். பதிதர்களாலும் நாஸ்திகர்களாலும் நிர்மாணம் செய்யப்பட்ட ஜலாசயத்தில் ஸ்நானம் செய்தால் ப்ராஜாப்தயக்ருச்ரம் செய்துகொள்ள வேண்டும்.

நதி இருக்கும் பொழுது வேறு கிணறு முதலிய தீர்த்தத்தில் ஸ்நானம் செய்யக்கூடாது. பெரிய ஜலாசயம் இருக்கும்பொழுது சின்ன ஜலாசயத்தில் ஸ்னானம் செய்யக் கூடாது.

## 10. ஸமுத்ரஸ்நானம்.

அச்வத்த வ்ருக்ஷத்தையும் ஸமுத்ரத்தையும் எப்பொழுதும் ஸேவிக்கவேண்டும். ஆனால் ஸமுத்ரத்தில் பர்வ காலங்களில் ஸ்நானம் செய்யலாம். சனிக்கிழமையில் அச்வத்தத்தைத் தொட்டு பூஜை செய்யலாம். மற்ற காலங்களில் இரண்டையும் தொடக்கூடாது என்பது கருத்து.

பரத்வாஜர்:— க்ருஷ்ண பக்ஷத்தில் செவ்வாய் கிழமையோடு கூடின சதுர்தசியில் ஸமுத்ர ஸ்நானம் செய்யலாம். சதுர்தசியோடு வித்தமான பர்வாவில் சதுர்தசியை விலக்கி பர்வத்தில் ஸ்நானம் செய்யலாம். அதே மாதிரி புச்ச அம்மாஸ்யையில் அமாவாஸ்யை உள்ள சமயத்தில்தான் ஸ்நானம் செய்யவேண்டும். கர்பிணீபதி ஸமுத்ர ஸ்நானம் செய்யக்கூடாது.

ராமஸேதுவில் தினம்தோறும் ஸமுத்திரத்தில் ஸ்நானம் செய்யலாம். பர்வாவில் ஸ்னானம் செய்ய வேண்டும் என்று சாஸ்திரம் ராமேச்வரத்தைத் தவிர மற்ற இடத்தில் ஸமுத்திர ஸ்நானம் விஷயம் என்று அறியவும்.

வ்யாஸர்:— ஸ்நான காலங்களில் குருக்ஷேத்ரம், கயை, கங்கை, ப்ரபாஸம், நைமிசாரண்யம் இந்த புண்ணிய க்ஷேத்ரங்களை ஸ்மரிக்கவேண்டும். ஒரு நதியில் ஸ்னானம் செய்யும்பொழுது மற்றொரு நதியை ஸ்மரிக்கக்கூடாது. ஆனால் கங்கையை ஸ்மரிக்க வேண்டும்.

ஜலம் து ஸ்வயம் ஶுத்தம், கிம் புன: அக்நி ஸம்யுதம்

ஜலம் எப்பொழுதும் பவித்திரமானது. அதில் அக்னி ஸம்பந்தம் ரொம்ப விசேஷமானது. ஆகையால் வெந்நீரில் ஸ்நானம் எப்பொழுதும் செய்யத் தகுந்தது. இந்த ஸ்நானம் ஆதுரனுடைய விஷயமாகும். உடம்பு சௌகரியமாக உள்ளவன் எப்பொழுதும் குளிர்ந்த ஜலத்தில் ஸ்னானம் செய்வதுதான் விசேஷமாகும். ஒரு பாத்திரத்தில் குளிர்ந்த ஜலத்தை வைத்து அதில் வெந்நீரை ஊற்றி கலந்து ஸ்நானம் செய்வது விசேஷமாகக் கருதப்படுகிறது.

### 11. நைமித்தகம் ஸ்நானம்.

விஷ்ணு: ஸங்கல்பம் முதலியதை செய்து பிறகு ஜலத்தில் ஸ்நானம் செய்து, ஜலத்தில் முழுகிக் கொண்டு மூன்று தடவை ஆகமர்ஷணம், தத்விஷ்ணோர் பரமம்பதம், காயத்ரீ, யுஞ்சதேமன: புருஷ ஸூக்தம் இவைகளில் ஏதாவது ஒன்றை ஜபித்து

ஜலத்தில் இருந்துகொண்டே தேவரிஷி பித்ரு தர்ப்பணம் செய்யவும்.

மனு:— ரஜஸ்வலை, ப்ரஸவித்தவள், பதித, பகலில் சொல்ல தகுந்தவன், பிணம் பிணத்தைத் தொட்டவன், இவர்களைத் தொட்டவன், கட்டிக்கொண்ட வேஷ்டியுடன் உடனே ஸ்நானம் செய்ய வேண்டும்.

பராசரர்:— துர்ஸ்வப்னம் கண்டாலும், வாந்தி பண்ணினாலும், க்ஷவரம் செய்துகொண்டாலும், மைதுனம் செய்தாலும், தன் சரீரத்தில் ப்ரேதப் புகை பட்டாலும் உடனே ஸ்நானம் செய்யவேண்டும்.

ஸம்வர்த்தர்:— நெருக்கமான இடத்திலும், மேடு பள்ளம் உள்ள இடத்திலும் அதிகமாகச் செல்ல முடியாத இடத்திலும் கடைத் தெருவிலும், பட்டணம் (நகரம்) இவைகளுடைய வழியிலும் முடிந்த வரையில் ஒதுங்கவும். ஏதாவது புல், கட்டை, சுவர் இந்த மறைவுள்ள இடத்தில் ஒதுங்கலாம். அல்லது மாடு வாலை வீசினால் எவ்வளவு தூரம் அகப்படுமோ அவ்வளவு ஒதுங்கினாலும் போதுமானது; ஸ்நானம் அவசியம் இல்லை.

ஆபஸ்தம்பர்:— நாய் உடம்பில் பட்டால் ஸசேலம் ஸ்நானம் செய்யவேண்டும். அல்லது எந்த இடத்தில் பட்டதோ அந்த அங்கத்தை அக்னியில் காண்பித்து அலம்பி பிறகு கால்களை அலம்பி ஆசமனம் செய்தால் சுத்தனாகிறான். சிலர், நாய் நாபிக்கு கீழ் பிரதேசத்தில் பட்டால் அந்த இடத்தை

அலம்பி ஆசமனம் செய்தால் போதும், நாபிக்கு மேல் உள்ள அங்கங்களில் நாய் பட்டால் உடனே ஸ்நானம் செய்யவேண்டும் என்று சொல்லுகிறார்கள்.

தேவதைகளுடைய உத்ஸவதர்சனம் முதலிய காரியம் செய்த பிறகும், மங்கள காரியம் செய்த பிறகும், பந்து ஸ்நேஹிதர் இவர்களை வழி அனுப்பிய பிறகும் ஸ்நானம் செய்யக்கூடாது. சாப்பிட்ட பிறகு ஸ்நானம் செய்யக்கூடாது. பாதி ராத்திரியில் ஸ்நானம் செய்யக்கூடாது.

மனு:— க்ரஹணம், ஸங்க்ரமணம், விவாஹம், ஜனனம், இவைகளில் இரவிலும் ஸ்நானம், தானம் செய்யலாம். காம்ய வ்ரதங்களிலும் ராத்திரியில் ஸ்நானம், தானம் இவைகள் செய்யலாம். இவைகளைத் தவிர்த்து மற்ற சமயங்களில் ராத்ரியில் ஸ்நானம் செய்யக்கூடாது என்று அறியவும்.

மரீசி:— ராத்திரியில் ஸ்நானம் செய்யவேண்டிய நிமித்தம் ஏற்பட்டால் பகலில் கொண்டுவந்த ஜலத்தைக் கொண்டு ஸ்னானம் செய்யலாம். அது இல்லாவிடில் அக்னி ஸாக்ஷியாக நதிகள், குளங்களில் ஸ்நானம் செய்யவும்.

சந்திர, ஸூரியர்களுடைய க்ரஹண புண்ய காலங்களில் கங்கைக்குச்சென்று ஸ்நானம் செய்வது ரொம்ப விசேஷம். மற்ற நதிகளிலும் ஸ்னானம் செய்யலாம்.

வ்யாஸர்:— க்ரஹண புண்ய காலத்தில் எல்லா தீர்த்தமும் கங்கைக்குச் சமமானது. எல்லா ப்ராம்மணர்

களும் பகவானுக்குச் சமமானவர்கள். எந்த தானமும் பூமி தானத்திற்குச் சமமானது என்று அறியவும்.

வஸிஷ்டர்:— கோடிக்கணக்கான பசுக்களை தானம் செய்த பலனானது ஸூரிய சந்திர க்ரஹண புண்ய காலத்தில் கங்கையில் ஸ்நான மாத்திரத் தினால் கிடைக்கிறது.

சந்திர, ஸூர்ய க்ரஹண புண்ய காலங்களில் கங்கா ஸ்நானம் செய்தால் சகல புண்ய தீர்த்தத்தில் ஸ்நானம் செய்த புண்யம் கிடைக்கிறது. ஆகையால் தனித்தனியாக புண்ய தீர்த்தங்களுக்கு ஸ்நானம் செய்ய பூமியைச் சுற்ற வேண்டியதில்லை என்பது கருத்து.

சாதாதபர்:— க்ரஹண புண்ய காலத்தில் ஸ்நானம், தானம், பித்ருக்களை உத்தேசித்து ஹிரண்ய ச்ராத்தம் தர்ப்பணம், இவைகள் அவசியம் செய்ய வேண்டும். செய்தவர்களுக்கு அளவு கடந்த புண்ணி யம் கிடைக்கிறது. பானுவாரத்தில் ஸூர்ய க்ரஹண மும், ஸோம வாரத்தில், சந்திர க்ரஹணமும் சம்பவித் தால் இதற்கு சூடாமணி புண்ணிய காலம் என்பார் கள். ஜனன, மரணங்களுடைய ஆசௌசம் சம்பவித் தாலும் க்ரஹண காலங்களில் ஸ்னானம் செய்து தர்ப்பணம் செய்யலாம். அந்த சமயம் சுத்தி ஏற்படு கிறது என்று அறியவும்.

க்ரஹணம் என்பது தெரியும் பர்யந்தம்தான் புண்ணிய காலம். ஆகையால் முன்பும், பின்பும் புண்ணிய காலம் கிடையாது. சந்திர க்ரஹணம் ஏற்பட் டால் இரவிலும், ஸூரிய க்ரஹணம் ஏற்பட்டால் பகலிலும்தான், அனுஷ்டிக்க வேண்டும்.

## 12. ஸங்கிராந்தி

மேஷம் முதலிய பன்னிரெண்டு ராசிகளில் கிரம மாக மாதந்தோறும் சஞ்சரிக்கும் ஸூரிய பகவான், ஒரு ராசியிலிருந்து வேறு ராசிக்கு பிரவேசிக்கிற சமயம் ஸங்கர மணம் ஸங்கிராந்தி என்று சொல்லப்படுகிறது. அந்த புண்ணிய காலங்களில் செய்கிற ஸ்நானம், தானம், ஹவ்யம், கவ்யம், முதலிய புண்ணிய காரியங் களுக்கு ஏழு வருஷம் ஸூரியன் நல்ல பலன்களைக் கொடுக்கிறார். ஆகையால் புண்ணிய காரியங்களை அவசியம் அனுஷ்டிக்க வேண்டும் என்பது கருத்து.

தேவலர்:— ஸங்கிராந்தி சமயம் ஸூக்ஷ்மமானது, நம்மால் அறியமுடியாதது. ஆகையால் ஸங்கரமணத் திற்கு முன்பு முப்பது, பின்பு முப்பது நாழிகைகள் புண்ணிய காலமாகும் என்று அறியவும்.

இரண்டு அயனங்கள், நான்கு ஷடசீதிகள், நான்கு விஷ்ணுபதிகள், இரண்டு விஷூக்கள் ஆக பன்னி ரெண்டு ஸங்கிராந்திகள் என்று அறியவும். உத்ராய ணம், தக்ஷிணாயனம் என்பது மகர மாசத்திலும் கர்க்கடக மாசத்திலும் ஆக இரண்டு மாதத்திலும் வரும். மேஷ மாதத்திலும் துலா மாதத்திலும் ஆக இரண்டு மாதத்திலும் விஷூ என்பது வரும். அயனத் திற்கு பிறகும், விஷூவுக்குப் பிறகும் விஷ்ணுபதி, ஷடசீதி என்பது க்ரமமாக வரும் என்று அறியவும்.

(மகரம்—உத்ராயணம், கும்பம்—விஷ்ணுபதீ, மீனம் —ஷடசீதி,மேஷம்—விஷூ, ரிஷபம்—விஷ்ணுபதீ, மிது னம்—ஷடசீதி, கர்கடகம்—தக்ஷிணாயனம், — சிம்மம்

—விஷ்ணுபதீ, கன்னி—ஷடசீதி,துலா—விஷு, விருச்சிகம்—விஷ்ணுபதீ, தனுஸ்—ஷடசீதி). இவைகள் ஸங்க்ரமணத்திற்கு நாமதேயம் என்று அறியவும்.

ப்ருஹஸ்பதி:— தக்ஷிணாயனத்தில் முன் இருபது நாழிகைகள் புண்ணிய காலமாகும். உத்தராயணத்தில் பின் இருபது நாழிகைகள் புண்ணிய காலமாகும் என்பது விசேஷமாகச் சொல்லப்படுகிறது. மற்ற விஷு முதலிய பத்து ஸங்கரமணங்களிலும் முன்பும், பின்பும் பத்து பத்து நாழிகைகள் புண்ணிய காலம் என்று அறியவும். விஷு முதலிய ஸங்க்ரமணங்கள் இரவில் 45 நாழிகைக்கு முன்பு சம்பவித்தால் அன்று தர்ப்பணம் செய்யவேண்டும். 45 நாழிகைக்குப் பின்பு ஸங்கிரமணம் சம்பவித்தால் மறுநாள் தர்ப்பணம் செய்யவேண்டும். ஆனால் கர்க்கட ஸங்கரமணம் தக்ஷிணாயனம் இரவில் 45 நாழிகைக்குப் பின்பு அபர ராத்திரியில் சம்பவித்தாலும் அன்றுதான் புண்ணிய காலம். அதே மாதிரி உத்தராயணம், மகரஸங்கரமணம் இரவில் முன் ராத்திரி 45 நாழிகைக்கு முன்பு சம்பவித்தாலும் மறுநாள்தான் புண்ணிய காலம், தர்ப் தர்ப்பணம் முதலியது செய்ய வேண்டும் என்று அறியவும்.

அயனம் கோடி புண்ணியம், விஷீ ஆயிரம் புண்ணியம், ஷடசீதி, விஷ்ணுபதி இவ்விரண்டும் ஆயிரம் புண்ணியம் என்று ஸங்கரமணங்களுக்குப் புகழாரம் செலுத்தப்படுகிறது.

### 13. ரஜஸ்வலா ஸ்னானம்.

காத்யாயனர்:— ரஜஸ்வலா ஸ்திரீயானவள் மூன்று நாள் ஒதுங்கியிருந்து நான்காவது தினத்தில் ஸ்நானம் செய்து பிறகு சுத்தையாகிறாள்.

ரஜஸ்வலா ஸ்திரீயானவள் முதல் நாளில் சண்டாளியாகவும், இரண்டாவது தினத்தில் ப்ரஸவித்தவளுக்கு சமமானவளாயும், மூன்றாவது தினத்தில் ரஜஸ் உண்டானதற்கு என்ன அசுத்தமோ அந்த தர்மத்தை அனுசரித்தவளாயும், நான்காவது தினத்தில் ஸங்கவ காலத்தில் (8 1/2 மணிக்கு) ஸ்நானம் செய்கிறவளாயும் இருந்து சுத்தையாகிறாள் என்று சொல்லப்படுகிறது. ஸ்னானம் செய்யும் பொழுது 21 தடவை மண்ணினால் உடம்பில் பூசிக்கொண்டு 100 தடவை ஸ்னானம் செய்த பிறகு சுத்தையாகிறாள். ஸ்னானம் செய்த பிறகு சூரியனைப் பார்த்து ஸத் புத்ரனைப் பிரார்தித்து மூன்று தடவை அன்னத்தை புஜிக்க வேண்டும். இதுதான் சாஸ்திரீயமான விதியாகும் சுமங்கலி ஸ்திரீகளுக்கு என்பது கருத்து.

அத்ரி:— ரஜஸ்வலை ஸ்னானம் செய்துபிறகு மறுபடியும் 18 நாட்களுக்குள் ரஜோதர்சனம் ஏற்பட்டால் அதற்கு அசுத்தி கிடையாது. 18 நாட்களுக்குப் பிறகு ஏற்பட்டால் ஒரு நாள் அசுத்தி ஏற்படுக்கிறது. 20 தினங்களுக்குப் பிறகு ஏற்பட்டால் கிரமமாக மூன்று தினங்கள் விலகி இருந்து பிறகு நான்காவது தினத்தில் 8 1/2 மணிக்குமேல் ஸ்னானம் செய்யவேண்டும். பஹிஷ்டையாக இருக்கும்பொழுது கண்ணுக்கு மையிட்டுக் கொள்வது, தலைவாரிக்கொள்வது, கயிறு திரிப்பது முதலிய காரியங்கள் செய்யக்கூடாது. பார்க்கக் கூடாதவர்கள் பார்த்துத் தான் சாப்பிடக்கூடாது. அப்படி செய்தால் பிராயச்சித்தம் செய்யவேண்டும். ரஜஸ்வலை வேறு ரஜஸ்வலையை அல்லது தீட்டு உள்ளவர்களைத் தொட்டால் ஸ்னானம் செய்யும் வரையில் உபவாஸம் இருந்து மறுபடியும் மூன்று

தினம் தீட்டுக்காக்க வேண்டும். பஞ்சகவ்யம் சாப்பிட வேண்டும். ரஜஸ்வலையாக இருக்கும் பொழுது ஜனனமரணங்களுடைய அசௌசம் சம்பவித்தால் ஸ்னானம் செய்து போஜனாதிகள் செய்யவேண்டும். ஏகாதசி நடுவில் வந்தால் உபவாஸம் அவசியம் அனுஷ்டிக்க வேண்டும். ரஜஸ்வலையாக இருக்கும் பொழுது ஜ்வராதிரோகங்கள் ஏற்பட்டு நான்காவது தினத்தில் ஸ்நானம் செய்ய முடியாமல் போனால் எப்படி சுத்தி ஏற்படுகிறது என்று சொல்லப்படுகிறது. நான்காவது தினத்தில் 8 1/2 மணிக்குமேல் வேறு ஸ்திரீயானவள் ரஜஸ்வலையை தொட்டு பிறகு ஸ்னானம் செய்யவேண்டும். பிறகு வஸ்திரம் உடுத்திக் கொண்டு மறுபடியும் தொட்டு ஸ்னானம் செய்ய வேண்டும். இந்த மாதிரிப் பத்து தடவை ஸ்னானம் செய்து ஆசமனம் செய்து ஏதாவது தானம் செய்து விட்டு புண்யாஹவாசனம் செய்து தீர்த்தம் ப்ரோக்ஷித்துக் கொண்டு பிறகு சுத்தையாகிறாள்.

### 14. காம்ய ஸ்நானங்கள்

தேவதைகளுடைய தரிசனங்களிலும் விவாஹத்திலும் யக்ஞங்களிரும் உத்ஸவ காலங்களிலும் ஏற்பட்ட அஸ்ப்ருச்யர்களின் ஸ்பரிசம் தோஷமாகாது. ஆகையால் ஸ்னானம் செய்யவேண்டாம் என்பது கருத்து.

புலஸ்தியர்:— புஷ்ய நக்ஷத்திரத்திலும், தன் ஜன்ம நக்ஷத்திரத்திலும் வ்யதீபாதத்திலும், வைத்ருதியிலும் அமாவாஸ்யையிலும், நதியில் ஸ்நானம் செய்கிறவன் ஏழு குலங்களைப் பாபத்திலிருந்து காப்பாற்றுகிறான்.

பானுவாரம், பௌமவாரம், சனி வாரம் இந்த கிழமைகளில் எவர்கள் நதி ஸ்நானம் செய்கிறார் களோ அவர்களுக்கு மான்களால் சிங்கங்களைப் பிடிக்க முடியாததுபோல், வியாதி பீடிப்பது கிடையாது.

சைத்ர கிருஷ்ண சதுர்தசியில் சிவ ஸந்நிதியில் உள்ள குளம் முதலியவைகளிலும், அல்லது கங்கையி லும் எவன் ஸ்நானம் செய்கிறானோ அவனுக்கு இறந்த பிறகு ப்ரேதபாவம் ஏற்படுவதில்லை.

சாதாதபர்:— செவ்வாய்க் கிழமையோடு கூடிய அமாவாஸ்யையில் எவன் கங்கையில் ஸ்நானம் செய் கிறானோ அவனுக்கு ஆயிரக்கணக்கான பசுக்களை தானம் செய்த பலன் கிடைக்கும்.

கிருத்திகா மாதத்தில் எல்லா நாட்களிலும் நியமித்துடன் ஹவிஸ்ஸைச் சாப்பிட்டுக் கொண்டு மந்திரங்களை ஜபித்துக் கொண்டு தினந்தோறும் நதிகளில் எவன் ஸ்நானம் செய்கிறானோ அவன் ஸகல பாபத்திலிருந்தும் விடுபடுகிறான்.

துலா மாதத்திலும் மகர மாதத்திலும் மேஷ மாத த்திலும் நியமத்துடன் ப்ராத: ஸ்நானம் செய்வது மஹா பாபங்களைப் போக்கக்கூடியதாகும்.

நெல்லி பல சூர்ணங்களால் ஏகாதசீ அன்று ஸ்நானம் செய்வது விஷ்ணுவுக்கு சந்தோஷத்தைக் கொடுக்கும். ஆனால் பர்வ காலங்களிலும் ஸப்தமீ, நவமீ திதியிலும் ஸ்நானம் செய்யக்கூடாது என்பது கருத்து.

## 15. மலாபகர்ஷண ஸ்னானம்

பரத்வாஜர்:— எண்ணெய் தேய்த்து ஸ்நானம் செய்ய யோக்யமான திதி வாரங்கள் இப்பொழுது சொல்லப்படுகின்றன. சொன்ன திதி வாரங்களில் அப்யங்க ஸ்நானம் செய்தால் சரீர புஷ்டி, ஆரோக்யம், பல விருத்தி ஏற்படும் என்று அறியவும்.

சந்திரன், புதன், சனி, இவர்களின் வாரத்தில் அப்யங்கம் செய்து கொண்டால், அந்த வாராதிபதிகள் க்ரமமாக சாந்தியையும், ஸ்ரீயையும், விஷயபோகங் களையும் கொடுப்பார்கள். ஆகையால் திங்கள், புதன், சனி இந்த கிழமைகளில் அப்யங்க ஸ்நானம் பிரசஸ் தமானது என்று அறியவும்.

த்விதீயை முதல் நான்கு திதிகளும், ஸப்தமியும் நவமியும், தசமியும், த்ரயோதசியும், அப்யங்கம் செய்து கொள்ள உயர்ந்த திதிகளாகக் கருதப்படுகின்றன.

ஞாயிறு, செவ்வாய், வியாழன், வெள்ளி இந்த கிழமைகளில் எண்ணெய் தேய்த்துக்கொள்ளக்கூடாது; ஸங்கரமணம், வ்யதீபாதம், ஜன்ம நக்ஷத்திரம், இவை களிலும் அப்யங்க ஸ்நானம் செய்யக்கூடாது.

ஏகாதசீ, சதுர்தசீ, அஷ்டமீ, ப்ரதமை, பர்வம் இவைகளில் அப்யங்க ஸ்னானத்தை வர்ஜிக்கவேண் டும். உத்திரம், கேட்டை திருவோணம், திருவாதிரை, ராத்ரி இவைகளிலும் சுகத்தை விரும்புகிறவன் அப்யங்க ஸ்நானம் செய்யக்கூடாது.

குழந்தைகள், வியாதியினால் பீடிக்கப்பட்டவர்கள், வயது ஆனவர்கள் இந்த ஜீவர்கள் விஷயத்தில் சமயத்திற்குத் தகுந்தவாறு அப்யங்க ஸ்நானமும், வெந்நீரில் ஸ்நானம் செய்வதும் தோஷத்தை உண்டுபண்ணாது என்று அறியவும்.

### 16. நரக சதுர்தசீ ஸ்நானம்.

ஆச்வயுஜ க்ருஷ்ணபக்ஷத்தில் சதுர்தசியில் ஸூர்யோதயத்தில் தைலாப்யங்கம் செய்துகொண்டு வெந்நீரில் ஸ்நானம் செய்யவேண்டும்.

ஸ்வாதி நக்ஷத்திரம், பானுவாரம் இவைகளுடன் கூடிய ஆச்வயுஜ கிருஷ்ண சதுர்தசியினுடைய விடியற்காலத்தில் ஸம்பத்தை விரும்புகிறவர்கள் வாசனை உடன் கூடிய தைலத்தினால் அப்யங்க ஸ்னானம் செய்யவேண்டும். ஸ்நானம் வெந்நீரில் செய்யவும். அன்றைய தினம் தீபாவளி ஆகையால் தைலத்தில் மஹாலக்ஷ்மியும், வெந்நீரில் கங்கையும் வசிக்கிறார்கள். ஆகையால் அலக்ஷ்மீயை விலக்கிக் கொள்ள அவசியம் அப்யங்க ஸ்நானம் செய்யவும். பிறகு புது வஸ்திரம், ஆபரணங்கள் இவைகளைத் தரித்துக் கொள்ளவும். ஆச்வயுஜ க்ருஷ்ண சதுர்தசீ விடியற்காலத்தில் இருக்கும் தினம் தீபாவளி என்று சொல்லப்படுகிறது. ஸ்வாதி பானு வாரம் இவைகள் எப்பொழுதாவது அந்த சமயத்தில் சம்பவிக்கும். அந்த புண்ணியகாலம் விசேஷமானது என்று அறியவும்.

எந்த சதுர்தசியினுடைய பின்ராத்திரியில் நரகாசுரன் விஷ்ணுவினால் வதம் செய்யப்பட்டானோ அந்த நரகசதுர்தசீ புண்ணியகாலத்தில் நரகத்திலிருந்து தன்னை விலக்கிக்கொள்ள அப்யங்க ஸ்நானம் செய்ய வேண்டும்.

யமன்:— நெய், கடுகு எண்ணெய், புஷ்ப வாசனை யேற்றப்பட்ட தைலம், காய்ச்சப்பட்ட தைலம், இவை கள் அப்யங்க ஸ்நானத்திற்கு எப்பொழுதும் உப யோகப் படுத்தலாம். க்ஷவரம் செய்துகொண்டு எண் ணெய் தேய்த்து ஸ்நானம் செய்யக்கூடாது. நல்ல எண்ணெயில் சொட்டு ஆஜ்யம் கலந்துகொண்டு நிஷித்தமான தினத்திலும் அப்யங்க ஸ்நானம் செய்ய லாம். துளசீதளம் எண்ணெயில் போட்டுக்கொண் டால் திதி, வார நக்ஷத்திரத்தினுடைய தோஷம் சம்பவிக்காது. ஆனால் த்வாதசியில் எக்காரணத்தைக் எக்காரணத்தைக் கொண்டும் எண்ணெய் தேய்த்துக் கொள்ள கூடாது.

மஹாராஜனே எவன் ப்ராம்மணர்களுக்கு தைலாப் பயங்கம் செய்விக்கிறானோ அவன் நூறு வருஷங் களில் கங்கா ஸ்நானம் செய்தவனாகக் கருதப்படு கிறான். ஸ்திரீகள் வெள்ளிக்கிழமையிலும், செவ் வாய்க் கிழமையிலும் அப்யங்க ஸ்னானம் செய்வது ச்லாக்கியமானது என்று அறியவும்.

## 17. நதிகளுக்கு ரஜஸ்வலா தோஷம்

கோதாவரீ, பீமரதி, துங்கபத்ரா, வேணிகா, தாபீ, பயோஷ்ணிகா, இவைகள் விந்திய பர்வதத்திற்கு தெற்கில் உள்ள மஹா நதிகள் என்றும், கங்கை, நர்மதா, யமுனா, ஸரஸ்வதீ, விசோகா, விதஸ்த்தா, இவைகள் விந்திய பர்வத்திற்கு வடக்கு திக்கில் உள்ள மஹா நதிகள் என்றும் ஆக 12 மஹா நதிகள் என்று சொல்லப்படுகிறது.

கங்கை, யமுனா, கோதாவரீ, துங்கபத்ரா, காவேரி இந்த புண்ணிய நதிகள் மஹா நதிகள் என்று சொல்லப்படுகிறது.

ஆடி மாதத்தில் ஆரம்பத்திலிருந்து மூன்று நாட்களில் மஹா நதிகளுக்கு ரஜஸ்வலா தோஷம் ஏற்படுகிறது. ஆகையால் இந்த மூன்று நாட்களில் நதிகளைத் தொடக்கூடாது. நான்காவது தினத்தில் இருந்து கங்கைபோல் சுத்தமாகிவிடுகிறது. அதிலிருந்து ஸ்நானம் முதலியது அனுஷ்டிக்கலாம். கங்கைக்கு ரஜஸ்வலா தோஷம் கிடையாது என்பது மஹரிஷி களுடைய அபிப்ராயம்.

தீர்த்தங்களுக்கு ஸ்நானம் செய்யப்போகிறவர் களுக்கு நியமம் சொல்லப்படுகிறது. குடை பிடித்துக் கொண்டு சென்றால் தீர்த்த ஸேவா பலம் கால் பங்கும், செறுப்பு தரித்துச் சென்றால் பாதி பங்கும், டோலியில் போனால் முழு பலமும் நசித்துவிடுகிறது. ஆகையால் வசதி செய்து கொள்ள பணம் இருக்கிறது என்று மேற்படி சௌகர்யங்களைச் செய்துகொண்டு தீர்த்தத்திற்குச் செல்லக்கூடாது. நடந்து செல்ல வேண்டும். ஆதுரனாக இருந்தால் மாட்டு வண்டியில் போகாமல் குதிரை வண்டியில் செல்லலாம் என்று சொல்லுகிறார்கள்.

### 18. வஸ்திரம் தரித்துக்கொள்வது.

ஹாரீதர்:— ஜலத்திலிருந்து கரையையடைந்து அவ்விடத்தில் இரண்டு வெளுப்பான சுத்தமான வஸ் திரங்களைத் தரித்து உத்தரீயத்தையும் தரிக்கவேண்டும்.

பிறகு மண்கலந்த ஜலத்தால் கால்களை அலம்ப வேண்டும். தலை மயிர்களை உதரக்கூடாது.

நதி, குளங்கள், இவைகளில் ஸ்நானம் செய்யும் பொழுது மேலே காய்ந்த வஸ்திரத்தைச் சுற்றிக் கொண்டு அடியில் ஈர வஸ்திரத்தை கீழே விஸர்ஜனம் செய்ய வேண்டும். மற்ற கிணறு முதலிய இடங்களில் ஸ்னானம் செய்யும் பொழுது மேலாக ஈர வஸ்திரத்தை எடுத்துப் போடவேண்டும். உத்தரீயத்தைத் தலையில் சுற்றிக்கொண்டு பூணூலை மாலையாகக் காதில் சுற்றிக்கொண்டு வஸ்திரம் தரித்துக்கொள்ளவும்.

ப்ருகு:— சிகப்பு முதலிய அதிக சாயமேற்றிய வஸ்திரம், நீல வஸ்திரம், கருப்பு வஸ்திரம், தலைப்பு இல்லாத வஸ்திரம், ஈரமான வஸ்திரம் இவைகளை ஒரு பொழுதும் உடுத்திக்கொள்ளக்கூடாது. ஓரத்தில் நீலக்கரை கருப்புக்கரை போட்ட வஸ்திரமும் உடுத்திக்கொள்ளக் கூடாது.

கச்சமில்லாதவனும், வஸ்திரத்தின் நுனி பாகத்தினுடைய ஒரு பக்கத்தைச் சொருகிக் கொண்டு மற்ற பக்கத்தை விட்டு வைக்கிறவனும், தலைப்பைவிட்டு நடுவில் சொருகிக்கொள்கிறவனும், மேல் தூக்கி கச்சம் தரித்தவனும், அரைஞாண் கயிற்றில் கட்டிய கச்சம் தரித்தவனும், இந்த ஐந்துபேரும் துணி உடுத்தாதவர்கள் என்று சொல்லப்படுகிறார்கள். அதாவது வஸ்திரம் தரிக்காதவருக்குச் சமமானவர்கள் ஆவர் என்பது கருத்து.

கடிசூத்திரம் (இடுப்புக் கயிறு) இல்லாமல் எவன் ச்ரௌத ஸ்மார்த்த கர்மாக்கள் செய்கிறானோ

அவனுடைய காரியங்கள் நிஷ்பலமாகும். இவனும் வஸ்திரமில்லாதவனுக்குச் சமமானவன்.

கச்சமில்லாமல் தட்டுசித்துக் கட்டிக்கொண்டவனும் ,உத்தரீயமில்லாதவனும், வஸ்திரமில்லாதவனும் நக்னன் (துணி உடுத்தாதவர்கள்) என்று சொல்லப் படுகிறது. இப்படி உள்ளவன் ச்ரௌத ஸ்மார்த்த கர்மாக்களை செய்யக்கூடாது. செய்தால் ஆஸுரமாகும் (அசுரர்களுக்குப் பிரியமானது) என்பது கருத்து.

ஏழு தடவை உதரிய ஈர வஸ்திரம் காய்ந்த வஸ் திரத்திற்கு சமமாகும். இது ஆபத்தர்மமாகும்.

சுசீவ: — என்ற மந்திரத்தினால் வஸ்திரத்தை ப்ரோக்ஷித்து, தேவஸ்யத்வா என்ற மந்திரத்தினால் வஸ்திரத்தை எடுத்து,

அவதூதம் என்ற மந்திரத்தினால் உதறி, தரணி, அல்லது உதித்யம் என்ற மந்திரத்தினால் ஸூரிய னிடம் வஸ்திரத்தைக் காண்பித்து, ஆவஹந்தீ என்ற மந்திரத்தினால் தரித்துக்கொள்ள வேண்டும்.

யோகயாக்ஞவல்கியர்: — ஸ்நானம், தானம், ஜபம், ஹோமம், வேதம் சொல்வது, தர்ப்பணம், ச்ராத்தம், போஜனம் மற்ற ஸத் கர்மாக்கள் இவைகளை ஒரு வஸ்திரத்துடன் செய்யக்கூடாது.

## 19. நெற்றி இட்டுக்கொள்ளும் முறை.

இந்த கலியில் எவனுடைய க்ரஹத்தில் எப் பொழுதும் கோபி சந்தனம் ம்ருத்திகை (மண்) இருக்கிறதோ

அந்த க்ருஹம் க்ருஷ்ணன் வாசம் செய்யும் த்வாரகை என்று அறியவும்.

கோபீ சந்தனம் தரித்த சரீரத்துடன் எவன் எவனைப் பார்க்கிறனோ அவன் பரிசுத்தனாக ஆகிறான். கோபீ சந்தனத்தினால் ஊர்த்வ புண்ட்ரம் தரித்துக்கொள்ள வேண்டும்.

தன் க்ஷேமத்தை உத்தேசித்து கோபீ சந்தனத்தால் விஷ்ணுவினுடைய பாதக்ருதியாக நெற்றி முதலான ஸ்தலங்களில் ஊர்த்வபுண்டரம் தரிக்கவேண்டும். அவன் பரம புருஷனான நாராயணனுக்கு பிரியம் ஆகிறான், புண்ணியசாலியாகிறான், மோக்ஷத்தை அடையத் தகுதியுள்ளவனாகக் கருதப்படுகிறான்.

வாஸுதேவோபநிஷத்தில் கோபீ சந்தன தாரண விதி சொல்லப் பட்டிருக்கிறது.

கோபீ சந்தனத்தை நமஸ்கரித்து எடுத்து (பார்க்க : அனுபந்தம் 2)

இந்த மந்திரத்தினால் பிரார்த்திக்கவும். பிறகு

இமம்மே கங்கே என்ற மந்திரத்தினால் ஜலத்தை எடுத்து, விஷ்ணோர்நுகம் என்பதால் இடதுகையில் இருக்கும் தீர்த்தத்தில் வலதுகையினால் குழைக்க வேண்டும். பிறகு குழைத்த கோபீ சந்தனத்தை அதோ தேவா அவந்துந: என்ற ருக்குகளாலும் மூன்று தரம் விஷ்ணு காயத்ரீயினாலும் அபி மந்திரணம் செய்து, (அனுபந்தம்) என்ற மந்திரத்தால் பகவானை த்யானம் செய்து,

க்ருஹஸ்தன் தன் மோதிர விரலால் கோபீ சந்தனத்தை விஷ்ணு காயத்ரீயினால் அல்லது கேசவாதி 12 நாமாக்களால் நெற்றி, வயிறு, மார்பு, கழுத்து, வலது பார்ச்வம், வலது பாஹுமூலம், வலது கழுத்து பார்ச்வம், இடது பார்ச்வம், இடது பாஹுமூலம், இடது கழுத்து பார்ச்வம், பின்புறம் கடிப்ரதேசம், பின் கழுத்துப்ரதேசம் என்ற 12 இடங்களிலும் பிறகு வாஸுதேவ என்று சிரஸ்ஸிலும் தரிக்கவேண்டும்.

வானப்ரஸ்த்தன் ப்ரம்மச்சாரி இவர்கள், நெற்றி, கழுத்து, மார்பு, பாஹுமூலங்கள் இந்த ஐந்து இடங்களில் விஷ்ணு காயத்ரீயினால் அல்லது ஐந்து க்ருஷ்ணாதி நாமாக்களாலும் கோபீ சந்தனம் தரிக்க வேண்டும்.

குடீசகர், பஹூதகர், ஹம்ஸர் என்ற இந்த மூன்று விதமான ஸன்யாஸிகள் ஆள் காட்டிவிரலால் சிரஸ், நெற்றி, மார்பு இவைகளில் ப்ரணவம் சொல்லி கோபீ சந்தனம் தரிக்கவேண்டும்.

பரமஹம்ஸ ஸன்யாஸி நெற்றியில் மாத்திரம் ஊர்த்வ புண்டரம் கோபீ சந்தனத்தால் தரிக்க வேண்டும் என்று கூறப்படுகிறது.

யக்ஞம், தானம், ஜபம், ஹோமம், வேதம் சொல்லுதல், பித்ரு தர்ப்பணம் இவைகள் ஊர்த்வ புண்ட்ரம் இல்லாமல் செய்தால் நிஷ்பலமாகும் என்று விஷ்ணுஸ்ம்ருதியில் சொல்லப்படுகிறது.

இனி த்ரி புண்ட்ரவிதானம் சொல்லப்படுகிறது. காலாக்னி ருத்ரோபநிஷத்தில் விபூதிதாரணவிதி (முறை)

ப்ரகாரம் உதாஹறரிக்கப்படுகிறது, அக்னியிலிருந்து உண்டான பஸ்மாவை ஸத்யோஜாதம் என்ற ஐந்து மந்திரங்களால் எடுத்து அக்னிரிதி என்ற மந்திரத்தினால் அபிமந்தரணம் செய்து,

மானஸ்தோகே என்பதால் எடுத்து, ஜலத்தோடு கலந்து சிரஸ், நெற்றி, மார்பு, தோள் இந்த ஸ்தானங்களில் த்ரியாயுஷம், த்ரியம்பதம், என்ற மந்திரங்களினால் குறுக்காக மூன்று ரேகையாக தரிக்கவேண்டும். இந்த மாதிரி வீபூதி தரிக்கும் முறை சாம்பவ வ்ரதமாகும், பரமேச்வரருக்கு ப்ரீதியை கொடுக்கும் என்று சகல வேதங்களிலும் மஹறரிஷிகளாலும் கூறப்படுகிறது.

ஆகையால் மோக்ஷத்தை விரும்புகிறவன் மோக்ஷத்தை அடைவதற்கு அவசியம் வீபூதி தாரணம் செய்துகொள்ள வேண்டும்.

த்ரிபுண்ட்ரம் வீபூதியினால் எவன் தரிக்கிறானோ அந்த வித்வான், ப்ரம்மசாரீ, க்ருஹஸ்தன், வானப்ரஸ்தன், ஸன்யாஸீ இவர்கள் ஸமஸ்தபாபத்திலிருந்து விடுபட்டவர்களாக ஆவார்கள். எல்லா தேவதைகளையும் தியானம் செய்தவர்களாக ஆவார்கள். எல்லா புண்ணிய தீர்த்தங்களிலும் ஸ்நானம் செய்தவர்களாக ஆவார்கள்.

விபூதி தரிக்கிறவன் சகல சம்பத்துக்களையும் அடைவான். ஸமஸ்த விஷய சுகங்களையும் அனுபவிப்பான். சகல வேதங்களில் உள்ள ருத்ர மந்திரங்களை ஜபித்தவனாக ஆவான். இந்த சரீரத்தை

தியாகம் செய்த பிறகு சிவ ஸாயுஜ்யம் அடைந்து திரும்ப இந்த பூலோகத்தில் பிறக்கமாட்டான், மோக்ஷத்தை அடைவான். இவ்வளவு மஹிமை உள்ளது விபூதி தாரணமென்பது என்று பகவான் காலாக்னி ருத்ரர் கூறுகிறார்.

திரியாயுஷம் என்ற மந்திரத்தினால் நெற்றியில், இரண்டு கைகளில், வயிற்றில், சிரஸில், மார்பில், பார்ச்வ பாகங்களில் வீபூதியை ஜலத்துடன் கலந்து தரிக்கவேண்டும். வேத மறிந்து கர்மாக்கள் செய்யும் ப்ராம்மணன் அவசியம் தரிக்கவேண்டும்.

காத்யாயனர்:— ச்ரார்தத்திலும், யக்ஞத்திலும், ஜபத்திலும், ஹோமத்திலும், வைச்வே தேவத்திலும், தேவ பூஜையிலும், வீபூதி தரிக்கவேண்டும். வீபூதி தரிக்காமல் செய்த கர்மாக்கள் நிஷ்பலமாகும் என்பது கருத்து.

ஆயுளை விரும்புகிறவனும், ஐஸ்வரியத்தை விரும்புகிறவனும், மோக்ஷத்தை விரும்புகிறவனும், அவசியம் வீபூதியை தரிக்கவேண்டும். வீபூதி தாரணம் நான்கு வர்ணத்தார்களும் செய்யவேண்டும். வீபூதியைப் பற்றி வெகு புராணங்களில் கூறப்பட்டிருக்கிறது. வீபூதி தாரணம், ஊர்த்வ புண்ட்ரதாரணம் இவ்விரண்டும் அவரவர்களுடைய குலத்தில் பெரியோர்களுடைய ஆசாரத்தை அனுசரித்து தரிக்க வேண்டும். அவைகளை நாம் இஷ்டப்படி மாற்றக்கூடாது என்பது சாஸ்த்திர சித்தாந்தமாகும்.

த்ரிபுண்ட்ரம் வீபூதியினாலும், குறுக்காகவும் தரிக்கவேண்டும். ஊர்த்வ புண்ட்ரம் மண்ணினால்

கோபீ சந்தனத்தால் ஊர்த்வமாக (மேல் நோக்கியதாக) தரிக்க வேண்டும், மாற்றி தரிக்கக்கூடாது. சந்தனத்தால் ஊர்த்வமாயும் குறுக்காகவும் தரித்துக்கொள்ளலாம். வட்டமாக (ரவுண்டாக) எந்த சமயத்திலும் தரிக்கக் கூடாது.

உமி, சாம்பல், கல்பொடி முதலியவைகளைத் தரிக்கக் கூடாது. பிரசாதமாகக் கொடுத்த மஞ்சள் குங்குமம் தரிக்கலாம். கண்ட பொடிகளை நெற்றியில் தரிக்கக் கூடாது என்பது கருத்து.

வ்யாஸர்:— ஊர்த்வ புண்ட்ரமோ அல்லது த்ரிபுண்ட்ரமோ தரித்து சகல புண்ணிய கர்மாக்களையும் செய்யவேண்டும். ஆகையால் லலாட சூன்யமாகக் கர்மாக்கள் செய்யக்கூடாது.

### 20. ஸந்தியாவந்தன விதி

நக்ஷத்திர ஜ்யோதி மறைவதிலிருந்து ஸூரியோதயம் ஏற்படும் வரையிலுள்ள காலம் ப்ராதஸ் ஸந்த்யை என்று மஹரிஷிகள் கூறுகின்றனர்.

தக்ஷன்:— ராத்திரியினுடைய கடைசி யாமத்தில் கடைசி இரண்டு நாழிகைகள் ஸந்த்யையின் ஆரம்ப காலம் என்று சொல்லப்படுகிறது. ஸூரியனுடைய மேல் நோக்கின கிரணங்கள் காண்பதாவது ஸந்த்யையின் முடிவு என்று மஹரிஷிகளால் கூறப்படுகிறது. இங்கு ஸந்த்யா என்பது கால வாசகமாக இருந்தாலும் அந்தக் காலத்தில் உபாஸிக்கும் தேவதை ஸந்த்யா சப்தத்தால் கூறப்படுகிறது என்று அறியவும்.

யோகயாக்ஞ்யவல்கியர்:— ஸந்தியில் ஸந்த்யா தேவியை உபாஸிக்கவேண்டும். ஸாயங்காலத்தில் ஸூரியன் அஸ்தமனத்தை அடைந்த பிறகு ஸந்தியா வந்தனம் செய்யக்கூடாது. அதே மாதிரி ப்ராத ஸந்தியை ஸூரியன் உதயமான பிறகு உபாஸிக்கக் கூடாது. ப்ரம்மா, விஷ்ணு, சங்கரன், இவர்கள் ஸந்தியையை முக்கிய காலத்தில் உபாஸிக்கிறார்கள். இப்படி இருக்க ப்ராம்மணன் எப்படி ஸந்தியா வந்தனம் செய்யாமல் இருப்பான்? அவசியம் செய்ய வேண்டும் என்பது கருத்து.

ஸம்வர்த்தர்:— ப்ராதஸ் ஸந்த்யையை நக்ஷத்திரங் களுடன் கூடியகாலத்திலும், ஸாயம் ஸந்த்யையை ஸூரியன் பாதி மறைந்திருக்கும்பொழுதும் உபாஸிக்க வேண்டும்.

அத்ரி:— ப்ரம்ம ஞானிகள் மூன்று காலங் களிலும் ஸந்தியானுஷ்டானம் செய்ய வேண்டும் என்று கூறுகிறார்கள். அதாவது, ப்ராதஸ் ஸந்த்யா, மாத்யான்ஹிகம், ஸாயம் ஸந்தியா என்று மூன்று ஸந்த்யானுஷ்டானங்கள் என்று அறியவும்.

சங்க:— ப்ராதஸ் ஸந்தியையை நக்ஷத்திரங்களு டனும், மத்யான்ஹிக ஸந்தியை மத்யான்ஹ ஸ்னானத்திற்குப் பிறகும், ஸாயங்கால ஸந்தியையை ஸூரியன் இருக்கும் பொழுதும் சாஸ்திரத்தில் கூறியபடிச் செய்யவேண்டும்.

வ்யாஸர்:— எந்த ப்ராம்மணன் ஸந்தியானு ஷ்டானம் செய்யாமல் வேறு தர்ம காரியங்களை

செய்கிறானோ அவன் ஆயிரக்கணக்கான நரகங்களில் துக்கத்தை அனுபவிக்கிறான்.

எவன் விவேகமின்மையினால் வேறு காரியத்தில் ஈடுபட்டவனாக ஆகி ஸந்தியையை விடுகிறானோ அவனை ஸாதுக்கள் ப்ராம்மணன் செய்யவேண்டிய சகல வைதிக கர்மாக்களிலிருந்து விலக்கவேண்டும்

எமன்:— எவர்கள் ஸந்தியையை த்ருடமான, நியமத்துடன் உபாஸிக்கிறார்களோ அவர்கள் சகல பாபங்களிலிருந்தும் விலகி, ப்ரும்ம லோகத்தை அடைகிறார்கள்.

எந்த ப்ராம்மணன் பகலில் சரீரத்தாலும், மனத்தாலும், வாக்கினாலும், பாபம் செய்கிறானோ அவன் ச்ரத்தையுடன் உட்கார்ந்து ஸாயம் கால ஸந்தியையை ப்ராணாயாமத்துடன் உபாஸித்து அந்த பாபங்களை விலக்கிக் கொள்கிறான்.

எந்த ப்ராம்மணன் ராத்திரியில் சரீரத்தாலும், மனதாலும், வாக்கினாலும் பாபம் செய்கிறானோ அவன் ப்ராதஸ் ஸந்தியையை நின்று ப்ராணாயாமத்துடன் உபாஸித்து அந்த பாபங்களிலிருந்து விடுபடுகிறான்.

சில பெரியோர்கள் ஸந்தியா வந்தன கர்மாவில் அர்க்கயம், ஸந்தியா தியானம், காயத்ரீ ஜபம், உபஸ்தானம், இந்த நான்கு காரியங்களும் ப்ரதானமானவை என்று சொல்லுகிறார்கள். இது ஸித்தமான விஷயம் என்று அறியவும். மற்ற ப்ரோக்ஷணம் முதலியவைகள் அங்கங்கள் என்று கூறப்படுகிறது.

உதயத்திற்கு முன் இரண்டு நாழிகை ஸந்தியா வந்தனத்திற்கு முக்கிய காலமாகும். உதயத்திற்கு பின்பு அரையாமமும் (3 1/2 நாழிகை) ஸந்தியா வந்தனத்திற்கு கௌண காலமாகும். அதற்கு பிறகு செய்தால் ஸந்தியையை அதிக்ரமித்ததாகும் என்று அறியவும்.

உதயத்திற்கு பின்பு கூறப்படும் காலமானது தேச க்ஷோபம், ஜலத்தின் துர்லபம், உடம்பு அஸௌ கரியம், ஆபத்து, இவைகளில் அனுஷ்டிக்கலாம். அனாவசியமாக சோம்பேறித்தனமாக காலத்தை அதிக்ரமித்து ஸந்தியா வந்தனம் செய்யக்கூடாது. அதேமாதிரி மாத்யான்ஹிகத்திலும், ஸாயங்கால ஸந்தியையிலும் கௌண காலத்தில் ஸந்தியானு ஷ்டானம் செய்யலாம்.

அத்ரி:— வியாதி இல்லாமல் ஸ்வஸ்த்தனாக இருக்கும் ப்ராம்மணன் முக்ய காலத்தில் ஸந்தியா வந்தனம் செய்யாவிட்டால் அவன் பரம பாபியா கிறான். ஸூரியனை ஹிம்சிக்கிறான்.

ப்ரும்மா:— தாரையாய் விழும் ஜலத்தினால் செய்யப்படும் ஸந்தியாவந்தனம் நிந்திக்கத் தகுந்த தாகும். இதை பித்ருக்களும் தேவதைகளும் புகழ மாட்டார்கள்.

வ்யாஸர்:— யக்ஞோபவீதம் தரித்து சிகையை நன்றாக கட்டிக்கொண்டு இரண்டு தரம் ஆசமனம் செய்து வேறு இடத்தில் புத்தியை செலுத்தாமல் ஸந்த்யோபாஸனம் செய்யவேண்டும்.

இரண்டு கரங்களாலும் ஜலத்தை எடுத்து காயத்ரீயினால் அபி மந்த்ரணம் செய்து ஸூரியனுடைய எதிரில் நின்றுகொண்டு மூன்று தடவை அர்க்யத்தை உயரே தூக்கி விடவேண்டும்.

இரு கைகளையும் சேர்த்து ஒரு அஞ்சலி ஜலத்தை பூர்ணமாகச் செய்து பசுமாட்டுக் கொம்பு அளவு உயரே எடுத்து ஜலத்தில் அர்க்யம் விடவும்.

பொதுவாக ஜலத்தில் அர்க்கியம் விடவேண்டும். ஜலமில்லாத இடத்தில் சுத்தமான தரையில் தீர்த்தத்தினால் ப்ரோக்ஷித்து அர்க்யங்களை விடவேண்டும்.

காலையிலும், மத்யான்ஹறத்திலும் நின்று கொண்டு அர்க்யம் கொடுக்கவேண்டும். ஸாயங்காலத்தில் உட்கார்ந்துகொண்டு அர்க்யம் கொடுக்கவேண்டும்.

பரத்வாஜர்:— அர்க்யம் கொடுத்தபிறகு, ப்ராயச்சித்தார்க்யம் கொடுத்துவிட்டு, ஆசமனம் செய்து, பிறகு ஜலத்தினால் ஆத்ம ப்ரதக்ஷிணம் செய்து, சுத்தமான ப்ரதேசங்களைத் தரித்துக்கொண்டு, சில நிமிஷங்கள் ஆத்ம த்யானம் செய்யவேண்டும். பிறகு உட்கார்ந்து கொண்டு நவக்ரஹறங்களுக்கும் கேசவாதி 12 தேவதைகளுக்கும் தர்ப்பணம் செய்யவேண்டும்.

சங்க:— ஜபம் செய்யும் ஸ்தலத்தைப் பற்றிச் சொல்லப்படுகிறது. க்ருஹத்தில் ஜபம் செய்வது ஒரு பங்கு பலத்தை கொடுக்கும், நதி தீரத்தில் இரண்டு பங்கும், பசுமாட்டுக் கொட்டிலில் பத்து பங்கும்,

அக்னி சாலையில் நூறு பங்கும் ஸித்த க்ஷேத்ரங் களிலும், புண்ணிய தீர்த்தங்களிலும், தேவதா ஸந்நிதி யிலும், நூறு கோடிகளுடைய ஆயிரம் பங்கும் பலம் கிடைக்கும். விஷ்ணு ஸந்நிதியில் ஜபம் செய்தவர் களுக்கு அளவு கடந்த பலம் கிடைக்கும் என்று அறியவும்.

ப்ருஹஸ்பதி:— தனக்கு உகந்த சுகமான ஆஸன பந்தனம் செய்துகொண்டு, இந்திரியங்களை அடக்கி ரிஷி, சந்தஸ் தேவதைகளை ஸ்மரித்து, அர்த்த நிமீலனத்துடன் மௌனமாக இருந்து ப்ராணாயாமம் செய்யவேண்டும்.

ஏழு வ்யாஹ்ருதிகளுடன் கூடிய காயத்ரியை சிரஸ்ஸுடன் பத்து முறை ஜபித்து, பிறகு காயத்ரீ ஜபம் செய்யவேண்டும். அதேமாதிரி மூன்று ப்ராணா யாமங்களில் பத்து தடவை ப்ராணாயாம மந்திரங் களை ஜபித்து பிறகு காயத்ரீ ஜபம் செய்யவேண்டும். ஒரு ப்ராணாயாமத்தில் மட்டும் நான்கு தடவை ஜபம் செய்தால் பத்து தரம் ஜபித்ததாக ஆகும் என்பது கருத்து.

யமன்:— ப்ரம்மாவானவர் காயத்ரியையும் வேதங்களையும் திராசினால் நிறுத்தார். அங்கங் களுடன் கூடிய வேதங்களை ஒரு பக்கத்திலும், காயத்ரியை ஒரு பக்கத்திலும் வைத்தார். ஆனால் இரண்டும் சமமாக இருந்தது. ஆகையால் காயத்ரீ நான்கு வேதங்களுக்கும் சமமானது என்பது கருத்து.

மனு:— காலை ஸந்தியா வந்தனத்தில் காயத்ரீ ஜபம் நின்று கொண்டு ஸூரியோதய பர்யந்தம்

செய்யவேண்டும். ஸாயங்கால ஸந்தியா வந்தனத்தில நக்ஷத்ர உதய பர்யந்தம் காயத்ரீ ஜபம் உட்கார்ந்து செய்யவேண்டும்.

ஸம்வர்த்தர்:— பிரதி தினம் க்ரஹஸ்தனும் ப்ரம்மச்சாரியும் 108 தடவை ஸந்தியா வந்தனத்தில் காயத்ரீ ஜபம் செய்யவேண்டும் வாநப்ரஸ்த்தனும் குடீசிக ஸந்நியாஸியும் 1008 தடவை காயத்ரீ ஜபம் செய்யவேண்டும்.

காயத்ரீ ஜபம் மனசினால் செய்வது உத்தம மாகும். உதடு, நாக்கு, இந்த அவயவங்கள் அசைய சிறிய குரலில் பிறருக்குக் காதில் விழாமல் ஜபம் செய்வது உபாம்சு என்று சொல்லப்படுகிறது, அந்த மாதிரி ஜபம் செய்வது மத்யமாகும். பிறர் காதில் விழும்படி ஜபம் செய்வது மத்யமமாகும். பிறர் காதில் விழும்படி ஜபம் செய்வது வாசிகமாகும். அந்த மாதிரி ஜபம் செய்வது அதமமாகும்.

காயத்ரியை விரல் ரேகைகளினால் எண்ணி ஜபிக்கவேண்டும். இந்த மாதிரி காயத்ரீ ஜபம் செய்வது உத்தமம். காயத்ரீ வேதமாதாவானபடியால், வேதத்தை விரல் ரேகைகளில் ஸ்வரத்தை காட்டி பாராயணம் செய்வதால், காயத்ரியையும் ரேகைகளில் எண்ணி ஜபிப்பதுதான் சிறந்தது. மற்ற மந்திர ஜபங்களுக்கு இந்த மாதிரி நியமம் கிடையாது என்று அறியவும்.

ஸூரியோதய பர்யந்தம் காயத்ரீ ஜபம் செய்து பிறகு " உத்தமே சிகரே" என்ற மந்திரத்தினால் காயத்ரீயை உத்வாஸனம் செய்யவேண்டும்.

வ்யாஸர்:— ஸூரியனை ஏகாக்ர சித்தத்துடன் அந்தந்த (ருக், எஜுர், சாம) வேத மந்திரங்களினால் உபஸ்தானம் செய்யவேண்டும். உபஸ்தானம் என்பது நின்று கொண்டு ஸ்தோத்ரம்செய்வது என்பதாகும். இது மாதிரி மாத்யான்ஹிகத்திலும், ஸாயம் ஸந்தியா வந்தனத்திலும் உபஸ்தானம் செய்ய வேண்டும்.

பரத்வாஜர்:— உபஸ்தானம் செய்த பிறகு ஸந்தியா முதலிய நான்கு தேவதைகளை நமஸ்கரிக்க வேண்டும். முதலில் ஸந்தியா, பிறகு, ஸாவித்ரீ, காயத்ரீ, ஸரஸ்வதி இவர்கள் கிரமமாக நான்கு தேவதை ஆவார்கள்.

பிறகு கிழக்கு,தெற்கு, மேற்கு, வடக்கு, மேல் திக்கு, கீழ் திக்கு, அந்தரிக்ஷம், பூமி, என எட்டு திக்குகளை அவரவர்கள் நாம மந்திரங்களைச் சொல்லி ப்ரதக்ஷிணமாக நமஸ்கரிக்க வேண்டும். யமன், விஷ்ணு, விரூபாக்ஷன், ஸவிதா இந்த தேவதைகளையும் அவரவர்கள் மந்திரங்களால் அந்த அந்த திக்கைப் பார்த்து உபஸ்தானம் செய்யவேண்டும். ஸந்தியாவந்தனம் அவரவர்கள் குலாச்சாரப்பிரகாரம் நன்கு தெரிந்து கொண்டு அனுஷ்டிக்கவேண்டும். பிறகு பகவானுக்கு அர்ப்பணம் செய்யவேண்டும்.

## 21. காம்ய ஜபங்கள்.

போதாயனர்:— சுத்திகரமான மந்திரங்களால் ப்ரோக்ஷணம் செய்துகொண்டு, ஸ்ரீ ருத்ரத்தை 11 தடவை ஆவர்த்தி செய்வதால் சகல பாபங்களிலிருந்தும் விடுபடுவான் என்று அறியவும்.

அத்ரி:— பதினோரு தடவை ஸ்ரீருத்ரம் .ஜபம் செய்வதால் மஹா பாதகம் முதலிய சகல பாபங்களிலி ருந்தும் விடுபடுவான். இது தீர்மானமான விஷயம் என்று அத்ரி சொல்லுகிறார்.

விஷ்ணு:— ஸ்னானம் செய்து பவித்ராணி —பாபக்ஷயகரங்களான மந்திரங்களை முடிந்த அளவில் ஜபிக்கவும். விசேஷமாக தினமும் ஸாவித்ரீயையும், புருஷஸூக்தத்தையும் ஜபம் செய்யவும். இவைகளுக்குச் சமமான மந்திரங்கள் கிடையாது. அவ்வளவு புகழ் உள்ளவை என்பது கருத்து.

ஸம்வர்த்தர்:— ஐந்து அல்லது ஆறு மாதம் ஆஹார நியமத்துடன் ப்ரம்மசர்யத்துடன் இருந்து எவன் புருஷ ஸூக்தத்தை ஜபிக்கிறானோ அவன் சகல பாபங்களிலிருந்தும் விடுபடுகிறான்.

ஜாபாலி:— ஹரியினுடைய நாம ஜபம் சிறந்தது. ஹரி நாமாக்களை தியானம் செய்வது, கானம் செய்வது, கீர்த்தனம் செய்வது இவைகள் எப்பொழுதும் செய்ய வேண்டும். அப்படிச் செய்தால் மனதுக்கு சந்தோஷம், நிம்மதி இவைகள் ஏற்படும்.

வஸிஷ்டர்:— புத்திமானான மனுஷ்யன் விஷ்ணு நாமாக்களை உச்சரிப்பதினால் சகல பாபங்களைப் போக்கிக் கொண்டு புண்ணியத்தை அடைந்து பரிசுத் தனாக ஆகிறான்.

ஹரி பக்தனான மனிதன் க்ருஷ்ண, ராம என்று எப்பொழுதும் ஜபிக்கின்றவன் ராஜஸூய யாகங்கள்

உடைய பலத்தை அடைகிறான். ஆனால் நித்ய கர்மகாலங்களில் நித்ய கர்மாக்களைச் செய்த பிறகு மற்ற காலங்களில் ஹரி நாம ஜபம் செய்யவேண்டும்.

ஸ்ரீராம ஜயராம ஜய ஜய ராம என்று பதிமூன்று அக்ஷரங்களுள்ள மந்திரத்தை இருபத்தொரு முறை ஜபித்தால் அது கோடிக்கணக்கான ப்ரம்மஹத்யா தோஷத்தை நசிக்கச் செய்கிறது.

ப்ருகு:— மனிதனுக்குப் பயத்தைக் கொடுக்கக் கூடிய ஆபத்துகள் கோடிக்கணக்கில் வந்தாலும் ராம ராம என்று உச்சரித்தால் வந்த ஆபத்துக்கள் விலகி விடும்.

எந்த மனிதர்கள் சிவ, சங்கர, ருத்ர, ஈச, நீலகண்ட, திரிலோசன, என்ற ஆறு சிவ நாமாக்களை எப்பொழுதும் கீர்த்தனம் செய்கிறார்களோ அவர்களை கலி புருஷன் கெடுக்கமாட்டான்.

எந்த மனிதர்கள் மஹாதேவ, விருபாக்ஷ, கங்காதர, ம்ருட, அவ்யய, என்று சிவ நாமாக்களை கீர்த்தனம் செய்கிறார்களோ அவர்கள் க்ருதார்த்தாக்கள்; அதாவது செய்யவேண்டிய நல்ல காரியங்களைச் செய்தவர்களாகக் கருதப்படுகிறார்கள்.

### 22. தர்பங்களுடைய புகழ்.

கோபிலர்:— தர்பம் என்பது பொதுவான பெயர், தர்பவிசேஷம் என்று சொல்லப்படுகிறது. இது கங்கா தீரங்களில் அகப்படும். குசமூலத்தில் ப்ரம்மாவும், குச மத்யத்தில் கேசவனும், குசாக்ரத்தில் சங்கரனும், மற்ற

பாகங்களில் எல்லா தேவதைகளும் இருக்கிறார்கள். ஆகையால் கர்மாக்களில் குசத்தை உபயோகப்படுத்து வது ச்லாக்கியம்.

ஹாரிதர்:— குசத்தை கையில் பவித்ரம் முதலியதாக தரித்து செய்த ஜபம், தானம், போஜனம் இவைகள் அளவு கடந்த புண்ணியங்களைக் கொடுக்கக்கூடியது.

கௌசிகர்:— குசாஸனம் மிகவும் பரிசுத்தமானது. இது ஸந்நியாஸிகளுக்கு ரொம்பச் சிறந்தது. குசா ஸனத்தில் உட்கார்ந்து ஜபம் செய்தால் யோக ஸித்தி ஏற்படும்.

சங்க:— குசம் கிடைக்காவிடில் நாணல்களால் தர்ப்பணம் முதலிய வைதீக கர்மாக்களைச் செய்ய வேண்டும். நாணல் குசங்களுக்குச் சமமானது.

விச்வாமித்ரம், குசம், நாணல், அருகம்புல், நெல் பயிர், பல்பஜம், யவைபுல், இந்த ஏழும் தர்ப்பங்கள் என்று கூறப்படுகிறது.

குசம் ப்ரம்மாவுக்கும், நாணல் ருத்ரனுக்கும், அருகம்புல் ரிஷிகளுக்கும், விச்வாமித்ரம் விஷ்ணு வுக்கும் பிரியமானவை என்று அறியவும்.

ப்ராம்மணர்களுக்கு ச்ருதி ஸ்ம்ருதி விஹிதமான கார்யங்களுக்கு மித்ரமாக இருப்பதாலும், ஸமஸ்த பாபங்களுக்கும் அமித்ரனாக (சத்ருவாக) இருப்பதாலும், விச்வாமித்ரம் என்று பெயர் ஏற்பட்டது.

குசம், நாணல் கிடைக்காவிடில் மற்ற தர்ப்பங்களை உசிதப்படி உபயோகப்படுத்தவும்.

குசம், தாமிரம், வெள்ளி, தங்கம் இவைகளால் செய்யப்பட்ட பவித்ரம் (மோதிரம்) வலதுகையில் தரித்துக் கொள்ளவும். இவைகள் பவித்ரமானவைகள்.

சங்க:— பவித்ரபாணியாக ஆசமனம் செய்ய வேண்டும் என்ற முறை இருக்கிறது என்று நினைத்து, ஒரு பொழுதும் நாணலைக் கையில் தரித்து ஆசமனம் செய்யக் கூடாது.

ஹாரீதர்:— மாக மாதத்திலும், ச்ராவண மாதத்திலும், உள்ள அமாவாஸ்யையில் தர்ப ஸங்க்ரஹம் செய்யவேண்டும். அந்த சமயத்தில் கிரஹிக்கப்பட்ட தர்ப்பங்கள் எப்பொழுதும் புதியனவாகக் கருதப்படுகின்றன. எந்தக் காரியங்களுக்கும் உபயோகப் படுத்தலாம்.

அந்த அந்த மாதங்களில் கிரஹிக்கப்பட்ட தர்ப்பங்கள் அந்த மாதத்திற்குத்தான் உபயோகப்படும். அடுத்த மாதத்திற்கு சிலாக்கியமாகாது என்று அறியவும்.

ஸமித்துகள், புஷ்பங்கள், தர்ப்பங்கள் இவைகளை ப்ராம்மணன் தானாகவே சேகரித்துக் கொள்ள வேண்டும். மற்றவர் கிரஹித்தது சிலாக்கியமாகாது என்று அறியவும்.

## 23. ஹோமம் செய்யும் விதி.

*புலஸ்த்யர்:—* ஸ்நானம் செய்து ஸந்தியா வந்தனம் செய்துபிறகு கிருஹத்தையும் ஸமஸ்த திரவியங்களையும் ப்ரோக்ஷணம் செய்ய தீர்த்தம் கிரஹித்துக் கொண்டு அந்த தீர்த்தத்தால் எல்லா திரவியங்களையும் கிருஹத்தையும் ப்ரோக்ஷணம் செய்து ஆசமனம் செய்து பிறகு வேத விஹித கர்மாக்களை ஆரம்பிக்கவேண்டும்.

*ஹாரீதர்:—* ப்ராம்மணன் முறைப்படி ஸந்தியா வந்தனம் செய்து ஸூர்ய நமஸ்காரம் செய்து ஸாயங் காலத்திலும் ப்ராத: காலத்திலும் விவாஹாக்னியில் ஹோமம் செய்யவேண்டும்.

*ஆபஸ்தம்பர்:—* ஆக்னேயஸ் ஸ்தாலிபாகத்திற்குப் பிறகு இந்த இரண்டு ஆஹூதிகளை அரிசியாலும், யவத்தாலும், கையினால் ஹோமம் செய்யவேண்டும். ஸ்தாலீ பாகத்திற்கு போல் தேவதைகள், சிலர் காலையில் முதலாஹூதி ஸூரியனை உத்தேசித்துச் செய்ய வேண்டும் என்று சொல்லுகிறார்கள். ஆஹூதிகளுக்கு முன்பும் பின்பும் பரிஷேசனம் செய்யவும்.

எந்த இடத்தில் அக்னி ப்ரதிஷ்டை செய்யப் போகிறானோ அந்த இடத்தில் கிழக்கில் முடிவதும் வடக்கில் முடிவதுமான மூன்று மூன்று கோடுகளைக் கீறி ஜலத்தால் ப்ரோக்ஷித்து அவ்விடத்தில் அக்னி ப்ரதிஷ்டை செய்து ஜ்வலிக்கச் செய்து ப்ரோக்ஷித்த ஜலத்தில் மீதியை அக்னிக்கு வடக்கில் அல்லது கிழக்கில் கொட்டிவிட்டு அந்த இடத்தில் வேறு ஜலத்தை வைக்கவேண்டும். இது அக்னியை ப்ரதிஷ்டை செய்யும் முறையாகும்.

விஷ்ணு:— கிருஹஸ்தன் ஸ்மார்த்த காரியங்களான ஸ்தாலீபாகம், ச்ரார்தம் காரியங்களை ஔபாஸனாக்னியில் செய்யவேண்டும். ச்ரௌத காரியங்களை த்ரேதாக்னியில் கர்மாக்களை செய்யவேண்டும். பத்தினி இல்லாதவர்கள் லௌகிகாக்னியில் கர்மாக்களை செய்யவேண்டும். அநேகர்கள் சேர்ந்து செய்யும் சாந்தி முதலிய காரியங்களில் லௌகிகாக்னியைத் தான் வைத்துக் கொள்ள வேண்டும். ஔபாஸனாக்னியில் செய்யக்கூடாது.

ச்ரௌத கர்மா அனுஷ்டிக்க முடியாவிடில் ஸ்மார்த்தாக்னியில் கர்மா செய்யவேண்டும். அதுவும் செய்ய சக்தி இல்லையேயானால், ஸ்நானம்— ஸந்தியா— பூஜை— ஜபம் இவைகளைச் செய்யவேண்டும். இவைகள் ஸதா சார சப்தத்தினால் சொல்லப்படுகிறது.

ஔபாஸன ஹோமத்தில் யஜமானன் முக்கிய அதிகாரியாவான். அவருக்கு வேறு காரணங்களினால் செய்யமுடியாவிட்டால், பத்தினி, புத்திரன், கன்யகா, ருத்விக், சிஷ்யன், குரு, சகோதரன், மருமகன், மாப்பிள்ளை, இவர்களும் ஔபாஸன ஹோமம் செய்யலாம். இவர்கள் செய்தால் யஜமானன் செய்தது மாதிரியாகும். பத்தினியும், பெண்ணும் ஹோமம் செய்யும்பொழுது பரிஷேசனம் செய்யாமல் ஹோமம் மாத்திரம் செய்யவேண்டும்.

கர்கர்:— கல்யாணம் செய்துகொண்டு கிருஹஸ்தனாக இருக்கிறவன் ஒரு க்ஷணம்கூட அக்னியில்லாமல் இருக்கக்கூடாது. அப்படி அக்னி இல்லாமல் இருந்தால் அவனை பதிதன், வ்ராத்யன் என்று சொல்லப்படுகிறது.

வ்யாஸர்:— எவன் ஔபாஸன ஹோமம் செய்யாமல் தன்னை கிருஹஸ்தன் என்று நினைக்கிறானோ அவனுடைய அன்னத்தை ஸாதுக்கள் புசிக்க மாட்டார்கள். அவன் வீணாக சமைக்கிறவன் (விதாபாகன்) என்று அழைக்கப்படுகிறான்.

காத்யாயனர்:— ஒரு வருஷ காலம் ஔபாஸன ஹோமம் செய்யாமல் இருந்தால் 60 படி அரிசியும், 3 படி நெய்யும் தானம் செய்து புனஸ் ஸந்தானம் செய்து கொள்ள வேண்டும்.

எவ்வளவு காலம் ஹோமம் செய்யவில்லையோ அவ்வளவு ஹோம திரவியத்தை ப்ராம்மணனுக்குத் தானம் செய்து பிறகு அக்னி ஸந்தானம் செய்து கொள்ள வேண்டும்.

ப்ரஹஸ்பதி:— ஜனனாசௌசம், மரணாசௌசம், சக்தியின்மை, ச்ரார்த்த போஜனம், வெளியூர் செல்வது முதலிய காரணங்களினால் ஹோமத்தை நிறுத்தக் கூடாது. வேறு மனுஷ்யர்களால் ஹோமம் செய்யச் சொல்லவேண்டும்.

### 24. ஹோமகாலம்

(பார்க்க : அனுபந்தம் 3)

ஆபஸ்தம்பர் ச்ரௌதாக்னியை ப்ரணயனம் செய்ய காலம் குறிப்பிடுகிறார். இந்த ஸூத்திரத்தில் வா என்பது ஸமுச்சயத்தைச் சொல்லுகிறது. இரண்டு ஸூர்ய சப்தமும் ஸூரிய கிரணங்களை தெரிவிக்கிறது. மாலையில் பூமியிலிருந்து மேலே கிளம்பிய ஸூரிய கிரணங்கள் மரங்களின் மேல் இருக்கின்ற

காலம் "அதிவ்ருக்ஷ ஸூரிய:" என்பதினால் ஸாயம் காலம் அக்னிஹோத்திரத்தின் பொருட்டு அக்னி ப்ரணயனம் செய்யும் காலமாகும். அதே மாதிரி காலையில் கிழக்கில் ஸூரிய கிரணங்கள் பிரகாச மாகும் காலம் "ஆவிஸ் ஸூர்ய:" என்பதாகும். அந்தக் காலத்தில் ப்ராத: கால அக்னிஹோத்ர அக்னியை ப்ரணயனம் செய்யவேண்டும்.

மாலையில் ஸூரியன் அஸ்தமிக்காத காலத்திலும் காலையில் ஸூரியன் உதிக்காத காலத்திலும் அக்னி ப்ரணயனம் செய்யவேண்டும்.

உதித ஹோமிகளுக்குக் காலையில் ஸங்கவ காலம் முடிய அக்னிஹோத்ர ஹோம காலம் என்றும், மாலையில் ஸூரிய அஸ்மனத்திற்குப் பிறகு ஒன்பது நாழிகைகள் பர்யந்தம் அக்னிஹோத்ர காலம் என்றும் அறியவும். அதற்கு மேல் கௌண காலம். காலாதி பத்தி ப்ராயச்சித்தம் செய்து அக்னிஹோத்ரம் அனுஷ்டிக்கவேண்டும்.

கோபிலர்:— ஸந்தியாவந்தனம் செய்த பிறகு ஔபாஸனாக்னியை மூட்டி, கோமயசுஷ்கம் (விராட்டி) இந்தனம் இவைகளை போட்டுவிட்டு, நன்றாக அக்னி பிடித்துக் கனிந்த பிறகு ஔபாஸன ஹோமம் செய்யவேண்டும். ஹோம த்ரவ்யம் யஜமானுக்குக் கிடைக்காவிட்டால் ப்ராத: கால ஆஹுதியை ஸாயங்கால ஔபாஸனம் வரையில் செய்யலாம். அதே மாதிரி ஸாயங்கால ஆஹுதியை ப்ராத: கால ஔபாஸனாக்னியில் பூர்வ கால ஆஹுதியைச் சேர்த்து செய்யலாம் என்றும் அறியவும். பூர்ணமாஸ

ஸ்தாலீபாகம் விட்டுப்போனால் அமாவாஸ்யை பர்யந்தும் செய்யலாம். அதே மாதிரி தர்ச ஸ்தாலீபாகத்தை பூர்ணிமை பர்யந்தம் செய்யலாம். அதிக்ராந்த தோஷம் ஏற்படாது. ஆனால் அது கௌண காலமாகும். முக்ய காலம் ப்ரதமை என்று அறியவும்.

பாரத்வாஜர்:—, ஸாய மாஹூதி கால பர்யந்தம் விட்டுப் போன ப்ராத ரௌபாஸனமும் ப்ராத ராஹூதி கால பர்யந்தம், ஸாயமௌபாஸனமும் செய்யலாம். அதிக்ரமித்த தோஷமேற்படாது.

## 25. ஹோமார்ஹமான ஸமித்துக்கள்.

புரசு, கருங்காலி, அரசு, வன்னி, அத்தி இந்த மரத்தின் ஸமித்துக்களும், நாயுருவி, எருக்கு, அருகம் புல், தர்ப்பம், இவைகளும் ஹோமயோக்யமாகச் சொல்லப்படுகிறது.

ஸமித்துக்கள் நல்ல தோலுள்ளவைகளாயும், கோணலில்லாதவைகளாயும், மழமழப்புள்ளவைகளாயும், ஒரே மாதிரியாயும் இருக்கவேண்டும். பத்து அல்லது பன்னிரெண்டு அங்குலமுள்ளவை சிறந்தவைகளாகும். அவைகள் ஈரமுள்ளவைகளாயும், காய்ந்தவைகளாகவும், சரியாக வெட்டப்பட்டவைகளாயும், ஆள் காட்டி விரல் அளவிற்கு உருண்டையாயும், பிளக்கப் படாதவைகளாயும், இருகிளையில்லாதவைகளாயும் புழுவெட்டு இல்லாதவைகளாயும் இருக்கவேண்டும்.

ஸமித்து, பவித்ரம், வேதம் இம்மூன்றும் ஒட்டை அளவுள்ளதாக இருக்கவேண்டும். இத்மம் இரண்டு

மடங்கும், பரிதி மூன்று மடங்கும் நீளமுள்ளதாக இருக்கவேண்டும் (இது ச்ரௌத கர்மாக்களில்). ஸ்மார்த்தத்தில் இத்மம் ஒரு ஒட்டையளவும், பரிதி இரண்டு ஒட்டையளவுள்ளதாயுமிருக்கலாம் என்று அறியவும்.

அக்னியில் இந்தனமாக உபயோகப்படுத்தக்கூடாத வ்ருக்ஷங்கள் சொல்லப்படுகின்றன. மலையகத்தி, தானி, விளா, நெல்லி, கொன்னை, பாலை, கடம்பு, வேம்பு, புங்கு, திலகம், முள்ளிலவு, நறுவிளி இந்த மரங்களின் ஸமித்துக்கள் விறகுகள் ஒரு பொழுதும் அக்னியின் பொருட்டு உபயோகப்படுத்தக்கூடாது. காய்ந்த துளசி சுள்ளிகளால் ஜ்வலித்த அக்னியில் ஹோமம் செய்வது அக்ஷய பலத்தைக் கொடுக்கும் என்று அறியவும்.

ஆபஸ்தம்பர்:— அக்னியில் போடும் கட்டைகளைப் ப்ரோக்ஷிக்காமல் போடக்கூடாது.

## 26. ஹோம த்ரவியங்கள்

காத்யாயனர்:— க்ருதம், க்ருதாக்ருதம், அக்ருதம் என்று மூன்று விதமாயுள்ளது ஹவிஸ் என்று அறியவும். இவைகளுக்கு க்ரமமாக லக்ஷணம் சொல்லப்படுகிறது. அன்னம், மாவு முதலியவை க்ருதமெனப்படும். அரிசி முதலியது க்ருதாக்ருதம். நெல் முதலியது அக்ருதமெனச் சொல்லப்பட்டது. இவ்விதம் மூன்று விதமாய் ஹவிஸ்ஸானது வித்வான்களால் சொல்லப்பட்டது.

ஆபஸ்தம்பர்:- பசுக்களை விரும்புகிறவன் பாலி னாலும், இந்திரிய காமன் தயிரினாலும், பந்து ஸம்ருத்தியை விரும்புகிறவன் கஞ்சியினாலும், அன்னத்தை விரும்புகிறவன் அன்னத்தாலும், ஓஜஸ்ஸை விரும்புகிறவன் அரிசியினாலும், யசஸ்ஸை விரும்பு கிறவன் மாமிசத்தினாலும், ப்ரம்ம வர்ச்சஸ்ஸை விரும்புகிறவன் ஸோம ரஸத்தினாலும், தேஜஸ்ஸை விரும்புகிறவன் ஆஜ்யத்தாலும், ஹோமம் செய்ய வேண்டும். பயஸ் (பால்) ஹோமம் நித்யம் ச்லாக்கிய மானது. பலத்தை உத்தேசித்துத் தனியாகச் சொல்லப் பட்டது.

வ்யாஸர்:- காராம் பசுவின் பாலினால் எவர்கள் அக்னிஹோத்ர ஹோமம் செய்கிறார்களோ அவர்கள் சூர்ய மண்டலத்தை பிளந்துகொண்டு சாச்வதமான ப்ரம்மத்தை அடைகிறார்கள்.

எந்த திரவியத்தால் மாலையில் ஹோமம் செய்கிறானோ அதனாலேயே காலையில் ஹோமம் செய்யவேண்டும்.

செந்நெல், சாமை, நீவாரம், சம்பா நெல், கோதுமை, யாவகம், இவைகளின் அரிசிகள் ஹோமம் செய்ய தகுந்தவைகள். யாவநாளம், ப்ரியங்கு, நீவாரம் நெல், கோதுமை சம்பா நெல், யவை இவைகள் உள்ள படியே ஹோமம் செய்யலாம். எள்ளும் அதே மாதிரி ஹோமம் செய்யலாம்.

திரவமாயுள்ள திரவியத்தை ஸ்ருவத்தினால் அப்படியே ஹோமம் செய்யவேண்டும். கடினமான திரவியத்தைக் கையினால் எடுத்து ஹோமம் செய்யவேண்டும்.

பால், தயிர், கஞ்சி, நெய், அன்னம், அரிசி, ஸோமம், மாமிஸம், எண்ணெய், ஜலம் இந்த பத்து பதார்த்தங்களும் அக்னிஹோத்திர ஹோமங்களுக்கு உகந்தவைகள்.

அக்னிஹோத்ர ஹோமத்தில்போல் ஔபாஸனாக்னியில் மந்திரமில்லாமல் ஸமஸ்காரம் செய்து அல்லது மூன்று தரம் ப்ரோக்ஷணம் செய்து ஹோமம் செய்யலாம். ஆனால் மாமிசத்தை ஹோமம் செய்யக் கூடாது.

அக்னிஹோத்ர ஹோமத்திற்கு பால் முக்கிய திரவ்யமாகும். அது கிடைக்காவிடில் நெல், யவை இவைகளை ஹோம திரவியமாக எடுத்துக் கொள்ளலாம். வேறு ஔஷதி திரவியங்களும் கிரஹித்துக் கொள்ளலாம். ஆனால் உளுந்து, காட்டு பயிறு, நாய் தினை, கேழ்வரகு இவைகளை கிரஹிக்கக்கூடாது.

ஒரு படி தானியம் அறுபத்து நான்கு ஆஹுதிகளுக்குப் போதுமானதாகும். எள்ளு அரைப்படியும், நெய் கால்படியும், அறுபத்து நான்கு ஆஹுதிகளுக்குப் போதுமானது என்று அறியவும்.

போதாயனர்:— நெல், யவை இவைகள் 100 கொண்டது ஒரு ஆஹுதி பரிமாணமாகும். அன்னமானால் இரண்டு மடங்கு அளவு, அதாவது மயில் முட்டை அளவு என்று அறியவும். கோழி முட்டையின் அளவு பிண்டமெனப்படும் அவதானம் என்பது பெருவிரல் கணு அளவுள்ளது. ஸ்விஷ்டக்ருத் முதலியது அவதானத்தை விடப்பெரியதாய் நாலு கணு அளவுள்ளதாக இருக்கவேண்டும்.

ஔபாஸன ஹோமம் நுனி விரல்களால் செய்யக் கூடியது. விரல்களின் வடபுறத்தால் ஹோமம் செய்ய வேண்டும் என்பது ஸ்மருதி வசனமாகும்.

நிமிர்த்துப்பட்டகையினால், பெருவிரலின் நுனியால் பிடிக்கப்பட்டுள்ள ஹவிஸ்ஸை, எல்லாவிரல் களும் சேர்ந்துள்ள கையையுடையவனாய் மௌனியாக ஹோமம் செய்யவேண்டும்.

வஸ்திரம், இலை, கை, முறம், வாய், கட்டை, விசிறி, இவைகளால் அக்னியை ஜ்வலிக்கச் செய்யக் கூடாது என்று ஸ்ம்ருதி கூறுகிறது.

ஊதுகுழாய், புல், கட்டை இவைகளில் ஒன்றை மத்தியில் வைத்துக்கொண்டு முகத்தினால் அக்னியை ஜ்வலிக்கச் செய்யவேண்டும். "முகாதக்னி ரஜாயத", விராட் புருஷனுடைய முகத்திலிருந்து அக்னி உண்டா னார் என்று வேதம் கூறுகிறது. முன்பு முகத்தால் அக்னியை ஜ்வலிக்கச் செய்யக்கூடாது என்பது வெறும் வாயினால் நடுவில் தமனியை வைத்துக் கொள்ளாமல் அக்னியை ஊதக்கூடாது என்று அறியவும்.

காய்ந்த கட்டைகளால் ஜ்வலிக்கிறதாயும், புகையில்லாததாயும், சின்ன சின்ன ஜ்வாலையுடன் சாந்தமானதாயும் இருக்கிற அக்னியில் ஹோமம் செய்யவேண்டும்.

ஆபஸ்தம்பர்:— அக்னியிலுள்ள தணல்கள் மெல்லியதான சாம்பலுடன் சேருகின்றன, அவைகளி லிருந்து நீல ப்ரகாசமும் ஜ்வாலையும் உண்டாகிறது.

அக்காலத்தில் ஹோமம் செய்வது ப்ரம்மத்தினிடத்தில் ஹோமம் செய்ததாக ஆகிறது என்று அறியவும்.

அக்னி காரியமானது அவர் அவர்கள் கிருஹ்ய ஸூத்திரத்தை அனுசரித்துச் செய்துகொண்டு ஹோமம் முறைப்படி செய்யவேண்டும் என்று அறியவும்.

வ்யாஸர்:– ஸ்நான காலத்தில் பேசினால் வருணன் அழகை அபகரிப்பான். ஹோமம் செய்யும் பொழுது பேசினால் அக்னி பணத்தை அபகரிப்பான். சாப்பிடும் பொழுது பேசினால் ம்ருத்யுவினால் பீடிக்கப்படுவான். ஆகையால் பேசாமல் மௌனமாக இந்த மூன்று காரியமும் செய்யவேண்டும்.

ஆபஸ்தம்பர்:– ஔபாஸனாக்னி எப்பொழுதும் தரிக்கப்பட வேண்டும், நித்தியமாக இருக்கவேண்டும். அதாவது உகையில் (குண்டான்) அக்னியை ரக்ஷிக்க வேண்டும் என்பது கருத்து. அக்னி ஏதாவது காரணத்தால் அணைந்தால் மதனம் செய்து அக்னியை கிரஹிக்கலாம். அல்லது வேதாத்யயனம் செய்த கிருஹஸ்தனுடைய கிருஹத்திலிருந்து அக்னியை கிரஹிக்க வேண்டும்.

அக்னி தார்யமாக இருந்தாலும் நான்கு நாள் முழுவதும் ஹோமம் செய்யாவிட்டால் லௌகிகமாகி விடும்.

சௌனகர்:– அக்னி அனுகதாமாகி (அணைந்து) இரண்டு காலம் ஹோமம் செய்யாவிட்டாலும், தம்பதிகள் வெளியூர் சென்றாலும் அக்னியானது லௌகிகமாகி

விடும். அதாவது ஹோமத்திற்கு உகந்த அக்னியில்லை என்று அறியவும்.

பாரத்வாஜர்:— ஔபாஸனாக்னியானது அனுகதமானால் பன்னிரெண்டு நாள் பர்யந்தம் ப்ராயச்சித்தாஹுதி செய்து ஹோமம் செய்யலாம். மேற்கொண்டு 12 நாளுக்குப் பிறகுதான் புனஸ் ஸந்தானம் செய்யவேண்டும்.

போதாயனர்:— அக்னி அனுகதமாகி மூன்று நாளைக்குள்ளானால் "அஸே அக்னேயே:" என்ற ஹோமம் செய்யவேண்டும். பிறகு ஆறுநாள் பர்யந்தம் "தந்துமதீ" என்ற ரிக்கினால் ஹோமம் செய்ய வேண்டும். பிறகு ஏழாவது நாள் முதல்12 நாள் பர்யந்தம் "மனோஜ்யோதி" என்ற ரிக்கினால் ஹோமம் செய்யவேண்டும். அதற்குப் பிறகுதான் புனரா தானம் செய்துகொள்ள வேண்டும். இந்த போதாயன வசனத்தில் அக்னி அனுகத ப்ராயசித்தம் 12 நாள் வரையில் சொல்லப் பட்டிருக்கிறது. ஸந்தானம் சொல்லப்படவில்லை இந்த விஷயத்தில் அவீரவர் க்ருஹ்யத்தைக் கொண்டு தீர்மானம் செய்துகொள்ளவும்.

எவ்விதத்தாலும் ஔபாஸக்னியை தரிக்க முடியாமல்போனால் மூன்று இடத்தில் ஸமாரோபணம் செய்யலாம். அதாவது அரணி கட்டைகளில், தன்னி டத்தில், ஸமித்துக்களில், ஸமாரோபணம் செய்யலாம். அதில் ஆத்ம ஸமாரோபணம் யஜமானன் ஸ்வயம் செய்யவேண்டும். ஸமித்தில் ரித்விக்கள் செய்யலாம்.

அங்கீரர்:— எவன் ஸ்வர்ணமயமான மேருவை அல்லது சகல பூமியையும் தானம் செய்கிறானோ

அவன் ஸாயம் ப்ராத: செய்யப்பட்ட ஔபாஸன ஹோமத்தை முறைப்படி செய்ததற்கான புண்ணியம் சமமாகுமா ஆகாதா என்பது தெரியவில்லை. அவ்வளவு உயர்ந்தது ஔபாஸன ஹோமம் என்பது கருத்து. அக்னிஹோத்ரத்தையும் உதாஹரிக்கலாம்.

மனு:— அக்னியில் விதிப்படி செய்யப்பட்ட ஹோமம் சூர்யனை அடைகிறது, பிறகு சூர்யனிடமிருந்து மழை பெய்கிறது. மழையிலிருந்து பூமியில் அன்னம் உண்டாகிறது. பிறகு ஜனங்களுக்கு சௌக்கியம் ஏற்படுகிறது. ஆகையால் தெய்வகார்யமான ஹோமம் முதலியவைகளை சிரத்தையுடன் செய்கிறவன் உலகத்தை ரக்ஷிக்கிறான் என்று அறியவும்.

## 27. ப்ரம்மயக்ஞத்தின் முறை.

பரத்வாஜர்:— பசுவை முதுகில் சொறிந்து, அரசமரத்தை ப்ரதக்ஷிண நமஸ்காரங்கள் செய்து, பெரியோர்களையும், குருக்களையும் அருகில் சென்று நமஸ்கரிக்கவேண்டும். பிறகு ப்ரம்ம யக்ஞம் செய்ய வேண்டும்.

ப்ரம்ம யக்ஞத்தைச் செய்கிறவன் சூர்யன் உதித்த பிறகு, கிழக்கு திக்கில் அல்லது வடக்கு அல்லது ஈசான்ய திக்கில், கிராமத்திற்கு வெளியில், அதாவது எந்த இடத்தில் இருக்கும்பொழுது கிராமத்தின் வீட்டுக்கூரை தெரியாதோ அந்த பரிசுத்தமான இடத்தில் இருந்து கொண்டு. ப்ரம்ம யக்ஞம் செய்ய வேண்டும் என்று வேதம் கூறுகிறது.

காலையில் அல்லது மத்யான்ஹத்தில் ப்ரம்ம யக்ஞம் விதிக்கப்படுகிறது. காலையில் ஸந்தியா வந்தனம், ஔபாஸனம், இவைகளை செய்துபிறகு ப்ரம்ம யக்ஞம் செய்ய வேண்டும். மத்யாஹ்னத்தில் செய்வதானால் மாத்யாஹ்னிகம் செய்துபிறகு ப்ரம்ம யக்ஞம் செய்ய வேண்டும்; பிறகு தேவரிஷி பித்ரு தர்ப்பணம் செய்யவும், அல்லது வைச்வதேவம் செய்த பிறகும் ப்ரம்ம யக்ஞம் அனுஷ்டிக்கலாம்.

ஆபஸ்தம்பர்:— பகல் போஜனத்திற்குமுன் ஜல சமீபத்திற்குச் சென்று ஸ்வயம் சுத்தனாக இருந்து கொண்டு சுத்தமான பிரதேசத்தில் வேதம் சொல்ல வேண்டும். இது ப்ரம்ம யக்ஞம் என்று சொல்லப் படுகிறது.

அவரவர்களுடைய வேதத்தைச் சொல்வது ப்ரம்ம யக்ஞம் என்று கூறப்படுகிறது. ப்ரம்ம யக்ஞத்தில் சிரத்தை உள்ளவன் ப்ரம்ம லோகத்தை அடைவான்.

ஹாரீதர்:— ப்ராம்மணன் தர்ப்பங்களில் உட்கார்ந்து கொண்டு தர்ப்பம் தரித்து ப்ரம்ம யக்ஞ விதிப்படி சிரத்தையுடன் ப்ரம்ம யக்ஞம் செய்ய வேண்டும். ப்ரம்ம யக்ஞன யக்ஷயே, என்று ஸங்கல்பம் செய்து வித்யுதஸி என்ற மந்திரத்தால் உள்ளங்கை, புறங்கை இவைகளை ஜலத்தால் மார்ஜனம் செய்து, பிறகு இடது கை கால்களை அலம்பி மூன்று தரம் ஜலத்தை ஆசமனம் செய்து இரு தடவை மேல் கீழ் உதடுகளை ஜலத்தால் துடைத்துப் பிறகு ஒரு தடவை ஜலத்தைக் கொண்டு உதடுகளைச் சேர்த்துத் துடைத்து, சிரஸ், கண்கள், மூக்குகள், காதுகள், மார்பு

இவைகளை ஸ்பர்சித்து, தர்ப்பங்களை ஆஸனமாக பரத்தி அதில் இடது காலில் வலது காலை மேலாக இருக்கும்படி உட்கார்ந்து கொண்டு பவித்ரம் தரித்து யோக வேஷ்டியுடன் கிழக்குமுகமாக இருந்து ப்ரணவத்துடனும் வ்யாஹ்ருதியுடனும் காயத்ரி, வேதாதிகள் இவைகளைச் சொல்லி பிறகு வேதத்தை வரிசையாகச் சொல்லவேண்டும். முதல் நாள் முடித்த பாகத்திற்குப் பிறகு மேற்கொண்டு மறுநாள் ஆரம்பிக்க வேண்டும். முடிந்த அளவு வேதம் சொல்லி பிறகு ''நமோப்ரம்மணே'' என்ற ரிக்கை மூன்று தரம் சொல்லி முடிக்கவேண்டும். பெரியோர்களிடம் நன்கு தெரிந்துகொண்டு செய்யவும்.

ப்ரம்ம யக்ஞத்தில் விஷ்ணு த்யானம் செய்து கொண்டு புருஷ ஸூக்தத்தை ஜபிக்கவும். அங்கங் களுடன் கூடிய வேதபாகங்களை ஜபித்துபுண்ணியம் கிடைக்கும்.

பகலில் செய்யவேண்டிய கர்மாக்களை இரவில் முதல் யாமம் பர்யந்தும் செய்யலாம். ஆனால் ப்ரம்ம யக்ஞம், சூர்ய நமஸ்காரம் இவ்விரண்டும் இரவில் செய்யக்கூடாது.

### 28. இரண்டாம் பாகத்தில் செய்யவேண்டிய காரியங்கள்.

யாக்ஞவல்க்யர்:– இனி பகலில் முதல் 3 3/4 நாழிகைகளுக்குப் பிறகு செய்யவேண்டிய காரியங்கள் கூறப்படுகிறது. ஔபாஸன ஹோமம் செய்துவிட்டு சூர்ய தேவதையினுடைய மந்திரங்களை ஜபிக்கவேண்டும்.

பிறகு வேத சாஸ்திரங்களை சிந்தனம் செய்யவேண்டும். சிஷ்யர்களுக்குப் பாடங்களைச் சொல்லிக்கொடுக்க வேண்டும். புஷ்பங்கள், ஸமித்துக்கள், தர்ப்பங்கள் இவைகளை கிரஹிக்கவேண்டும். இவைகளும் 3 3/4 நாழிகைகளுக்குப் பிறகு செய்யவேண்டிய காரியங்கள் என்று அறியவும்.

(பார்க்க : அனுபந்தம் 4)

இந்த ஸ்லோக மந்திரங்களைச் சொல்லிக்கொண்டு துளஸியை கிரஹிக்கவேண்டும்.

செவ்வாய், வெள்ளி, மன்வாதிகள், யுகாதிகள், மத்யாஹ்னத்திற்குப் பிறகு, இந்த காலங்களில் துளஸீ பத்ரம் கிரஹிக்கக்கூடாது. ஸங்கரமணம், அமாவாஸ்யை, பூர்ணிமா, த்வாதசீ, இரவு, ஸந்தியா காலம், இந்த காலங்களிலும் துளஸீ பத்ரத்தைக் கிரஹிக்கக் கூடாது, மீறி கிரஹித்தால் விஷ்ணுவின் சிரஸ்ஸை ஹிம்ஸித்த தோஷம் ஏற்படும் என்று அறியவும்.

### 29. மூன்றாம் நான்காம் பாகத்தில் செய்யவேண்டிய காரியங்கள்.

ஹாரீதர்:— தன்னால் ரக்ஷிக்கத் தகுந்தவர்களை பரிபாலனம் செய்வதற்கு சாஸ்த்ரீயமான வழியில் தனம் சம்பாதிக்கவேண்டும். தார்மீகர்களான ராஜாக்களை அடைந்து தனம் சாம்பாதிக்கவேண்டும்.

தாய், தந்தை, குரு, பத்னீ, குழந்தை, தாஸன், தன்னை அண்டியவன், அப்யாகதன், அதிதி, அக்னி, இவர்கள் போக்ஷிக்கத் தகுந்தவர்கள். ஞாதி, பந்து, பணமில்லாதவன், பந்துக்களால் விடப்பட்டவன்,

தரித்தரன், இவர்களும் ரக்ஷிக்கத் தகுந்தவர்களாவார்கள். இவர்களை ரக்ஷிப்பது புண்ணியம். நல்ல லோகங்களை அடையலாம்.

எவனை ஆச்ரயித்து பந்துக்கள் ஜீவனம் செய்கிறார்களோ அவன் ஒருவனே ஜீவித்து இருப்பவன்; அதாவது பரோபகாரியாகையால் புண்ணியசாலி என்பது கருத்து. மற்றவன், சம்பாதித்து தன் வயிற்றை வளர்க்கிறவன், செத்தவன் மாதிரி என்ற அறியவும்.

இந்த மூன்றாவது பாக காரியங்கள் 7 1/2 நாழிகைக்கு மேல் 11 1/4 நாழிகைக்குள் செய்ய வேண்டியவைகள்.

சங்க:— ப்ராத: காலத்தில் நக்ஷத்திரம் இருக்கும் பொழுது ஸந்தியா வந்தனம் செய்யவேண்டும். பிறகு 12 நாழிகைக்குமேல் மாத்யாஹ்னிக ஸ்நானம் செய்து பிறகு மாத்யாஹ்னிகம் அனுஷ்டிக்கவேண்டும். ஸாயங் காலத்தில் ஸூரியன் பாதி தெரியும் பொழுது ஸாயம் ஸந்தியா வந்தனம் செய்யவேண்டும். மாத்யாஹ்னிகத்தில் ஒரு அர்க்யம் கொடுக்கவேண்டும். பிறகு த்யானம் செய்து முடிந்த அளவில் காயத்ரீ ஜபம் செய்து பிறகு தேவ ரிஷி பித்ரு தர்ப்பணம் செய்யவேண்டும்.

வ்யாஸர்:— ஆசமனம் செய்து காலையில் ப்ரம்ம யக்ஞம் செய்யாவிடில் மாத்யாஹ்னிகம் செய்து பிறகு ப்ரம்ம யக்ஞம் செய்யவேண்டும். பிறகு தேவர்கள், ரிக்ஷிகள், பித்ருக்கள், இவர்களை உத்தேசித்து ப்ரணவம் சொல்லி இவர்களின் நாமாக்களை உச்சரித்துத் தர்ப்பயாமி என்று தர்ப்பணம் செய்ய வேண்டும்.

தேவர்களையும், ப்ரம்ம ரிஷிகளையும், அக்ஷதை கூடிய ஜலத்தால் தர்ப்பணம் செய்யவேண்டும். எள் கலந்த ஜலத்தால் பித்ருக்களை உத்தேசித்துத் தர்ப்பணம் செய்யவேண்டும்.

பூணூலை உபவீதமாகத் தரித்து தேவதைகளை யும், மாலையாகத் தரித்து ரிஷிகளையும், இடமாகத் தரித்து பித்ருக்களையும், அவரவர் தீர்த்தங்களால் தர்ப்பணம் செய்யவேண்டும். தேவதைகளுக்கு ஒருதரமும், ரிஷிகளுக்கு இரண்டு தடவையும், பித்ருக்களுக்கு மூன்று தடவையும் தர்ப்பணம் செய்யவேண்டும்.

ஹாரீதர்:- சாஸ்திர முறை அறிந்தவன் உலர்ந்த வஸ்த்திரம் தரித்து பூமியில் தர்ப்பத்தைப் பரப்பி, தர்ப்பணம் செய்யவும். பாத்திரத்தில் தர்ப்பணம் செய்யக்கூடாது. தில தர்ப்பணம் கிருஹத்திற்கு வெளியே செய்யவேண்டும்.

சக்தி அற்றவன் வீட்டில் தர்ப்பணம் செய்ய நேர்ந்தால் பாத்திரத்தில் உள்ள ஜலத்தில் எள்ளைப் போட்டு, அந்த ஜலத்தால் மற்ற பாத்திரத்தில் தர்ப்பணம் செய்யவேண்டும். மண் பாத்திரம் உபயோகப்படுத்தக் கூடாது.

நிஷித்த காலத்தில் கூட அரிசி கலந்த ஜலத்தால் தர்ப்பணம் செய்யலாம்.

தேவர்களும், பித்ருக்களும் ஜலாஞ்சலியை விரும்புகிறார்கள். அதிகாரியாக உள்ள புத்திரர்கள் தர்ப்பணம் செய்யாவிட்டால் வந்தவர்கள் ஆசையற்ற வர்களாக திரும்புகிறார்கள். இவர்களுடைய சாபத்திற்கு பாத்திரனாவான் என்பது கருத்து.

## 30. தேவ பூஜை.

தேவ பூஜை செய்யும் காலம் சொல்லப்படுகிறது. அவரவர்கள் சாகையில் சொல்லப்பட்ட கர்மாக்களைச் செய்து அக்னிஹோத்ரம் செய்து பகவான் வாசு தேவனுக்குப் பூஜை செய்யவேண்டும்.

ஹாரீதர்:— ஸந்தியா வந்தனம், ஔபாஸனம், ப்ரம்மயக்ஞம், ஸூரிய நமஸ்காரம், இவைகளைச் செய்த பிறகு தேவ பூஜை செய்யவேண்டும்.

விக்ஞானேச்வரர்:— மத்யாஹ்னத்தில் தர்ப்பணம் செய்த பிறகு சந்தனம், புஷ்பம், அக்ஷதை முதலிய பூஜாத் திரவியங்களைச் சேர்த்துக்கொண்டு, அவரவர் களுடைய பக்திக்குத் தகுந்தவாறு ப்ரம்மா, விஷ்ணு, சங்கரன் இவர்களுக்குள் ஒருவரை வேத மந்திரங்களா லும், நாலாவது வேற்றுமையுடன் நம: நம: என்ற சப்தம் சொல்லி ஆஸனாதி உபசாரங்கள் செய்து பூஜிக்கவேண்டும். ஆக பூஜை காலையிலோ மாத்யாஹ் னத்திலோ செய்யலாம் என்பது கருத்து.

ஸூரியனிடமிருந்து ஆரோக்கியத்தையும், அக்னி யிடமிருந்து சம்பத்தையும், மஹேஸ்வரனிடமிருந்து ஞானத்தையும், ஜனார்த்தனரிடமிருந்து மோக்ஷத்தை யும், அடையப் பிரார்த்திக்கவேண்டும்.

மனு:— கிருஹஸ்தன், ஸூரியனையும், அல்லது விஷ்ணுவையும், பரமேஸ்வரனையும், ப்ரம்மாவையும் வேத மந்திரங்களால் பூஜை செய்யவும். மேற் சொன்ன தேவதைகளில் இஷ்டப்படி ஒருவரையும்,

எல்லாரையும் பூஜை செய்யலாம் என்பது தெரிவிக்கப்படுகிறது.

பஞ்ச மஹா யக்ஞங்களை அனுஷ்டிக்கும் கிருஹஸ்தன் ஸூரியன், அம்பிகை, விஷ்ணு, கணபதி, மஹேஸ்வரன் இந்த ஐந்து தேவதைகளையும் பூஜிப்பது ச்லாக்கியமானது.

### 31. விஷ்ணு பூஜை.

நாரதர்:— யாகம் முதலிய அக்னி காரியங்களைச் செய்யும் தீக்ஷிதர்களுக்கு அக்னியில் ஹரி பிரகாசிக்கிறார். ஸகுணோபாஸகர்களுக்கு ஸூர்ய மண்டலத்தில் வாசுதேவன் பிரகாசிக்கிறார். லோக வ்யவாரங்களில் ஈடுபட்டவனுக்கு ஸாலக்ராமாதி ப்ரதிமைகளில் பகவான் பிரகாசிக்கிறார். த்யானம் செய்யும் யோகிகளுக்கு ஹ்ருதய குகையில் விஷ்ணு பிரகாசிக்கிறார். ஆகையால் பகவானை எங்கும் பூஜை செய்யலாம் என்பது கருத்து.

ஸாலக்ராமசிலையும் த்வாரவதீ சிலையும் எந்த இடத்தில் சேர்ந்து பிரகாசிக்கிறதோ அவ்விடத்தில் மோக்ஷ புருஷார்த்தம் சுலபமாகக் கிடைக்கும். ஸாலக்ராமசிலையிருக்கும் சமீபத்தில் இறந்தவர்கள் சகல பந்தங்களிலிருந்தும் விலகி மோக்ஷ சுகத்தை அடைவார்கள். ஸாலக்ராமசிலையில் பகவான் வாசுதேவர் மஹா லக்ஷ்மியுடன் நித்யாவாஸம் செய்கிறார். ஆகையால் ப்ரதிஷ்டை, ஆவாஹனம், விஸர்ஜனம், செய்யக்கூடாது, மற்ற உபசாரங்கள் செய்து பூஜிக்கலாம்.

புருஷ ஸூக்தத்தால் மஹா விஷ்ணுவை பூஜை செய்யலாம். க்ருஷ்ணயஜுர் வேதத்தில் 18 ரிக்குகள் இருக்கின்றன. இதற்கு நாராயண ரிஷி:, 15 ரிக்குகளுக்கு அனுஷ்டுப் சந்தஸ்ஸும், 3 ரிக்குகளுக்கு த்ரிஷ்டுப் சந்தஸ்ஸும், தேவதா ஸ்ரீ நாராயணன் என்றும் அறியவும்.

யஜுர் வேத புருஷ ஸூக்தத்திற்கு 12 ரிக்குகளுக்கு தனித்தனி ரிஷிகளும் தேவதைகளும் கூறப்படுகிறது. பிறகு பூஜை சொல்லப்படுகிறது. ஆவாஹனம், ஆஸனம், பாத்யம், அர்க்யம், ஆசமனம், மதுபர்க்கம், ஸ்னானம், வஸ்த்திரம், உபவீதம், சந்தனம், புஷ்பம், தூபம், தீபம், நைவேத்யம், தாம்பூலம், ப்ரதக்ஷிணம், நமஸ்காரம், விஸர்ஜனம், என்று 18 உபசாரங்கள் ஒவ்வொரு வரிசையாக ரிக்காலும் செய்யவேண்டும். தீபராதனத் திற்கும் மந்திரபுஷ்பத்திற்கும் தனியாக மந்திரம் சொல்லி செய்யவேண்டும். அது 18 உபசாரங்களைக் காட்டிலும் தனிப்பட்டவைகளாகும். ரிக்வேத புருஷ ஸூக்தப்படி 16 உபசாரங்கள் செய்ய வேண்டும் என்று அறியவும்.

அபரார்க்கம் என்ற யாக்ஞவல்க்ய ஸ்ம்ருதி வ்யாக்யானத்தில் அஷ்டாக்ஷரத்தினால் பகவானை கந்தம், புஷ்பம் முதலிய உபசாரங்களால் பூஜை செய்யவும். அது பகவானுக்குப் ப்ரீதிகரமானது. ப்ரணவத்துடன் கூடிய நமோ நாராயணாய என்ற மந்த்ரம் ச்ரேஷ்டமானது. அஷ்டாக்ஷர ஜபத்தினால் தபஸ், யாகம் முதலியவைகளால் சாதிக்கமுடியாத பலனை அடையலாம். ஆகையால் அஷ்டாக்ஷரம் ரொம்ப ச்ரேஷ்டமானது என்று கூறப்பட்டிருக்கிறது.

புலஸ்த்யர்:— பாலிலிருந்து தயிர், வெண்ணை, நெய் இவைகள் எப்படி உண்டாகின்றனவோ அப்படியே

பகவானுக்கு பால் அபிஷேகம் செய்தால் சகல காம்யங்களும் சித்திக்கும். ஆகையால் பால் அபிஷேகம் சிரேஷ்டமானது என்று அறியவும்.

குங்குமப்பூ, அகில், கஸ்தூரி,சந்தனம் இவைகளை அரைத்து பகவானுடைய பிம்பத்தில் பக்தியுடன் பூசுகிறவனுக்கு கோடி கல்பகாலம் ஸ்வர்க்கலோக வாஸம் ஏற்படும்.

வெளுப்பு, சிவப்பு, நிறமுள்ள உத்பல புஷ்பங்களும், நீலம், சிகப்பு நிறமுள்ள உத்பல புஷ்பங்களும் (அல்லி) ஸ்ரீ கிருஷ்ணனுக்கு மிகவும் பிரியமானவை. கதம்பம், மருதை,மகிழம்பூ, செங்கழநீர் புஷ்பம் இவைகளும் பகவானுக்குப் பிரியமானவை. இவைகளால் பூஜைசெய்தால் விஷ்ணு லோகமான வைகுண்டத்தில் பிரகாசிப்பான்.

மௌத்கல்யர்:— ஒரு தடவை பில்வபத்திரங்களால் வாசுதேவனை பூஜை செய்தவன் க்ருஷ்ணஸாமீப்யத்தை அடைந்து துக்கம் இல்லாமல் இருப்பான்.

எவன் நல்ல வாசனை உள்ள துளஸீ பத்ரங்களால் பகவான் வாஸுதேவனை அர்ச்சனை செய்து பிம்பத்தை மறைக்கிறானோ அவன் அளவு கடந்த க்ஷேமலாபங்களை அடைவான்.

ஸம்வர்த்தர்:— தேவாலயத்திலும், ப்ராமண கிருஹத்திலும், நாற்சந்தியிலும் தீபம் ஏற்றிவைத்தவன் மேதாவியாயும் ஞானமுள்ளவனாயும் நல்ல பார்வை உள்ளவனாயும் பிறப்பான்.

அரிசி சாதம், நெய் கலந்த சர்க்கரை, யவையினால் செய்யப்பட்ட பாயஸம், பால் நெய் கலந்து பாகம் செய்த அன்னம், தயிர், பால், தேன், பழம், கிழங்கு, காய்கறிகள், கொழுக்கட்டை இவைகளை பகவானுக்கு நிவேதனம் செய்யவேண்டும்.

மூன்று காலங்களிலும் ஹவிஸ்ஸை நிவேதனம் செய்வது உத்தமம். இரண்டு காலம் செய்வது மத்யமம். ஒரு காலம் ஹவிஸ்ஸை நிவேதனம் செய்வது அதம பக்ஷமாகும். பிறகு தாம்பூலம், தீபாராதனம், மந்த்ர புஷ்பம், ப்ரதக்ஷிண நமஸ்காரங்கள் செய்து, பகவானை பிரார்த்தனை செய்து, பாதோதக தீர்த்தப் ப்ராசனம் செய்யவேண்டும்.

## 32. சிவ பூஜா.

இனி சிவபூஜா நியமங்கள் சொல்லப்படுகின்றன. சுத்த சித்தனாக இருந்துகொண்டு மஹாதேவனை பரமேஸ்வரனை ஆராதிக்கவேண்டும். ருத்ர காயத்ரீ அல்லது ப்ரணவம், ஈசான மந்த்ரம், ஸ்ரீருத்ரம், த்ரயம்பகம் இந்த மந்திரங்களால் ஆஸனாதி உபசாரங் களைச் செய்து ஏகாக்கிர சித்தத்துடன் புஷ்பங்கள், பில்வபத்ரம், சந்தனம் இவைகளால் பரமேஸ்வரனை பூஜிக்கவும்.

சிவ மந்த்ர ராஜாவான பஞ்சாக்ஷர மந்த்ரத்தினா லும், பரமேஸ்வரனைப் பூஜிக்கலாம்.

நந்திகேச்வரர்:— எவன் நிறைய பால் கறக்கும் லக்ஷக்கணக்கான பசுக்களை வேதம் முழுவதும் கற்ற

ப்ராம்மணனுக்குத் தானம் செய்கிறானோ, அவனுடைய புண்ணியம் ஒருநாள் லிங்கார்ச்சனை செய்கிறவனுடைய புண்ய பலத்திற்கு சமமாகாது. அதிக பலன் ஏற்படுகிறது என்பது கருத்து.

சிவ லிங்க தரிசனம் புண்ணியத்தைக் கொடுக்கிறது. அதைக் காட்டிலும் லிங்கத்தைத் தொடுவது புண்ணியம். அதைக் காட்டிலும் பூஜை செய்வது புண்ணியம். அதைக் காட்டிலும் சிவ லிங்க தியானம், நமஸ்காரம் இவைகள் மஹா புண்ணிய பலமாகும் என்று அறியவும். மாதத்திற்கு ஒரு தரம் போஜனம் செய்துகொண்டு நியமத்துடன் யவ்ராஜ் ஜீவம் இருக்கிறவனுக்கு எந்த புண்ணியம் ஏற்படுகிறதோ அந்த பலன் ஒருதரம் சிவ லிங்க பூஜை செய்கிறவனுக்கும் ஏற்படுகிறது. இது நிச்சயம்.

நிறைய பால் கறக்கும் பதினாயிரம் பசுக்களை வஸ்திரம் தங்கம் முதலிய தக்ஷிணையுடன் வேதத்தின் கரை கண்டவர்களிடம் தானம் செய்த பலன், சிவனுக்கு ஒரு தடவை பசும்பால் அபிஷேகம் செய்ததற்குச் சமமாகும். சிவலிங்கத்திற்கு க்ஷீராபிஷேகம் செய்வது சிலாக்கியமானது என்பது கருத்து.

எவன் கிருஷ்ணாஷ்டமியில் உபவாஸத்துடன் பரமேஸ்வரனுக்குத் தயிர் அபிஷேகம் செய்கிறானோ அவன் தன் முன்னோர்களுடைய ஏழு வம்சத்தை பாபத்தினிடமிருந்து விலகச் செய்து, தான் சிவலோகத்தில் பிரகாசிக்கிறான்.

பரமேஸ்வரனுக்கு நெய் அபிஷேகம் செய்கிறது ஆயிரம் கோடி கல்பங்களில் சேகரித்த பாபங்களை

அக்னி கட்டைகளை எரிப்பதுபோல் நசிக்கச் செய்கிறது.

பால், தயிர், நெய், தேன், சக்கரை, இவைகளை ஈசாதிமந்த்ரங்களினால் கிரமமாகச் சிவனுக்கு அபிஷேகம் செய்தால் மோக்ஷத்தை அடைவான்.

வாஸனை சந்தனக் குழம்பினால் ஒருதடவை சிவலிங்கத்திற்கு அபிஷேகம் செய்தவன் கந்தர்வ லோகத்தை அடைந்து கந்தர்வர்களால் பூஜிக்கப்படுவான். பரமேஸ்வரனுக்கு அபிஷேகத்தில் பிரியமதிகம். தைலாபிஷேகம் பரமேஸ்வரருக்கு மிக்க சிலாக்கிய மாகக் கூறப்படுகிறது.

ஸ்நானத்திற்குப் பிறகு நல்ல ஜரிகைக் கரை போட்ட வஸ்திரங்களை அகில் தூபத்தில் வாஸனை ஏற்றி பரமேஸ்வரனுக்கு அர்ப்பணம் செய்யவும். கேசம் முதலியவைகள் இல்லாததாயும், புதியதாயும் உள்ள வஸ்த்திரத்தை சிவார்ப்பணம் செய்யவேண்டும். உபவீதம், சந்தனம், ஆபரணம், புஷ்பம் இவைகளால் பரமேஸ்வரனை பூஜிக்கிறவன் சிவலோகத்தில் பிரகாசிக்கிறான்.

காட்டில் உண்டான புஷ்பங்களாலும், பில்வம் முதலிய பத்ரங்களினாலும், தன் தோட்டத்தில் உண்டான புஷ்பங்களாலும் பரமேஸ்வரனைப் பூஜை செய்யவேண்டும். தாழம்பூ சிவ பூஜைக்கு உகந்தது அல்ல. பஞ்சாக்ஷரம் சொல்லி பில்வதளத்தை பரமேஸ் வரனுக்கு அர்ப்பணம். செய்தவனுக்கு சிவஸாயுஜ்ய மேற்படும்.

பிறகு பரமேஸ்வரனுக்குத் தூபம், தீபம், முதலிய உபசாரங்கள் செய்து நைவேத்யத்தை சமர்பிக்க வேண்டும். நைவேத்தியத்தில் உள்ள சாதம் எவ்வளவு அரிசிகளால் பாகம் செய்யப்பட்டதோ, அவ்வளவு யுக ஸஹஸ்ரங்கள் ஸ்வர்க்க லோகத்தில் வஸிப்பவன் என்று பலன் கூறப்படுகிறது. வெல்லம், நெய், நெய்யில் பக்குவமான பக்ஷ்யங்கள் இவைகளை நிவேதனம் செய்கிறவன், உயர்ந்த பொருளை பிறகு பரமேஸ் வரனுக்கு தாம்பூலம், தீப ஆராதனம், மந்தரபுஷ்பம், முதலிய உபசாரங்கள் செய்யவேண்டும். பிறகு ப்ரதக்ஷிணம் நமஸ்காரம், ஸ்தோத்ரம், நர்த்தனம் இவைகளைச் செய்யவும்.

பராசரர்:— குருவினடத்தில் மனுஷ்யன் என்ற எண்ணமும், சிவலிங்கத்தில் சிலை என்ற எண்ணமும், மந்த்ரங்களில் சப்தம் என்ற எண்ணமும் ஏற்படக் கூடாது. ஏற்பட்டால் மஹாபாபம் சம்பவிக்கும் என்பது கருத்து. சிவலிங்கத்தில் ப்ரத்யக்ஷ பரமேஸ்வரன் என்ற சித்த வ்ருத்தி எப்பொழுதும் இருக்கவேண்டும் என்பது கருத்து.

### 33. வைச்வ தேவ ஹோமம்.

ஹாரீதர்:— ப்ராம்மணன் புருஷ ஸூக்கத்தினால் முறைப்படி பகவானை பூஜித்துவிட்டு, வைச்வதேவ ஹோமம், பலிகர்மா இவைகளைச் செய்யவும்.

எந்த அக்னியில் சமையல் செய்யப்பட்டதோ அந்த அக்னியில் வைச்வதேவம் செய்யவேண்டும். வைச்வதேவம் செய்யாமல் போஜனம் செய்கிறவன் பாபத்தைச் சாப்பிடுகிறவனாவான்.

பஞ்ச மஹா யக்ஞங்களைக் காட்டிலும் வைச்வ தேவம் தனி கர்மாவாகும். ப்ரகரண பேதத்தாலும், வைச்வதேவம் என்ற ஸம்ஞா பேதத்தாலும், வேறு கர்மா என்று அறியவும். பாஷ்யத்தில் வைச்வதேவ ப்ரயோகமும், பஞ்ச மஹா யக்ஞங்களுடைய ப்ரயோகமும் தனித்தனியாகக் கூறப்பட்டிருக்கிறது.

எமன்:– கிருஹஸ்தனுக்கு ஒவ்வொரு நாளும் ஐந்து ஹிம்ஸாஸ்தானங்கள் இருக்கின்றன. அதாவது கண்டினீ, உரல், உலக்கை முதலியவைகள்; பேஷிணி அம்மி, குழவி முதலியது; சுல்லீ, அடுப்பு முதலியது; ஜலகும்பம், ஜலம் வைத்துக் கொள்ளும் குடம் முதலியது; உபஸ்கரம், முறம், முதலியது; இவைகள் ஐந்து ஹிம்ஸாஸ் தானங்களாகும். இவைகளைக் கொண்டு பாகம் முதலியன தயார் செய்யவேண்டும். குடும்ப நிர்வாகத்தின் பொருட்டு இந்த காரியம் தினமும் அவசியம் செய்ய வேண்டியிருப்பதால் பாபத்திற்கு வசமாகிறான். அதைப் போக்கிக்கொள்ள பஞ்ச மஹா யக்ஞங்கள் அவசியம் செய்யவேண்டியிருக்கிறது.

ப்ரஜாபதி:– கிருஹஸ்தர்கள் தினம்தோறும் காலையிலும், மாலையிலும், ஹிம்ஸா ஸ்தானத்தி லிருந்து தனக்கு ஏற்படும் தோஷத்தைப் போக்கிக் கொள்ளுவதற்கு வைச்வதேவம், பலிஹரணம் இவை களை அவசியம் செய்யவேண்டும்.

அக்னியைப் பிரதிஷ்டை செய்து அதில் வைச்வதேவ ஹோமம் செய்வதற்கு முன்பு "தேவக்ருதஸ்ய" என்ற எட்டு மந்திரங்களால் ஸமித் சகலங்களைப் பெரியோர்கள் ஹோமம் செய்கிறார்கள். இதனால் பாப நிவிருத்தி ஏற்படுகிறது.

ஆபஸ்தம்பர்:— ஔபாஸனாக்னியில் அல்லது பாகம் செய்த அக்னியில் அன்னத்தைக் கையினால் எடுத்து மேல் சொன்ன மந்திரங்களினால் ஆறு ஹோமங்களும், ஏழாவதாக ஸ்விஷ்டக்ருத ஹோமமும் செய்யவேண்டும். ஔபாஸனாக்னியில் பாகம் (சமையல்) செய்யலாம் என்று சொல்லப்பட்டது. ஆகையால் பாகம் செய்த அக்னியில் ஹோமம் செய்யவேண்டும் என்பது கருத்து.

கௌதமர்:— ஸாம வேதிகள் பாகாக்னியில் அக்னி தன்வந்திரி, விச்வேதேவர், ப்ரஜாபதி, ஸ்விஷ்டக்ருத் என்று ஐந்துஹோமங்களைச் செய்ய வேண்டும்.

காத்யாயனர்:— ப்ரம்மா, ப்ரஜாபதி, க்ருஹ்யர், காச்யபர், அனுமதி என்று ஐந்து ஹோமங்களை ஸ்வாஹாகாரத்தினால் ஹோமம் செய்யவேண்டும்.

வைச்வதேவம் அவரவர் சாகையில் சொன்ன பிரகாரம் செய்யவேண்டும். ஹோமங்கள் அவரவர்கள் கிருஹஸ்யத்தில் ஸ்வல்பம், அல்லது நிறைய உள்ளது என்பது கிடையாது. சொன்னதைச் செய்யவேண்டியது. இதுதான் சாஸ்திரங்களுடைய தாத்பர்யம் என்பது வேதவ்யாஸருடைய ஸ்ம்ருதியாகும்.

ஹோமாக்னி ஜ்வலிக்காவிடில் வைச்வதேவ ஹோமம் செய்யக்கூடாது. செய்தால் யஜமானனுக்குக் கண் பார்வை குறையும் என்று மனு சொல்லுகிறார்.

வ்யாஸர்:— ஹவிஸ்ஸை நெய்யினால் அதிகாரம் செய்யவேண்டும். அல்லது தயிர், பால், இவைகளால்

அதிகாரம் செய்யலாம். இவைகள் இல்லாவிடில் ஜலத்தாலும் செய்யலாம். எண்ணெய் உரப்பு இவை களைக் கலந்து ஹவிஸ் ஹோமம் செய்யக்கூடாது. சுத்தமான ஹவிஸ்ஸைத்தான் ஹோமம் செய்ய வேண்டும். சிலர் வ்யஞ்ஜனம் (காய்கறி) ஹோமம் செய்வதானால் சூடான சாம்பலைத் தள்ளி அதில் வடபாகத்தில் அஹவிஸ்ஷயத்தை ஹோமம் செய்கிறார்கள்.

அன்னரூபமான ஹவிஸ் கிடைக்காவிடில், பழம் கறிகாய், ஜலம், பால், தயிர், நெய் இவைகளால் வைச்வதேவம் செய்யலாம். அன்னங்களைக் கையினா லும், திரவ பதார்த்தமான நெய், பால் இவைகளை ஸ்ருவத்தாலும் அக்னியில் ஹோமம் செய்யவேண்டும். ஜலத்தால் வைச்வதேவம் செய்வதானால் ஜலத்தில் தான் செய்யவேண்டும். அஞ்சலியினால் ஜலத்தை எடுத்து ஜலத்தில் வைச்வதேவம் செய்யவேண்டும்.

ஆபஸ்தம்பர்:– வைச்வதேவத்திற்கு அன்னத்தைப் பாகம் செய்கிறவர்கள் சுத்தர்களாயும், பூஜ்யர்களாயும் இருக்கவேண்டும். ஆகையால் அசுத்தர்கள் சமைத்தால் அந்த அன்னம் வைச்வதேவ ஹோமார்ஹமாகாது என்பது கருத்து. ஸ்திரீகள் செய்த பாகத்தினால் வைச்வதேவ ஹோமம் செய்யலாம்.

அக்னிக்கு மேல் புறத்தில், சகல பூதத்ருப்தியை உத்தேசித்து, பலிஹரணம் செய்யவேண்டும். அவரவர்கள் சாகை ப்ரகாரம் பலிஹரணம் செய்யவும். பிறர் சாகையை அனுசரித்துப் பலிஹரணம் செய்யக் கூடாது.

யாக்ஞவல்க்யர்:— தேவர்களுக்கு ஹோமம் செய்த மீதி அன்னத்தால் பூத பலிதானம் செய்யவேண்டும். பலிஹரணத்தில் எல்லோருக்கும் சம்பந்தமுண்டு. நாய், சண்டாளன், காக்கை, இவர்களுக்கும் பூமியில் பலிவைக்கவேண்டும். கடைசியில் அன்னப் பாத்திரத்தை அலம்பி, அன்னத்துடன் வடகிழக்கில் பூமியில் விட வேண்டும்.

வ்யாஸர்:— தினம் வைச்தேவம் செய்யவேண்டும். இது தேவ யக்ஞம். ஹோமம் செய்து மீதி அன்னத் தால் பலிஹரணம் செய்கிறோம். இது பூத யக்ஞமாகும். எல்லாப் பிராணிகளுக்கும் க்ஷேமத்தைக் கொடுக்கக் கூடியது. பித்ருக்களை உத்தேசித்து பலிஹரணம் செய்வது அல்லது பித்ருக்களை உத்தேசித்து ஒரு பிராம்மணனுக்கு போஜனம் செய்விப்பது பித்ரு யக்ஞம் என்று சொல்லப்படுகிறது. ஆகையால் இந்த வைச்வதேவத்தில் மூன்று யக்ஞமும் இருக்கிறது என்பது கருத்து, மனுஷ்ய யக்ஞமும், ப்ரம்ம யக்ஞமும் கூட பலிஹரண காலத்தில் இருப்பதால் பஞ்ச மஹா யக்ஞம் என்று கூடச் சொல்லாம்.

க்ருஹஸ்தன் வைச்வதேவ கர்மாவை பகலில் ஆரம்பிக்கவேண்டும். அது தனக்கும், அன்னத்துக்கும் ஸமஸ்காரார்த்தமாகக் கருதப்படுகிறது.

ஒரு பாகத்தில் யோக க்ஷேமங்கள் செய்துகொண்டு சொத்துக்களைப் பிரித்துக்கொள்ளாமல் குடும்பம் நடத்தும் சகோதரர்களுடைய விஷயத்தில் ச்ரார்தம், தேவபூஜை பிராம்மணபூஜை, வைச்வதேவம், இவைகள் ஒன்று செய்தால் போதுமானது. சொத்து விபாகம்

ஆகிவிட்டால் எல்லா கர்மாக்களும் தனித் தனியாகச் செய்யவேண்டும்.

ச்ராத்தம் செய்த பிறகு ப்ராம்மணர்களைப் பூஜித்து உத்வாஸனம் செய்த பிறகு வைச்வதேவம் செய்யவேண்டும். தனியாக பாகம் செய்த அன்னத்தில் வைச்வதேவம் செய்யவேண்டும்.

## 34. ஆதித்யம்.

வைச்வதேவம், பலிஹரணம் இவைகளைச் செய்து ஆசமனம் செய்து பிறகு கிருஹத்தினுடைய வாசலில் பால் கறக்கும் காலம் (அதாவது 1/4 நாழிகை) அதிதியை எதிர்பார்க்கவேண்டும். அதிதி வந்தவுடன் அவரை பூஜித்துப் போஜனம் செய்விக்கவேண்டும்.

வ்யாஸர்:— தினமும் பிறருடைய பசுவுக்கு புல்களைக் கொடுத்துவிட்டுச் சாப்பிடவேண்டும். இதற்கு கவாஹ்னிகம் என்று பெயர். இதைச் செய்யாமல் சாப்பிட்டால் ஸ்வர்கத்தை அடையமுடியாது.

குலகோத்திரங்கள் அறியப்படாதவனாயும், வழி நடந்ததால் களைப்படைந்தவனாயும். பசியோடு கூடியவனாயும், வைச்வ தேவத்தினுடைய முடிவில் வந்தவனாயும், இருக்கிறவனுக்கு அதிதி என்று பெயர். இந்த மாதிரி அதிதி கிடைத்தால் யஜமானன் ஸ்வர்க்கத்தை தன் ஆயுஸ்ஸினுடைய முடிவில் அடைவான் என்பதற்கு சுபஸூசகமாகும் என்பது கருத்து.

முன்பு தெரிந்தவன் அப்யாகதன் என்று சொல்லப் படுகிறது. முன்பு தெரியாதவன் அதிதியாவான்.

ஆபஸ்தும்பர்:— அதிதி, பாலர்கள், வயதானவர்கள், வ்யாதி உள்ளவர்கள், கர்பிணீ ஸ்திரீகள் இவர்களுக்கு முதலில் போஜனம் போட்டுவிட்டுப் பிறகுதான் போஜனம் செய்யவேண்டும்.

வைச்வ தேவத்திற்குப் பிறகு, சுமங்கலிகள், துக்கத்தை அடைந்தவன், கர்பிணீ, வயதானவன், பாலகர்கள் இவர்களை முன்பு சாப்பிடச் செய்ய வேண்டும். பிறகு தான் சாப்பிடவேண்டும்..

பராசரர்:— ஸந்யாஸீ, ப்ரம்மசாரி இவர்கள் சமைத்த அன்னத்திற்கு பங்குள்ளவர்கள், ஆகையால் அவர்களுக்கு அன்னம் போடாமல் சாப்பிட்டால் சாந்த்ராயணம் அனுஷ்டிக்கவேண்டும்.

ப்ரம்மச்சாரிகளுக்கும், ஸன்யாஸிகளுக்கும் மூன்று தடவை பிக்ஷை போடவேண்டும். மேலும் பிக்ஷை போடலாம். தனக்கு சக்தி இருந்தால் அவர்களும் போதும் என்று சொல்லாமல் இருந்தால் என்பது கருத்து.

முன்பு ஸன்யாஸி கையில் ஜலம் கொடுத்துப் பிறகு பிக்ஷை போடவேண்டும். பிக்ஷை போட்ட பிறகு மறுபடியும் கையில் ஜலம் கொடுக்கவேண்டும். இது பிக்ஷை அளிக்கும் முறையாகும். அந்த ஜலம் ஸமுத்ரத்திற்கு சமமாகும்.

ஹாரீதர்:— தினமும் பக்தியுடன் விஷ்ணு பூஜை செய்து விட்டு ஸன்யாஸிகளுக்குப் பிக்ஷை போட

வேண்டும். ப்ரம்மசாரிக்கும் பிக்ஷை போடவேண்டும். ஸந்நியாஸியை விஷ்ணுவாக பாவிக்கவேண்டும். எவருடைய கிருஹத்தில் ஸந்யாஸி போஜனம் செய்கிறாரோ, அந்த கிருஹத்தில் விஷ்ணு போஜனம் செய்கிறார் என்று சாஸ்திரம் கூறுகிறது. விஷ்ணு போஜனம் செய்கிற கிருஹத்தில் மூன்று ஜகத்தும் போஜனம் செய்கிறது என்று அறியவும்.

வ்யாஸர்:— எவன் யதிகளுக்குப் பாத்ரம் நிறைய பிக்ஷையைக் கொடுக்கிறானோ, அவன் சகல பாபங்களினின்றும் விடுபடுவான். ஏழ்மையை அடைய மாட்டான்.

ஸன்யாஸிக்கு தங்கத்தையும், ப்ரம்மசாரிக்கு அரிசியையும், கிருஹஸ்தனுக்கு அன்னத்தையும் கொடுப்பவன், கஷ்டப்படுவான்.

பராசரர்:— வைச்வ தேவத்திற்குப் பிறகு வந்த அதிதியை நல்வரவு கூறுவது முதலியவையால் பூஜிக்க வேண்டும். பிறகு ஆஸனம் கொடுப்பது, கால்களை அலம்புவது, ச்ரத்தையுடன் அன்னம் போடுவது, இனிய வார்த்தைகளாலும் பதில் சொல்வதாலும், அதிதியை சந்தோஷப்படுத்த வேண்டும். திரும்பி போகும் பொழுது பின்தொடர்ந்து கொஞ்சம்தூரம் செல்லவேண்டும். அதிதியை படிப்பு விஷயமாகவும், வம்சம், கோத்ரம் முதலியதும் கேட்கக்கூடாது. அதிதியை தேவராக பாவிக்கவேண்டும். அதிதியை சாஸ்திரம் சகல தேவதாஸ்வரூபியாகக் கூறுகிறது என்று அறியவும்.

மனு:— வசதி இல்லாதவன் வந்த அதிதியை அலக்ஷ்யம் செய்யக்கூடாது. ஆசனம் இல்லாவிடில் தர்ப்பத்ருணங்களை ஆசனமாகப் போடலாம். படுக்கை

இல்லையேயானால் பூமியில் படுக்க இடம் அளிக்கலாம். எண்ணெய் இல்லாதிருந்தால் ஜலம் கொடுக்கலாம். அன்னம் இல்லாவிடில் ஹிதமான பிரியமான வார்த்தைகள் பேசலாம். இதெல்லாம் ஏழை கிருஹத்தில் இல்லாமலிருக்க முடியாது. ஆகையால் வந்த அதிதியை அலக்ஷ்யம் செய்யாதே என்பது கருத்து.

எந்த கிருஹத்தில் அதிதி உபசாரமில்லாமல் இங்கு ஏன் வந்தோம் என்று வெறுப்பு அடைந்தவனாகச் செல்லுகிறானோ அந்த கிருஹத்தில் பித்ருக்கள் 15 வருஷகாலங்கள் யஜமானன் கொடுத்த திரவ்யத்தைப் புஜிப்பதில்லை. அதிதியை அலக்ஷ்யம் செய்தவன் ஆயிரம் கட்டு ஸமித்துக்களையும், நூறு குடம் ஆஜ்யத்தையும் அக்னியில் ஹோமம் செய்தாலும் அது ப்ரயோஜனமற்றதாகும் என்று அறியவும்.

வ்யாஸர்:— வழி நடந்ததால் சிரமத்துடன் முன் பின் தெரியாது வந்தவனான அதிதியைச் சிரத்தை யுடன் எவன் பூஜிக்கிறானோ அவன் யானை போன்ற காளை மாட்டுடன் கூடிய நூறு பசுக்களைத் தானம் செய்த புண்ணியத்தை அடைவான்.

## 35. சாப்பாட்டு நியமங்கள்.

மனு:— ப்ராம்மணனுக்கு மாலையிலும், காலையிலும் போஜனமானது வேதத்தால் விதிக்கப்பட்டிருக்கிறது. ஆகையால் மற்ற வேளையில் போஜனம் செய்யக் கூடாது. இது அக்னிஹோத்ரத்திற்குச் சமமாகும்.

அபராத்திரியிலும், அர்த்தராத்திரியிலும், சாப்பிடக் கூடாது. ராத்திரியிலும், பகலிலும் இரண்டு முறை புஜிக்கக்கூடாது.

ஆகையால் ஒரு தினத்திற்கு இரண்டு முறை மனிதர்களால் அன்னம் சாப்பிடப்படுகிறது என்று வேதம் கூறுகிறது.

வ்யாஸர்:— மௌனமாக இருந்துகொண்டு ஐந்து இடங்களில் ஜலத்தினால் நனைத்துக்கொண்டு ஈரத்துடன் கிழக்கு முகமாக சாப்பிடவேண்டும். இரண்டு கைகள், இரண்டு பாதங்கள் முகம் இவைகள் ஈரத் துடன் இருக்கவேண்டும்.

தேவலர்:— கைகால்களை அலம்பிக்கொண்டு இரண்டு தரம் ஆசமனம் செய்து மௌனத்துடன் கிழக்கு முகமாக ஆசனத்தில் உட்கார்ந்துகொண்டு சாப்பிடவும்.

ஆசமனம் செய்துபிறகுதான் சாப்பிடவேண்டும். சாப்பிட்டபிறகும் ஆசமனம் செய்யவேண்டும். ஆசமனம் செய்யாமல் சாப்பிட்டால் ப்ராயச்சித்தம் செய்து கொள்ள வேண்டும். தவறுதலாகச் சாப்பிட்டால் 1008 தடவை காயத்ரீ ஜபம் செய்யவேண்டும்.

ஆத்ரேயர்:— சுத்தமான தேசத்தில் நன்றாக கோமயத்தினால் இடைவெளியில்லாமல் நான்கு முனை உள்ளதாக போஜனப் பாத்திரத்திற்கு சமமாக மெழுகி மண்டலம் செய்து கொண்டும் அதன் மேல் பாத்திரம் வைத்துக் கொண்டும் புஜிக்கவேண்டும்.

*சங்கர்:—* ஆதித்தியர்கள், வசுக்கள், ருத்ரர்கள், ப்ரம்மா, பிதாமஹர், இந்த தேவதைகள் மண்டலத்தை ஆச்ரயித்து இருக்கிறார்கள். ஆகையால் மண்டலம் செய்து கொண்டு புஜிக்கவேண்டும்.

*அத்ரி:—* ப்ராம்மணன் பூமியில் பாதங்களை வைத்துக் கொண்டு ஆசனத்தில் உட்கார வேண்டும், அப்படி செய்துகொண்டு மௌனமாக எவன் போஜனம் செய்கிறானோ அவன் ஒவ்வொரு போஜனத்திலும் மூன்று நாள் உபவாஸம் இருந்த பலனை அடைகிறான்.

எந்த ப்ராம்மணன் ஆசனத்தில் பாதங்களை வைத்துக் கொண்டும், சூடான அன்னத்தை முகத்தினால் ஊதிக்கொண்டும் அன்னத்தைச் சாப்பிடுகிறானோ அவன் கோ மாமிசத்தைச் சாப்பிட்ட பாபத்தை அடைகிறான்.

*மனு:—* ஆயுஸ்ஸை கிழக்குமுகமாகச் சாப்பிடு கிறவன் அடைவான். யசஸ்ஸை விரும்புகிறவன் தெற்கு முகமாகவும், ஐஸ்வரியத்தை விரும்புகிறவன் மேற்கு முகமாகவும், சத்தியத்தை விரும்புகிறவன் வடக்கு முகமாகவும் சாப்பிட வேண்டும். ஜீவத் பித்ருகனா னவன் தெற்கு முகமாகச் சாப்பிடக்கூடாது என்று அறியவும். வடக்கு முகமாகச் சாப்பிடுவது பித்ருக் களுக்குப் பிரியமானது. காலில் செருப்புப் போட்டுக் கொண்டும் தலைப்பாகை வைத்துக் கொண்டும் சாப்பிடக்கூடாது. அந்த சாப்பாடு ஆசுரமாகும்.

*ஆபஸ்தம்பர்:—* ப்ராம்மணன் பவித்ரத்தை வலது கையில் தரித்துக்கொண்டு சாப்பிடவேண்டும். பவித்ரம்

தரித்துச் சாப்பிடுபவன் அன்ன தோஷங்களால் கெடுக்கப்படமாட்டான். பவித்ரம் தங்கத்தினால் செய்யப்பட்டது ச்லாக்கியமானது. தர்ப்பத்தினாலும் செய்து கொள்ளலாம்.

## 36. போஜன பாத்திரங்கள்.

யோக யாக்ஞயவல்க்யர்:— இலை, வெண்கலம், வெள்ளி, தங்கம் இவைகளாலாகிய பாத்திரங்களில் போஜனம் செய்யலாம். அவரவர்களுடைய சக்திக்கு உகந்தவாறு பாத்திரம் தயார் செய்து கொள்ளலாம்.

வெண்கலப் பாத்திரம் கிருஹஸ்தனுக்கு மாத்திரம் சொல்லப்பட்டிருக்கிறது. ஸன்னியாஸி, ப்ரம்மச்சாரீ, விதவை, இவர்கள் வெண்கலப் பாத்திரத்தில் சாப்பிடக் கூடாது. தாம்பூலம் எண்ணெய் தேயத்துக் கொள்வது இவைகளும் வர்ஜிக்கத் தகுந்தது.

பலா, மாவிலை, தென்னை, வாழை, பில்வம், இவைகளுடைய இலையிலும், வெண்கலப் பாத்திரத்தி லும் கிருஹஸ்தன் போஜனம் செய்தால் சாந்த்ராயண பலத்தை அடைவான். ஆகையால் இவைகள் ச்லாக்ய மானவைகள்.

கிருஸ்தன் புரசு இலையிலும், தாமரை இலையிலும், புஜிக்கக்கூடாது. புஜித்தால் சாந்த்ராய ணம் அனுஷ்டிக்கவேண்டும்.

ஸன்யாஸியும், ப்ரம்மச்சாரியும், தாமரை இலையி லும், புரசு இலையிலும் சாப்பிடலாம். சாந்த்ரா யணம் அனுஷ்டித்த பலம் கிடைக்கிறது. ஆகையால் ச்லாக்கியமானது.

இருபது பலத்திற்கு குறைந்த நிறை உள்ள சுத்தமான வெண்கலப் பாத்திரத்தில் ஒரு கிருஹஸ்தன் தினமும் சாப்பிடலாம். இருபது பலத்திற்கு மேல் நிறை உள்ள வெங்கலப் பாத்திரத்தில் இஷ்டப்படி புஜிக்கலாம்.

வ்யாஸர்:— கையிலும், வஸ்திரத்திலும், இரும்புப் பாத்திரத்திலும், தாமிரப் பாத்திரத்திலும், ஆல், அச்வத்தம் எருக்கு இவைகளுடைய இலைகளிலும் போஜனம் செய்தால் சாந்த்ராயணம் அனுஷ்டிக்க வேண்டும். ப்ரம்மச்சாரி தாமிரப் பாத்திரத்தில் சாப்பிடலாம்.

## 37. போஜனம் செய்யும் முறை.

மனு:— அன்னத்தை எப்பொழுதும் பூஜிக்க வேண்டும். அன்னத்தை நிந்திக்கக்கூடாது. பூஜிக்கப் பட்ட அன்னமானது சாப்பிடுகிறவனுக்கு பலத்தையும் வீரியத்தையும் கொடுக்கிறது.

ஸுமந்து:— அன்னத்தைக் கரண்டியினால் வைக்கவேண்டும். கையினால் போடக்கூடாது. போட்ட அன்னத்தை பூஜித்து ஆபோசனம் வாங்கிக் கொள்ளவும்.

வ்யாஸர்:— முதலில் அன்னத்தை நமஸ்கரித்து அஞ்சலி பந்தனம் செய்துகொண்டு "இந்த மாதிரி அன்னம் எப்பொழுதும் கிடைக்கட்டும்" என்று பக்தி யுடன் பிராத்தனை செய்து நமஸ்கரிக்கவேண்டும்.

கோபிலர்:— வ்யாஹ்ருதிகளாலும், காயத்ரியினா லும் அன்னத்தை அபிமந்தரணம் செய்து "ருதந்த்வா

(*) அன்னம் ந நிந்த்யாத் தத் வ்ரதம்
(தை.2.0)

ஸத்யேந" என்ற மந்திரத்தினால் ஸாயங்காலத்திலும், "ஸத்யம் த்வர்த்தேன" என்று ப்ராத: காலத்திலும் அன்னத்தைப் பரிஷேசனம் செய்யவேண்டும்.

கையினால் ஜலத்தை எடுத்து அன்னத்தைப் ப்ரதக்ஷிணமாகப் பரிஷேசனம் செய்த பாக்கி ஜலத்தை ஆபோசனம் வாங்கக்கூடாது. தெரியாமல் ஆபோசனம் செய்தால் சாந்த்ராயணம் செய்யவேண்டும். ஆகையால் பரிஷேசன ஜலத்தைக் காட்டிலும் வேறு ஜலத்தால் ஆபோசனம் செய்யவேண்டும்.

ஆபோசனம் செய்யாமல் அன்னத்தைத் தொட்டு பரத்தினால் அந்த அன்னம் மாமிச சமமாகும், அதைச் சாப்பிட்டால் சாந்த்ராயணம் செய்து கொள்ளவேண்டும்.

சௌனகர்:— ஸ்வாஹாகாரத்தை முடிவிலும், ப்ரணவத்தை ஆரம்பத்திலும் சொல்லி, ஐந்து வாயுக்களுடைய நாமாக்களை ஜபித்து அன்னத்தை விழுங்கவேண்டும். பல்லால் கடிக்கக்கூடாது. நாக்கினால் அன்னத்தை விழுங்கத் தள்ளிக் கொள்ளலாம்.

நடுவிரல், பவித்ரவிரல், பெருவிரல் இவைகளால் ஸ்வல்ப்பமான அன்னத்தை எடுத்து ப்ராணாய ஸ்வாஹா, அபானாய, வ்யானாய, உதானாய, ஸமானாய என்று ஸ்வாஹாரத்துடன் முகத்தில் ஹோமம் செய்ய வேண்டும்.

பராசரர்:— பரிஷேசனம் செய்தபிறகு உத்தரணி யினால் வலது கையை மட்டும் அலம்பிக்கொண்டு இடது கையினால் போஜனப் பாத்திரத்தைப் பிடித்துக்கொண்டு

மந்திரத்துடன் ஆபோசனம் செய்து ப்ராணன் முதலிய தேவதைகளை உத்தேசித்து ஐந்து ப்ராணாஹூதிகளைச் செய்யவேண்டும். ஆஹூதி செய்த அன்னத்தைப் பல்லினால் கடிக்காமல் விழுங்கவேண்டும். அந்த சமயத்தில் மௌனம் ரொம்ப முக்கியமானது.

இடது கையினால் போஜனப் பாத்திரத்தை தொட்டுக்கொண்டு ப்ராணாஹூதி செய்யவேண்டும். ப்ராணாஹூதிகள் ஐந்து என்று சொல்லப்படுகிறது. ஆத்மாஹூதி ஒன்று, ஆக ஆறு ஆஹூதிகள், க்ரமமாக, ஸூரியன், ஸோமன், அக்னி, வாயு, பர்ஜன்யன், என்று தேவதைகள் ஐந்து ப்ராணாஹூதிகளுக்கும் ஆறாவதான ஆஹூதிக்கு பரப்ரம்மம் தேவதை என்றும் அறியவும். இந்த விஷயமானது ஜீர்ணமான தாள பத்திரத்தில் அகப்பட்டது.

அத்ரி:— சப்தத்துடன் ஜலத்தையும், பாயஸத்தையும், ஆபோசனத்தையும் சாப்பிட்டால் சுராபானம் செய்ததற்குச் சமமாகும்.

வ்யாஸர்:— மௌனம் என்பது பேசாமல் இருப்பது, இந்த விஷயத்தில் சமஸ்கிருதத்திலும் வேறு பாஷையில் கூட பேசக்கூடாது. விஷ்ணுவை த்யானம் கீர்த்தனம் இரண்டும் செய்யலாம். மற்றதேவதைகளைச் சொல்லக்கூடாது.

அசுத்தனாக இருந்துகொண்டு தேவதா நாமங்களை உச்சரிக்கக்கூடாது என்ற ஆபஸ்தம்பருடைய வசனமானது உச்சிஷ்ட சமயத்தில் இதர தேவதைகளை ஸ்மரிக்கக்கூடாது என்பதாகும் என்று அறியவும்.

ஒவ்வொரு கபளம் அன்னம் சாப்பிடும்பொழுதும் கோவிந்த கோவிந்த என்று சொல்லவேண்டும். உச்சிஷ்ட சமயத்தில் சொல்லலாமா என்று சம்சயம் வேண்டாம். பகவான் ஹரி பரமவித்ரமானவார். கிருஹஸ்தன் போஜன காலத்தில் மௌனம் இருக்க வேண்டியது இல்லை. ப்ராணாஹுதி பர்யந்தம் இருந்தால் போதுமானது. ஆனால் தர்மமாக போஜனத்திற்கு இடையூறு இல்லாமல் பேசவேண்டும் என்பது கருத்து.

சாண்டில்யர்:– கிருஹஸ்தாச்ரமத்தில் வசிப்பவருக்கு போஜனத்தில் மௌனம் அவசியமில்லை. சேர்ந்து போஜனம் செய்கிறவர்களுக்கு வாக்கினால் உபசாரம் செய்யவேண்டும்.

மார்கண்டேயர்:– ஏகாக்ர சித்தத்துடன் முதலில் மதுர ரஸத்தைச் சாப்பிடவேண்டும். உப்பு, புளிப்பு பதார்த்தங்களை நடுவிலும், கசப்பு, துவர்ப்பு பதார்த்தங்களைப் பிறகும் புஜிக்கவேண்டும். முதலில் த்ரவ பதார்த்தங்களையும், நடுவில் கடினமான வஸ்துவையும், முடிவில் த்ரவமான பதார்த்தங்களையும் புஜிக்கவேண்டும். இப்படிச் சாப்பிடுகிறவன் பலம், நல்ல ஆரோக்யம், இவைகளை அடைவான்.

ஆபஸ்தம்பர்:– ஸன்யாஸிக்கு எட்டு கபளங்களும், வானப்ரஸ்தனுக்கு பதினாறு கபளங்களும், கிருஹஸ்தனுக்கு முப்பத்திரண்டு கபளங்களும், கணக்கில்லாமல் ப்ரம்மசாரிகளும் புஜிக்கவேண்டும்.

போதாயனர்:– "ப்ரம்மணிமே ஆத்மா அம்ருதத்வாய" என்ற மந்திரம் சொல்லி சாப்பிட்ட பிறகு உத்ரா போஜனம்

செய்யவேண்டும். இதற்கு தாத்பர்யம் ஜீவாத்மாவை பரமாத்மாவுடன் சேர்ப்பதாகும். இதைச் சிரத்தை யாகச் செய்கிற ஆத்மயாஜி சகல கர்மாக்களைச் செய்கிறவனைக் காட்டிலும் உயர்ந்தவன் என்று அறியவும்.

பராசரர்:— எவன் வஸ்திரத்தால் முண்டாசு கட்டிக்கொண்டும், தெற்கு திக்கை நோக்கின முகத் துடனும், இடது பாகத்தில் கையை வைத்துக் கொண்டும், நின்றுகொண்டும் சாப்பிடுகிறானோ அவனுடைய போஜனத்தை அசுரர்கள் சாப்பிடுகிறார்கள்.

வ்யாஸர்:— எவன் கையில் அன்னத்தை வைத்துக் கொண்டும், பூத்கார சப்தத்துடனும், பிரிந்த விரல்களு டனும் போஜனம் செய்கிறானோ அந்த அன்னம் பசு மாமிசத்திற்கு சமானமாகும் என்று அறியவும்.

யானை, குதிரை, தேர், வாஹனம், ஒட்டகம், இவைகளில் இருந்து கொண்டு அன்னம் சாப்பிடக் கூடாது. மயானத்தில் நடுவிலும், தேவாலயத்திலும், படுக்கையில் இருந்துகொண்டும் அன்னம் சாப்பிடக் கூடாது. கையில் வைத்திருப்பதையும், ஆசனத்தில் இருப்பதையும் சாப்பிடக்கூடாது. ஈர வஸ்திரத் துடனும், ஈரமான சிரஸ்ஸுடையவனாகவும், உபவீதி மில்லாமலும் சாப்பிடக்கூடாது.

காலை நீட்டிக்கொண்டும், துடையின் மேல் கையை வைத்துக்கொண்டும், காலின் மேல் கையை வைத்துக்கொண்டும், கட்டிலில் உட்கார்ந்துகொண்டும் அன்னம் புஜிக்கக்கூடாது.

தலையை வஸ்திரத்தினால் சுற்றிக்கொண்டும், மடியில் போஜனப் பாத்திரத்தை வைத்துக்கொண்டும், ஒரு வஸ்திரத்தை தரித்தவனாயும், பாதுகை, செருப்பு, இவைகளை தரித்தவனாயும், தோலின்மேல் உட்கார்ந்து கொண்டும், தோலினால் சுற்றப்பட்ட பக்கங்களை உடையவனாகவும் இருந்து போஜனம் செய்யக்கூடாது.

ஒரு கபளம் அன்னத்தை எடுத்துப் பாதி சாப்பிட்டு பிறகு பாதியைச் சாப்பிடக்கூடாது. குடித்த ஜலத்தின் மீதியைக் குடிக்கக்கூடாது. கறிகாய், கிழங்கு, பழங்கள், கரும்பு இவைகளைப் பல்லினால் துண்டாக்கிச் சாப்பிடக்கூடாது.

எல்லோரும் சாப்பிடும்பொழுது சீக்கிரம் சாப்பிடக் கூடாது, அனுசரித்துச் சாப்பிடவேண்டும். அன்னத்தை வீணாக இறைக்கக்கூடாது. எச்சிலுடையவனாய் எங்கும் செல்லக்கூடாது. பூமியில் தள்ளப்பட்ட அன்னத்தை எடுத்துச் சாப்பிட்டால் சாந்த்ராயணம் அனுஷ்டிக்க வேண்டும்.

மனு: பத்தினியுடன் சேர்ந்து சாப்பிடக்கூடாது. பத்தினி சாப்பிடும்பொழுது பார்க்கக்கூடாது. தும்பும் போதும், கொட்டாவி விடும்பொழுதும், சோம்பல் முறிக்கும் பொழுதும், இஷ்டப்படி உட்கார்ந்துகொண்டிருக்கும் பொழுதும் பத்தினியைப் பார்க்கக்கூடாது என்று அறியவும்.

அத்ரி:— ப்ராணாஹுதியில் நெய் சேர்க்காவிடில் பிறகு நெய்யைப் புஜிக்கக்கூடாது. ப்ராணாஹுதியில் நெய் சேர்த்திருந்தால் போஜன மத்யத்தில் நெய் சேர்ப்பது துஷ்டமாகாது.

எமன்:— எவன் ஒருவன், பந்தியில் அநேகர்கள் சாப்பிடும்பொழுது சிலபேர்களுக்கு மட்டும், ஸ்நேகத்தினாலோ அல்லது பயத்தினாலோ, பணத்தின் காரணமாகவோ, வித்தியாசமாகப் பதார்த்தங்களைப் போடுகிறானோ, அவனுக்கு வேதங்களில் கூறப்பட்டதும், மஹரிஷிகளால் கூறப்பட்டதுமான ப்ரம்மஹத்தி தோஷம் ஏற்படும் என்று பெரியோர்கள் கூறுகிறார்கள்.

கோபிலர்:— ஒரு பந்தியில் உட்கார்ந்துகொண்டு புஜிக்கும் ப்ராமணர்களுள் ஒருவன் போஜனப் பாத்திரத்தை விட்டாலும் பிறகு மற்றவர்களும் அன்னத்தைப் புஜிக்கக்கூடாது.

பராசரர்:— ஒரு பந்தியில் உட்கார்ந்திருக்கும் துஷ்டர்களுடைய பாபமானது அவனுடன் சேர்ந்து சாப்பிடும் மற்றவர்களுக்கும் வரும். பந்தியைப் பிரித்தால் தோஷம் ஏற்படாது.

அக்னியினாலும், சாம்பலினாலும், தூணினாலும், ஜலத்தினாலும், வாயினாலும், வழியினாலும், பந்தியைப் பேதிக்கலாம் (பிரிக்கலாம்) என்று பெரியோர்கள் கூறுகிறார்கள்.

படுக்கையிலிருந்து புஜிக்கக்கூடாது. கையிலுள்ளதையும், ஆசனத்திலுள்ளதையும், புஜிக்கக்கூடாது. மூக்கைச் சிந்தக்கூடாது. சப்தம் போடுவது, கோபம், வேறு இடத்தில் சிந்தனை செய்வது, குழந்தைகளை விரட்டுவது, நாய், சண்டாளன், முதலியவர்களைப் பார்ப்பது இவைகளையும் சாப்பிடும் பொழுது செய்யக் கூடாது. அசுத்தர்களுடைய நடுவிலும், சாப்பிடாதவர்கள்

பார்த்துக்கொண்டிருக்கும்பொழுதும், அகாலத்திலும், விஷம் கலந்ததையும் சாப்பிடக்கூடாது. வைச்வ தேவமில்லாமல் சாப்பிடக்கூடாது.

போஜன பாத்திரத்தில் பிறர் எச்சில் சம்பந்தப் பட்டால் அதை அறிந்து அந்தப் பாத்திரத்தை வெளியில் எறிந்துவிட்டு, கோமயத்தால் பூமியை சுத்தம் செய்து, வேறு போஜனப் பாத்திரம் போட்டுக்கொண்டு அதில் அன்னம் முதலியவைகளை பரிமாறி பரிஷேசனம் செய்து சாப்பிட வேண்டும். இவ்விதம் புஜித்தால் தோஷமடையமாட்டான்.

ஒரே பந்தியில் புஜிக்கும் ப்ராம்மணன் புஜிக்கும் மற்ற ப்ராம்மணனை ஸ்பரிசித்தால், அந்த அன்னத்தைத் தியாகம் செய்யவேண்டும். தியாகம் செய்யாமல் சாப்பிட்டால் 108 தடவை காயத்ரீயை ஜபிக்கவேண்டும்.

சாப்பிடும் சமயத்தில் தாகம் ஏற்பட்டால் இடது கையினால் பாத்திரத்தில் ஜலம் எடுத்துக்குடிக்கலாம் ஆனால் வலது கையினால் அந்த சமயத்தில் போஜனப் பாத்திரத்தை ஸ்பரிசித்துக் கொள்ளவேண்டும். அவ்விதம் தீர்த்தம் சாப்பிட்டால், தீர்த்தம் அமிர்தத் திற்குச் சமானமாகும். போஜனப் பாத்திரத்தைத் தொடாமல் சாப்பிட்டால் அந்த ஜலம் ரத்தத்திற்குச் சமமாகும் என்று அறியவும்.

எமன்:— பக்குவமான அன்னம், சமைத்த காய்கறிகள் இவைகளைக் கரண்டியினால் போடவேண்டும். எண்ணெய்யில் பக்குவமானது, பக்குவமில்லாத பழம் முதலியப் பதார்த்தங்களைக் கையினால் போடவும்.

வ்யாஸர்:— போஜனம், பூஜை, மங்கள காரியம், ஜபம், ஹோமம், ஜனக்கூட்டம், இந்த இடங்களில் மூக்கைச் சிந்துவது, காரிஉமிழ்வது செய்யக்கூடாது.

புலஸ்த்யர்:— அறிவுள்ளவன் போஜனத்தை பாக்கியில்லாமல் சாப்பிடக்கூடாது. சாப்பிட்ட பதார்த்தங்களை கொஞ்சம் வைத்துச் சாப்பிடவேண்டும். ஆனால் தயிர், மாவு, நெய், பழங்கள், பால் இவை களை பாக்கி வைக்காமல் சாப்பிடவேண்டும்.

பராசரர்:— போஜ்யமான அன்னமானது, புழு, ஈ, கேசம், இவைகளுடன் காணப்பட்டால் கேசம் முதலிய வைகளை எடுத்துவிட்டு, தீர்த்தத்தால் ப்ரோக்ஷணம் செய்து, பஸ்மாவைத் தெளித்து பிறகு சாப்பிடவும்.

## 38. பூஜிக்கத் தகுந்தது பூஜிக்கத் தகாதது என்றவிவேகம்.

மனு:— வேதாத்யயனமின்மையாலும், ஆசாரத்தை விட்டதாலும், சோம்பேறித்தனத்தாலும், அன்னதோஷத் தாலும் ப்ராம்மணர்களை ம்ருத்யுவானவர் கொல்ல விரும்புகிறார்.

ஜாதியினால் துஷ்டம் சில,. காரியத்தால் துஷ்டம் சில, காலத்தினால் துஷ்டம்சில, சேர்க்கையினால் துஷ்டம் சில, ஸஹ்ருல்லேகம்சில, சுபாவத்தினால் சிலது துஷ்டம். இந்த பதார்த்தங்கள் சாப்பிடத் தகாதவைகள் என்று அறியவும்.

வெங்காயம், சிகப்பு முருங்கை, உள்ளிப்பூண்டு பலாண்டு, நாய்க்குடை, கத்திரிக்காய், தாமரைத்தண்டு, சுரைக்காய்

இவைகள் ஜாதி துஷ்டப் பதார்த்தங்கள், புஜிக்கத் தகாதவைகள்.

பதிதர்கள் முதலியவர்களால் பார்க்கப்பட்டது காரியத்தால் துஷ்டமானது.

நெய், எண்ணெய், முதலியதினால் சேர்க்கப்படாத பதார்த்தங்கள் வெகு காலமிருந்தால் காலதுஷ்டமாகும். பழைய அன்னம் முதலியது காலதுஷ்டமென சொல்லலாம். அதை புஜிக்கக்கூடாது. தயிர், பக்ஷணங்கள், தேன் இவைகள் காலதுஷ்டமாகாதவை.

கள்ளு, வெங்காயம் இவைகள் சேர்ந்த பதார்த்துங்களும், சீமப்பால் கலந்த பதார்த்தங்களும் (கன்று போட்ட மாட்டினுடைய, பத்துதினகளுக்குள் துஷ்டமான சீமப்பால் எனப்படும்) சேர்க்கையினால் துஷ்டமான பதார்த்தங்கள், இவைகளும் புஜிக்கக் கூடாதவை களாகும்.

எந்த அன்னத்தை சாப்பிடலாம், கூடாது என்பதில் சம்சயம் ஏற்படுகிறதோ, அந்த அன்னம் ஸஹ்ருல்லேகம் எனப்படும். அதை புஜிக்கக்கூடாது. சீமப்பால் சுபாவதுஷ்டம் எனப்படும். சுபாவத்தில் ரஸம் மாறினால் ரஸதுஷ்டமெனப்படும். இவைகளை புஜிக்க கூடாது.

பராசரர்:— சீமப்பால், வெளுப்பு வெங்காயம், வெளுப்பு கத்தரிக்காய், க்ருஞ்சனம், பலாண்டு, விருக்ஷத்தின் பிசின், கோவில் சொத்து, நாய்க்குடை, ஒட்டகத்தின் பால் ஆட்டின் பால் இவைகளைத் தெரியாமல் சாப்பிட்டால் கூட மூன்று நாள்

உபவாஸமிருந்து நான்காவது நாள் பஞ்சகவ்யம் சாப்பிடவேண்டும்.

ச்வேத சப்தம் வெங்காயத்துடனும், கத்திரிக்கா யுடனும் சம்பந்தப்படுகிறது. ஆகையால் வெளுப்பு கத்திரி, வெளுப்பு வெங்காயம் சாப்பிட்டால் மூன்று நாள் உபவாஸம், நான்காவது நாள் பஞ்சகவ்யம் சாப்பிட வேண்டும். கருப்பு கத்திரி, சிகப்பு வெங்காயம் சாப்பிட்டால் உபவாஸ மாத்திரம் என்று அறியவும்.

தேவலர்:— மரப்பிசினானாலும் பெருங்காயம், குங்குலியம் இவைகளைச் சேர்த்துக்கொள்ளலாம். வர்ஜிக்கவேண்டாம். கோவை கத்தரி, சிறு குமுட்டி, இலப்பைப்பூ, தாமரைத்தண்டு இவைகளை புஜிக்கிறவன் கடைசீ காலத்தில் ஜகன்னாதனான கோவிந்தனை ஸ்மரிக்கமாட்டான்.

ஸுமந்து :— பூண்டு லசுனம், பலாண்டு, க்ருஞ்சனம், இந்த மூன்றும் வெங்காயத்தின் பேதங்கள். இதைச் சாப்பிட்டவனுக்கு பின்பு தாபமேற்பட்டால் 1008 காயத்ரீ ஜபித்து தலையில் ஜலத்தைக் கொட்டுவதும் ப்ராயச்சித்தமாகும். இது முதல் தரம் சாப்பிடுவதற்கு என்றும் பிறகு சாப்பிட்டால் பிராயச்சித்தம் அதிகமாகும் என்றும் அறியவும்.

எந்த பக்ஷ்யங்களும், அன்னம் முதலிய போஜ்யமும், நெய், எண்ணெய், முதலியவைகளால் சம்பந்தப்பட்டிருந்தால் பழையதாக இருந்தாலும் புஜிக்கலாம். அதே மாதிரி ஹவிஸ்ஸினுடைய பாக்கியையும் புஜிக்கலாம்.

யவம், கோதூமம் இவைகளால் செய்யப்பட்ட பதார்த்தங்கள், நெய் முதலிய ஸ்னேஹ சம்பந்த மில்லாமல் இருந்தாலும் புஜிக்கலாம். பாலினால் செய்யப்பட்ட பதார்த்தங்களையும் புஜிக்கலாம். பர்யுஷித தோஷம் கிடையாது என்று அறியவும்.

மனு:— காலத்தினால் புளித்துப்போன அன்னங்களை ப்ராமணன் ஒரு சமையத்திலும் புஜிக்கக் கூடாது. அதை ஜலத்தினால் அலம்பி சுத்தம் செய்த பிறகு சாப்பிடலாம். இது வேறு அன்னம் கிடைக்கா விடில் ஆபத்தர்மமாக சொல்லப்பட்டிருக்கிறது. தயிருக்குப் புளித்த தோஷம் கிடையாது. புஜிக்கலாம்.

பசுமாடு, ஆடு, எருமைமாடு, இவைகளுடைய பால் சாப்பிடலாம். இதை தவிர மற்ற மிருகங்களுடைய பாலைப் பருகினால் உபவாஸம் இருக்க வேண்டும்.

ராத்திரியில் நெல்லிகனியை புஜிப்பவனுக்கு வீரியம், யசஸ், புத்தி இவைகள் குறையும். ஆகையால் ராத்திரியில் நெல்லிக்கனியை வர்ஜிக்கவேண்டும்.

பகலில் வறுத்த தானியங்களையும், இரவில் தயிர், நெல், வறுத்த மாவு, திலத்தினால் செய்யப் பட்ட பக்ஷணங்கள் இவைகளையும் புஜிக்கக்கூடாது.

புளிப்பு, இஞ்சி, தயிர், கஞ்சி, எள்ளு, சாதம் இவைகளை இரவில் புஜிக்ககூடாது. புஜித்தால் ரஜஸ்வலாஸ்திரீ ஸங்கமத்தினால் ஏற்பட்ட ரூபம், வாக்கு, ஸ்ரீ, இவைகளால் விடப்படுவான்.

வெண்கலப் பாத்திரத்திலுள்ள இளநீர், கருப்பஞ் சாரு இவைகளைப் பருகக்கூடாது. தாமிரப் பாத்திரத்திலுள்ள தயிர், பால், இவைகளைப் புஜிக்கக் கூடாது. உப்பு கலந்த பாலையும், நெய்யையும் வர்ஜிக்கவேண்டும். இவைகள் கள்ளுக்குச் சமமான வைகள் என்று அறியவும். கண்ணுக்குத் தெரியும்படி உப்பைப் போடக்கூடாது, வேறு பதார்த்தங்களில் கலந்து போடலாம்.

வ்யாஸர்:– அகத்திக்கீரை, துளஸீ, நெல்லிக்கனி, சுண்டைக்காய் இவைகள் எவன் வயிற்றில் இருக்கின்றனவோ அவனுக்கு ஹரி சமீபத்தில் இருக்கிறார்.

எவன் பக்ஷணம், போஜ்யம், லேஹ்யம் இவை களை நமோ நாராயணா என்ற மந்திரத்தினால் தொட்டு அபிமந்த்ரணம் செய்து புஜிக்கிறானோ அவன் நல்ல லோகத்தை அடைவான்.

ஸன்யாஸியினுடைய அன்னம், யதி பாத்திரத்தில் இருக்கும் அன்னம், யதியினால் அனுப்பட்ட அன்னம், இந்த மூன்று அன்னத்தையும் புஜித்தால் சாந்த்ரா யணம் அனுஷ்டிக்கவேண்டும்.

கர்வமுள்ளவன், முட்டாள், நடத்தைகெட்டவன், கெட்ட புத்தியுள்ளவன், சிரத்தை இல்லாதவன், இவர் களுடைய அன்னத்தைச் சாப்பிட்டவனுக்கு ப்ரம்மஹத்தி தோஷம் ஏற்படும். ஆகையால் இவர்களுடைய அன்னத்தைப் புஜிக்கக்கூடாது.

உபநயனமில்லாதவன், குருடன், பதிதன், வேதாத்யயனமில்லாதவன், கன்னிகையை விற்பவன், தரித்திரன், மூடன், ஸன்யாஸியை நிந்திப்பவன், அனர்ஹனுக்கு வைதிக கர்மாக்களைச் செய்துவைப்பவன், மரியாதையில்லாதவன், க்ருஷிசெய்கிறவன், தேவதைகளுக்கு த்ரோஹம் செய்பவன், சாஸ்த்ரங்களை தூஷிப்பவன், தேவ சம்பந்தமான இரும்பினால் உடம்பை சூடிக் கொண்டவன், ஸோமலதையை விற்பவன், இவர்கள் பதிதர்கள். இவர்களுடைய அன்னத்தைப் புஜிக்கக் கூடாது; வர்ஜிக்கவேண்டும்.

பரத்வாஜர்:— ஆசாரமில்லாதவன், நிஷித்தகர்மாவை செய்கிறவன், இவர்களுடைய அன்னம் சாப்பிட்டால் ஒரு நாள் உபவாஸம் இருக்கவேண்டும்.

பராசரர்:— நல்ல ஆசாரமுள்ளவன், வேதாந்தம் வாசித்தவன், இவர்களுடைய அன்னம் சாப்பிட்டால் ஒருநாள் செய்த பாபங்கள் விலகும்.

சாதாதபர்:— எவன் ஔபாஸனாக்னியில் ஹோமம் செய்யாமல் தன்னை க்ருஹஸ்தன் என்று எண்ணுகிறானோ அவனுடைய அன்னத்தை புஜிக்கக்கூடாது. அவன் வீண் சமையல் செய்து சாப்பிடுகிறவன், ஆகையால் பாபமுள்ளவன் என்று கருத்து.

விஷ்ணு:— சிரார்த்த போஜனத்திற்கு ஆறு ப்ராணாயாமங்கள் பிராயச்சித்தமாகும் என்று அறியவும்.

சிராத்தத்தில் போஜனம் செய்தவன் காயத்ரீ ஜபித்து பத்து தடவை தீர்த்தம் சாப்பிட்டுப் பிறகு ஸாயங்கால ஸந்தியா வந்தனம் செய்யவேண்டும்.

வ்யாஸர்:— சூர்ய கிரஹணத்தில் அந்த யாமத்திற்கு முன்பு நான்கு யாமங்களில் புஜிக்கக் கூடாது. சந்திர கிரஹணத்தில் அந்த யாமத்திற்கு முன்பு மூன்று யாமங்களில் புஜிக்கக்கூடாது. பாலர்கள், விருத்தர்கள், வியாதியுள்ளவர்கள் இவர்களைத் தவிர மற்றவர்களுக்குச் சொல்லப்பட்ட நியமம் இது என்று அறியவும்.

சந்திரனின் கிரஸ்தோதயத்தில் முன் பகலில் போஜனம் செய்யக்கூடாது. ஸூரியனின் க்ரஸ்தோதயத்தில் முன் ராத்திரியில் போஜனம் செய்யக்கூடாது.

ப்ராம்மணன் அக்ஞானத்தில், சாப்பிடக்கூடாத இடத்தில் போஜனம் செய்தால் ஒரு வருஷத்திற்கு ஒரு க்ருச்ரத்தை அவசியம் அனுஷ்டிக்கவேண்டும். தெரிந்து துர்போஜனம் செய்தால் அதிகப்படியான பிராயசித்தம் செய்து கொள்ளவேண்டும்.

### 39. போஜனத்திற்குப் பிறகு செய்யவேண்டிய காரியங்கள்.

அமிருதாபிதானமஸி என்று ஜலத்தைப் பாதி சாப்பிட்டு பாதி ஜலத்தை பலியின் சமீபத்தில் 'ரௌரவே' என்ற மந்திரத்தால் பூமியில் விடவேண்டும்.

ரௌரவம் என்ற நகரத்தில் வெகு காலமாக வசிக்கும் பாபிகளுக்கு என்னால் விடப்பட்ட இந்த ஜலமானது குறைவு இல்லாததாக அடையட்டும் என்பது மந்திரத்தினுடைய பொருள்.

உத்ராபோசனத்திற்குப் பிறகு நகர்ந்து கொஞ்ச தூரம் சென்று 16 தடவை வாய்க் கொப்பளிக்க வேண்டும். எச்சில் ஜலத்தை உட்கார்ந்துகொண்டு தன் இடது பாக பூமியில் துப்பவேண்டும். ப்ராம் மணனுடைய வலது பாகத்தில் தேவர்கள் இருக்கிறார்கள். ஆகையால் வலது பாகத்தில் பூமியில் வாய் கொப்பளித்து ஜலத்தைத் துப்பக்கூடாது.

கௌதமர்:— ஆசமனம் செய்த பிறகு ஆசமனம் செய்யவேண்டும். "ஆயங்கௌ:" அல்லது "த்ருபதா" என்ற ஸகல பாபங்களையும் விலக்க வல்லமையுள்ள ருக்கை மூன்று தரம் ஜபித்து, பிறகு கைகளை தேய்த்து பெருவிரல்களால் ஜலத்தைக் கண்களில் சேர்க்கவேண்டும்.

சர்யாதி என்ற அரசனையும், சுகன்யை என்ற அவர் கன்னிகையையும், ச்யவனர் என்ற அவர் மாப்பிள்ளையையும், இந்திரன், அச்வினி தேவதைகளை யும், எவன் போஜனம் செய்தவுடன் ஸ்மரிக்கிறானோ அவனுடைய கண்ணுக்கு ரோகம் ஏற்படாது என்று அறியவும்.

வ்யாஸர்:— புஜித்த பிறகு சுகமாக உட்கார்ந்து கொண்டு புஜித்த அன்னத்தை ஜரிக்கச் செய்ய வேண்டும். இதிகாசம், புராணம் இவைகளுடன் வேதார்த்தங்களை விசாரிக்கவேண்டும்.

தக்ஷன்:— பகலை எட்டு பாகமாகச் செய்தால் ஒரு பாகத்திற்கு 1 1/2 மணி நேரமாகும். அதில் ஆறாவது ஏழாவது பாகமானவை மத்யானம் 1 1/2 மணிக்குப்

பிறகு 4 1/2 மணிவரையில் இருக்கும் சமயமாகும். அதில் வேதம், புராணம், சாஸ்திரம் இவைகளை அப்யஸிக்கவேண்டும். அதற்குப் பிறகு குடும்பயோக க்ஷேமங்களை கவனிக்கவேண்டும். அது எட்டாவது பாக காலம் என்று அறியவும். பிறகு ஸாயம் ஸந்தியா வந்தனத்தை உத்தேசித்து தீர்த்தகரைக்குச் செல்ல வேண்டும்.

சங்கர்:— புராணார்த்தங்களையும், வேதார்த்தங் களையும், விசாரித்து பக்தியுடன் விஷ்ணுவை ஸகுண மாகவும், நிர்குணமாகவும் தியானம் எப்பொழுதும் செய்யவேண்டும்.

பகலில் நித்திரை செய்யக்கூடாது. பகலில் ஸ்திரீ யுடன் சேரக்கூடாது. நித்திரையினால் ஆயுஸ் குறை யும். ஸ்திரீ ஸங்கமம் புண்ணியத்தை நாசம் செய்யும். வீணான வார்த்தைகளையும், பிறரை நிந்தை செய்வதை யும் எப்பொழுதும் வர்ஜிக்கவேண்டும்.

நல்ல பாக்கு, நல்ல வெற்றிலை, நல்ல சுண்ணாம்பு, இவைகளை ப்ராமணர்களுக்குக் கொடுத்துத் தானும், தாம்பூலத்தை பக்ஷிக்கவும். இந்த காரியம் சாப்பிட்ட பிறகு செய்யவேண்டும்.

எப்பொழுதும் தாம்பூல பக்ஷணம் செய்வது கெடுதல்களை விளைவிக்கும், ஆயுஸ், புத்தி, பலம், ப்ரக்ஞை, வீரியத்தின் சக்தி, இவைகளை நசிக்கச் செய்யும்; நாக்கு பதார்த்தங்களுடைய ரஸத்தைக் கிரஹிக்காது.

## 40. இரவில் செய்யவேண்டியவைகள்.

வ்யாஸர்:— முறைப்படி மந்திரங்களினால் அக்னியில் ஹோமம் செய்து பிறகு வைச்வதேவம் செய்துவிட்டு, யக்ஞசிஷ்டமான அன்னத்தை பந்துக்களுடன் புஜித்து பிறகு கால்களை நன்றாக ஈரத்தைத் துடைத்துக்கொண்டு நித்திரை செய்யவும்.

மேரு பர்வத அளவு தங்கதானங்களையும், பலநூறு வாஜபேயங்களையும், கோடி கன்யாதானங்களையும் செய்த புண்ணியம் ஸாயங்காலத்தில் ஔபாஸனா அக்னியில் செய்த ஒரு ஆஹுதிக்கு சமமாகும்.

சாண்டில்யர்:— பலவிதமானவையும், நிறைய உள்ளவையுமான அன்னங்களினால் பகவானை இரண்டு ஸந்தியாகாலங்களிலும் நைவேத்யம் முதலிய உபசாரங்களினால் பூஜை செய்யவேண்டும்.

சௌனகர்:— இரவில் முதல் யாமத்தில், ஜபம், யக்ஞம், தேவபூஜை முதலியன அனுஷ்டிக்கலாம். வேதாப்யாஸம், போஜனம் இவைகளையும் செய்யலாம். ஆனால் மஹா நிசியில் வேதாப்யாஸம் போஜனம் இவ்வகளை செய்யக்கூடாது.

அதே மாதிரி கடைசீ யாமத்தில், விடியற்காலை வேளையில் ஜபம், யாகம், பூஜை, வேதாப்யாஸம் இவைகளைச் செய்யலாம். போஜனம் செய்யக் கூடாது.

தக்ஷன்:— ப்ரதோஷ காலத்தையும், இரவினுடைய கடைசீ யாமத்தையும், வேதாப்யாஸம் செய்வதில்

உபயோகிக்கவேண்டும். நடுவில் உள்ள இரண்டு யாமங்களில் நித்திரை செய்யவேண்டும். இப்படி அனுஷ்டிக்கிறவன் ப்ரம்மஸாயுஜ்யத்தை அடைய ஸமர்த்தனாகிறான்.

கார்க்யர்:— தனக்கு அனுகூலமான படுக்கையில் இடது புறத்தைக் கீழேவைத்துப் படுக்கவேண்டும். இடது கையை கீழாக வைத்துப் படுப்பது ஆயுஸ்ஸை கொடுக்கும். மேல் நோக்கி படுப்பது பலத்தை விருத்தி செய்யும். தன் வீட்டில் கிழக்கில் தலை வைத்துப் படுக்கவேண்டும். மாமனார் கிருஹத்தில் தெற்கில் தலை வைத்துப் படுக்கவேண்டும். வெளியூரில் மேற்கில் தலை வைத்துப் படுக்கவும். ஒரு பொழுதும் வடக்கில் தலை வைத்துப் படுக்கக்கூடாது.

ஜலத்தினால் பூர்ணமான, அழகான கலசத்தைத் தலை பாகத்தில் வைத்துக்கொண்டு வேத மந்திரங்களா லும், கருட மந்திரங்களாலும் ஆத்ம ரக்ஷை செய்து கொண்டு இரவில் தூங்கவேண்டும்.

இரவில் ராத்திரி ஸூக்தம் ஜபம் செய்து, சுகமாக தூங்குகிற ரிஷிகளையும், தேவதைகளையும், ஸ்மரித்துக் கொண்டு பகவான் விஷ்ணுவை நமஸ்கரித்து அவரை ஸ்மரித்துக் கொண்டே தூங்கவேண்டும்.

மனு:— கிருஹஸ்தன் எப்பொழுதும் ருது காலத்திலேயே தன் பத்தினியை அடைய வேண்டும். ருது காலம் தவிர மற்ற காலத்தில் இச்சை இருந்தால் பர்வ காலத்தை விட்டு குறிப்பிட்ட காலத்தில் பத்தினியை அடையலாம்.

போதாயனர்:— இரவில் பின்பாகத்தில் பத்னியுடன் ருதுகமனத்தைப் போதாயனர் அனுமதிக்கிறார்.

படுக்கும்பொழுது, அகஸ்தியர், மாதவர், முசுகுந்தர், கபிலர், அஸ்தீகர், இந்த ஐந்து பெரியோர்களும் சுகமாகத் தூங்குகிறவர்கள். ஆகையால் இவர்களை ஸ்மரிக்கவேண்டும்.

கால்களை அலம்பித்துடைத்து, இரு தடவை ஆசமனம் செய்து, சுத்தனாய் உலர்ந்த கால்கள், கைகள், முகம் இவைகளையுடையவனாய் மாதவனை ஸ்மரித்துக்கொண்டு தூங்கவேண்டும்.

வ்யாஸர்:— இந்த மாதிரியான தர்மங்கள் ஒவ்வொரு நாளும் அனுஷ்டிக்கவேண்டியவைகள். உபதேசம் செய்யப்பட்டிருக்கிற இவை ஸமஸ்த புருஷார்த்தங்களையும் கொடுக்கவல்லமையுள்ளது.

எவன் இந்த தர்மங்களை நாஸ்திக்யத்தாலும், சோம்பேறித்தனத்தாலும், அனுஷ்டானம் செய்ய விரும்பவில்லையோ அவன் காக்கையாகப் பிறப்பான், அநேக நரகங்களை அடைவான்.

க்ஷேம லாபங்களை அடைய வர்ணாச்ரம தர்மங்களை விட்டுத் தனியாகத் தர்மங்கள் சொல்லப் படவில்லை. ஆகையால் அதிகாரியாக உள்ளவன் அவசியம் பகவானுடைய ப்ரீதிக்காக அவரவர்களுடைய ஆச்ரம தர்மங்களை அனுஷ்டிக்க வேண்டும். இது சாஸ்த்திரத்தின் கருத்து என்று அறியவும்.

ஸம்க்ஷேப தர்ம சாஸ்த்திரத்தில்ஆஹ்னிகப்ரகரணம் முற்றிற்று.

# ஸம்க்ஷேப தர்ம சாஸ்த்திரத்தில் ஆசௌச ப்ரகரணம்.

## 1. ஆசௌச சப்தத்தினுடைய பொருள்

சங்க:— ஆசௌச காலத்தில் தானம், ப்ரதிக்ரஹம், ஹோமம், அத்யயனம், பித்ரு காரியங்கள் இவைகளைச் செய்யக்கூடாது. ஆனால் ப்ரேதத்தை உத்தேசித்துச் செய்யும் பிண்ட தானம் என்ற காரியத்தை செய்யலாம்.

விஞானேஸ்வரர்:— காலத்தினாலும், ஸ்நானத்தி னாலும், போக்கடிக்க கூடியதாயும், பிண்டம், உதக தானம், இவைகளைச் செய்யும்படி விதிக்கிறதாயும், வேதாத்யயனம் பூஜை ஹோமம், முதலிய கர்மாக்களை நிஷேதிக்கிறதாயும் உள்ள புருஷனிடத்தில் இருக்கின்ற ஒரு (அதிசய) விசேஷம் ஆசௌசம் என்று சொல்லப்படுகிறது.

புருஷனுக்கு அசுத்தியை உண்டு பண்ணுகிறதா யும், பிண்டம், உதகம், முதலிய தானத்திற்கு நிமித்த காரணமாயும், காலம், ஸ்னானம், இவைகளினால் விலகுகிறதாயும், இருக்கிற அதிசயத்திற்கு ஆசௌச மென்று கூறப்படுகிறது.

## 2. ஆசௌச காலத்தில் ஸந்தியாவந்தனம் செய்யும் முறை.

ப்ராஹ்மணர்களுக்கு ஸந்தியாவந்தன காலத்தில் ஆசௌசம் கிடையாது. பிறகு ஆசௌசம் வந்துவிடும். எவர்களுடைய க்ருஹத்தில் அக்னிஹோத்ரம் செய்யப்

படுகிறதோ, அந்த க்ருஹத்திலுள்ள அக்னிஹோத்ரிக்கு அக்னி ஹோத்ரம் செய்யும் காலத்தில் சுத்தி ஏற்படுகிறது. பிறகு அசுத்தி வருகிறது. ப்ரம்மசாரி எப்பொழுதும் சுத்தன். ஆனால் அக்னிஹோத்ரி யானவர் தீட்டு உள்ளவர்களைத் தொடுவது சேர்ந்து சாப்பிடுவது இவைகளை வர்ஜிக்க வேண்டும்.

புலஸ்த்யர்:— ஜனனாசௌசத்திலும் மரணா சௌசத்திலும் ஸந்த்யோபாஸனத்தை விடக்கூடாது. அனுஷ்டிக்க வேண்டும். ஸந்தியா வந்தன மந்திரங் களை மனஸினால் ஸ்மரிக்க வேண்டும். வாக்கினால் உச்சரிக்க கூடாது. ப்ராணாயாம மந்திரங்களை மனஸினாலும் ஸ்மரிக்கக்கூடாது. ஆனால் ப்ராணா யாமம் மந்திரமில்லாமல் செய்ய வேண்டும்.

வ்யாஸர்:— ஆசௌசத்தில் செய்யும் ஸந்தியா வந்தனத்தில் அர்க்யம் கொடுக்கும் பொழுது வாக்கினால் காயத்ரீயை உச்சரிக்க வேண்டும். பிறகு ஆத்ம ப்ரதக்ஷிணம் செய்து ஸூர்யனைத் தியானம் செய்து கேசவாதிகளை உத்தேசித்துத் தர்ப்பணம் செய்யவும். ஜப காலத்தில் பத்து முறை காயத்ரீயை மனதினால் ஜபிக்கவும .

3. ஆசௌசத்தில் விட வேண்டிய கர்மாக்கள்.

மனு:— ஜனனாசௌசம் மரணா சௌசம் இவ்விரண்டிலும் பத்து தினங்கள் ஆசௌசம் உள்ள வர்களுடைய க்ருஹத்தில் சாப்பிடக்கூடாது. ஆசௌசம்

உள்ளவன் தானம், ப்ரதிக்ரஹம், ஹோமம், வேதம் சொல்வது இவைகளைச் செய்யக்கூடாது.

ஆசௌசத்தில் பத்து நாள் பர்யந்தம் தேவ பூஜை செய்யக்கூடாது. பித்ரு கார்யங்களையும், தானம் கொடுப்பதையும , ஹோமம் செய்வதையும், மந்திர ஜபங்களையும் செய்யக்கூடாது.

கண்வர்:– அக்னிஹோத்ரம் செய்வதற்கு வேறு ப்ராஹ்மணர் கிடைக்காவிடில் தானாகவே ஸ்நானம் செய்து ஈர வஸ்திரத்துடன் அக்னிஹோத்ரம் செய்யலாம். அது பர்யந்தம் சுத்தன், பிறகு ஆசௌசம் ஏற்படுகிறது என்று அறியவும .

பிருஹஸ்பதி:– ஜனனாசௌசம், மரணாசௌசம் இவைகளிலும், உடம்பு அசௌகரியமாக இருந்தாலும், ச்ராத்த போஜனம் செய்தாலும், வெளியூர் சென்றாலும், ஔபாஸனாக்னியில் ஹோமத்தை நிறுத்தக் கூடாது. வேறு ஒருவரைக் கொண்டு ஹோமம் செய்ய்ச் சொல்ல வேண்டும்.

கண்வர்:– சரீரசுத்தி, ஆசமனம், ஸ்நானம், போஜனத்தில் உள்ள நியமங்கள், தொடக்கூடாதவை களைத் தொட்டால் ஸ்நானம் செய்வது, இந்த மாதிரி உள்ள ஆசாரங்கள், இவைகளை அவசியம் ஆசௌச காலத்தில் அனுஷ்டிக்க வேண்டும்.

யஜமானனுக்கு ஆசௌசம் இருக்கும் பொழுது அவனுடைய த்ரவ்யங்களுக்கும் அசுத்தம் உண்டு. யஜமானனுக்கு ஆசௌசம் போகும் பொழுது அந்த

த்ரவ்யங்களுக்கு சுத்தி வரும். ஆகையால் அந்த த்ரவ்யங்களை ஆசௌச காலங்களில் க்ரஹிக்ககூடாது. தீர்த்தத்தை ப்ரோக்ஷித்தாலும் சுத்தி ஏற்படாது என்பது கருத்து.

தயிர், பால், நெய், கறிகாய், உப்பு, புஷ்பம், எள்ளு, மருந்து, விறகு, கிழங்கு, பழம், மாம்ஸம், தேன், கிணற்று ஜலம், மான்தோல், திதிப்பு பக்ஷணங்கள், இவைகளை யஜமானனுக்கு ஆசௌச மிருந்தாலும் அவனைக்கேட்டு எடுத்துக்கொள்ளலாம். தோஷமேற்படாது என்பது கருத்து.

ஆசௌசகாலத்தில் சொல்லப்பட்ட நியமங்கள் ஆபத்து காலத்தில் கிடையாது. ஆகையால் ஆபத்து காலங்களில் பதார்த்தங்களை வாங்கலாம், கொடுக்கலாம், புஜிக்கலாம் என்பது கருத்து. ஆசௌச காலங்களிலே ஏற்படும் வியாதி, ஜ்வரம்,இவைகளுக்கு பரிஹாரமாக புண்ய காரியங்களைச் செய்யலாம். மருந்துகளுக்குக் கட்டுப்படாத வியாதி களுக்கு ஆபத் காலம் சுத்தியைக்க கொடுக்கும் என்று அறியவும்.

பராசரர்:— களத்திலும், யக்ஞத்திலும், விவாஹத்திலும , ஸங்க்ரமணத்திலும், க்ரஹண காலத்திலும், மரணத்திலும், புத்ர ஜனனத்திலும், வ்யதீ பாதத்திலும், கொடுக்கப்பட்ட த்ரவியதான மானது குறைவில்லாத சுக பலத்தைக் கொடுக்கும். இவைகள் இரவில் ஸம்பவித்தாலும் தானம் செய்யலாம் என்று அறியவும். மற்ற சமயத்தில் இரவில் தானம் செய்யக்கூடாது என்று அறியவும்.

### 4. ஸத்ய: சௌசம்.

*தக்ஷன்:—* ஸத்ய: சௌசம், ஒருநாள், மூன்று நாள், நான்குநாள், ஆறுநாள், பத்துநாள், பன்னிரண்டு நாள், ஒரு பக்ஷம், ஒருமாதம், மரணாந்தம் (மற்ற ஐந்து நாள்) ஆகப் பத்துவிதமாக ஆசௌசம் சொல்லப்படுகிறது.

*யாக்ஞ்யவல்கியர்:—* தீட்டைக் கேட்டவுடன் கட்டின வேஷ்டியுடன் ஸ்நானம் செய்யவேண்டும். இந்த ஸ்நானம் செய்யும் வரையில் உள்ள ஆசௌசத்திற்கு ஸத்ய: சௌசம் என்பது என்று அறியவும். யக்ஞத்தில் சம்பந்தப்பட்ட ருத்விக்கள், தீக்ஷிதர்கள், ஸத்ரயாகம் செய்கிறவர்கள், ப்ரம்மசாரி, ஸங்கல்ப பூர்வகமாக வ்ரதனுஷ்டானம் செய்கிறவர்கள், தானம் செய்கிறவர் கள், ப்ரம்மத்தை ஸாக்ஷாத் கரித்தவர்கள் இவர்களுக்கும், தான காலத்திலும், விவாஹ காலத்திலும், யாக காலத்திலும், யுத்த காலத்திலும், தேச உபத்ரவ காலத்திலும் ஸத்ய: சௌசம் சொல்லப்பட்டிருக்கிறது என்று அறியவும்.

*பிருஹஸ்பதி:—* நைஷ்டிக ப்ரம்மசாரி, வானப்ரஸ்தன், ஸன்யாஸி, ப்ரம்மசாரி, இவர்களுக்கு ஜனன மரணங் களுடைய ஆசௌசம் ஏற்படாது.

க்ருச்சரானுஷ்டானம், தேவோத்ஸவம், ச்ராத்தம், தானம், ஹோமம், தபஸ், யாகம், இவைகளை ஆரம்பித்த பிறகு ஆசௌசம் ஸம்பவித்தால் அந்தந்த காரியங் களில் ஈடுபட்டவர்களுக்கு ஸத்ய: சௌசம் என்று அறியவும். இது சாவாசௌச விஷயம். ஜனனா சௌச விஷயத்தில் ஸ்நானம் கிடையாது.

யாகத்தில் ஆரம்பம் என்பது ரித்விக்களை வரிப்பது. வ்ரதம், ஸ்த்ரயாகம் இவைகளில் ஸங்கல்பம் செய்வது ஆரம்பமாகும். விவாஹம் முதலியதில் நாந்தீ ச்ராத்தம் செய்வது ஆரம்பம். ச்ராத்தத்தில் சமையல் ஆரம்பித் தாலும், ப்ராம்மணர்களை வரித்தாலும் ச்ராத்தம் ஆரம்பிக்கப்பட்டதாகும். ஆகையால் இவைகளில் ஆரம்பித்த பிறகு ஆசௌசம் ஏற்படாது என்று அறியவும்.

போதாயனர்:– ப்ரணவம், வ்யாஹ்ருதிகள் இவைகளை உச்சரித்து ஸங்கல்பத்தை முன்னிட்டு வேத பாரா யணத்தை ஆரம்பித்தால், முடியும் வரையில் நடுவில் நிறுத்தக்கூடாது. பேசக்கூடாது. இந்த மாதிரி வேத பாராயணம் நியமத்துடன் செய்தால் நடுவில் ஜனன மரணா சௌசம் கிடையாது.

விவாஹாங்கமான அங்குரார்ப்பணம் ஆரம்பித்த பிறகு மாதா பிதாக்களுக்கு மரணம் ஸம்பவித்தால் அப்பொழுதே எல்லா விவாஹ காரியங்களையும், முடித்து, சேஷஹோமத்தை முடித்துக்கொண்டு, பிறகு காரியங்களை ஆரம்பிக்கவும்.

விவாஹம் ஆனபிறகு சேஷ ஹோமத்திற்குள் தம்பதிகளுடைய மரணம் ஸம்பவித்தால் சேஷ ஹோமம் முடித்து பிறகு மரணம் அடைந்தவர்களுக்கு தகனம் செய்யவும்.

ப்ராம்மணர்கள் சாப்பிடும்பொழுது அன்னதானம் செய்யும் யஜமானனுக்கு ஆசௌசம் ஸம்பவித்தால் ஆசௌசமில்லாதவர்களை அன்னாதிகளை போடச்

சொல்லி சாப்பிட்டு பிறகு வேறு க்ருஹத்திலிருந்து கொண்டு வந்த ஜலத்தினால் ஆசமனம் செய்தால் சுத்தர்கள் என்று சொல்லப்படுகிறது.

ரஜஸ்வலை, ப்ரஸவித்தவள், ஆசௌசமுள்ளவன், சவத்தை சுமந்தவன், இவர்களால் பார்க்கப்பட்ட ச்ரார்தத்தில் தேவர்கள், பித்ருக்கள் ஒருவரும் புஜிப்பது இல்லை என்று அறியவும்.

பராசரர்:— ப்ருகு (மலைச்சரிவில் விழுந்து), அக்னி, இவைகளால் இறந்தவன், வேறு தேசத்தில் மரித்தவன், பால மரணம், ஸன்யாஸி மரணம் இவைகளில் ஸத்ய: சௌசம் கூறப்படுகிறது என்று அறியவும்.

வ்ரத்த வசிஷ்டர்:— க்ரஹண காலத்தில் ஜனன மரணா சௌசம் கிடையாது. க்ரஹணம் விட்ட பிறகு ஆசௌசம் ஏற்படும்.

மாப்பிள்ளை மரணத்தில் மாமனார், மாமியார், இவர்களுக்கும் பகினீ பதி மரணத்தில் மைத்துனனுக்கும், யாஜகனுடைய மரணத்தில் யாஜ்யருக்கும், சிஷ்யன் மரணத்தில் ஆசார்யனுக்கும், கூட வாசிக்கும் ஸஹாத்யாயீ மரணத்தில் ஆசார்ய புத்ரனுக்கும், யஜமானுடைய மரணத்தில் ருத்விக்குக்கும் ஸத்ய: சௌசம் என்று அறியவும்.

பராசரர்:— துர்பிக்ஷத்திலும், தேசங்களில் ஏற்பட்ட கலவரங்களிலும், ஆபத்திலும், க்ஷாமம் க்ஷோபம் முதலிய உபத்ரவங்களினால் ஏற்பட்ட மரணங்களிலும், ஞாதிகளுக்கு ஸத்ய;சௌசம் சொல்லப்பட்டிருக்கிறது.

சித்ரகாரன், தச்சன், கொல்லன் இவர்கள், வைத்யர்கள் வேலைக்காரி, வேலைக்காரன், க்ஷவரம் செய்கிறவன், ராஜாக்கள், வேதாத்யாயனம் செய்தவர்கள், இவர்களுக்கும் ஸத்ய: சௌசம் விதிக்கப்பட்டிருக்கிறது.

பிருஹஸ்பதி:— யுத்தத்தில் எதிர்த்து நின்று க்ஷத்ரிய தர்மத்தை அனுசரித்து ஆயுதத்தால் எவன் வதத்தை அடைகிறானோ அவனுடைய மரணம் யாகத்தின் முடிவு மாதிரியாகும். அவன் விஷயத்தில் ஸத்ய: சௌசம் கூறப்படுகிறது.

யாக்ஞயவல்க்யர்:— அரசர்களுக்கும், இடியினால் கொல்லப்பட்டவர்களுக்கும், பசுவை உத்தேசித்தும் ப்ராம்மணனை உத்தேசித்தும் காப்பாற்றுவதற்காக மரணத்தை அடைந்தவனுக்கும், யுத்தத்தில் மரித்த வனுக்கும், அரசனுக்கு விருப்பமான புரோஹிதனுக்கும், ஸத்ய: சௌசம் கூறப்படுகிறது.

### 5. கெட்ட வழிகளில் மரணம் அடைந்தவர்களுக்கு ஸம்ஸ்காரம்.

பராசரர்:— பாலன், தேசாந்தரத்தில் இருப்பவன், பதிதன், ஸன்யாஸி இவர்களுடைய மரணத்தில் ஸத்ய: சௌசம் சொல்லப்படுகிறது. அக்னி, தூக்கு போட்டுக் கொள்வது, ஜலம் இவைகளால் விரும்பி மரணத்தை ஏற்படுத்திக் கொண்டவனுக்கும் ஸத்ய: சௌசம் என்று அறியவும்.

நபும்ஸகன், பாஷண்டன், பதிதன், ஸன்யாஸம் பெற்று ஸன்யாஸ தர்மத்தை விட்டவன், வீணாக

பிறந்தவன், வ்யபிசாரிணீ , ஆச்ரமமில்லாதவன், திருடன், கர்ப்பத்தை கொன்றவன், பர்த்தாவை கொன்றவர்கள், தற்கொலை செய்து கொண்டவர்கள், இவர்கள் (விஷயத்தில்) மரணத்தில் ஆசௌசம் கிடையாது. மந்த்ரமில்லாமல் கொளுத்தவேண்டியவர்கள், பிறகு மந்த்ரத்தினால் ஸம்ஸ்காரம் செய்யவேண்டும். ஞாதிகளுக்கு ஆசௌசம் கிடையாது. ஒரு வருஷம் அல்லது ஆறு மாதங்கள் சென்ற பிறகு நாராயணபலி செய்து மந்திரங்களால் தஹனக்ரியாதிகளை செய்ய வேண்டும்.

வ்யாஸர்:— பாபமான மார்க்கத்தினால் மரணம் அடைந்தவர்களுக்கு ஒரு வருஷத்திற்குப் பிறகு நாராயணபலி செய்து ப்ரேதக்ரியையை ஆரம்பிக்கவும். இதற்கு மூன்று நாள் ஆசௌசம். இரண்டாவது நாளில் அஸ்திஸஞ்சயனம், மூன்றாவது நாளில் உதக தானம் செய்து நான்காவது நாளில் ச்ராத்தம் செய்யவும்.

அங்கிரர்:— துர்மரணத்தை அடைந்தவனுக்கு ஒரு வருஷம் அல்லது ஆறு மாதம் அல்லது மூன்று மாதம் சென்ற பிறகு நாராயண பலி செய்து ஸம்ஸ்காரம் செய்யவேண்டும்.

துர்மரணத்தில் செய்யப்படும் அபர காரியத்தில் விசேஷம் கூறப்படுகிறது. ஒரு வருஷம் சென்ற பிறகு ப்ராஜாபத்ய க்ருச்சரம், அதிக்ருச்ரம், மூன்று தப்த க்ருச்ரங்கள், சாந்த்ராயணம் இவைகளைச் செய்து நாராயண பலி செய்யவேண்டும். மனுஷ்யனுடைய ஆயுஸ்சு ஸ்திரமில்லாததால் கர்த்தாவானவன் அபர காரியங்களை சீக்கிரத்தில் செய்ய விரும்பினால், ஆறு

மாதங்கள் சென்ற பிறகு செய்வதற்கு சொன்ன க்ரச்ரங்களை இரண்டு மடங்காயும் மூன்று மாதங்களில் செய்வதற்கு மூன்று மடங்காயும், மூன்று பக்ஷங்களில் செய்வதற்கு நான்கு மடங்காயும் உடனே கர்மாக்களை ஆரம்பிக்க ஐந்து மடங்காயும் செய்ய வும். பிறகு கர்மாக்களை செய்யவேண்டும் என்பது கருத்து.

6. கர்ப்பஸ்ராவம் முதலிய நிமித்தத்தால் ஆசௌசம்.

பராசரர்:— கர்ப்பம் ஸ்ரவித்தாலும், விழுந்தாலும், அந்த கர்ப்பம் எவ்வளவு மாதம் உதரத்தில் இருந்ததோ அவ்வளவு நாள் தாயாருக்கு ஜனனா சௌசம் என்று அறியவும்.

நான்காவது மாதம் முடிவதற்குள் உண்டான கர்ப்ப நாசத்திற்கு ஸ்ராவம் என்றும், ஐந்து ஆறு மாதங்களில் ஏற்பட்ட கர்ப்ப நாசத்திற்கு பாதம் என்றும், பிறகு ஏழாவது மாதத்திலிருந்து ஏற்பட்டதற்கு ப்ரஸவம் என்றும் பெயர். ஏழாவது மாதத்திற்கு பிறகு மாதா வுக்குப் பத்து நாள் ஆசௌசம் என்று அறியவும்.

மூன்று மாதங்களுக்குள் ஏற்பட்ட கர்ப்ப ஸ்ராவதிற்கு தாயாருக்கு மூன்று நாள் ஆசௌசம். நான்காவது மாதத்திலிருந்து ஆறு மாதம் வரையில் ஏற்பட்ட கர்ப்ப நாசத்திற்கு, மாதத்திற்குத் தகுந்த ஸங்க்கையை அனுசரித்து ஆசௌசம். ஏழாவது மாதம் முதற்கொண்டு பத்துநாள் ஆசௌசம். இது தாயாருக்கு மாத்திரம் சொல்லப்பட்டது. பிதாவுக்கு ஸ்ராவத்திலும், பாதத்திலும், ஸ்னானம் வரையில்

ஆசௌசம். ஞாதிகளுக்கு பதனத்தில் ஸ்னானம் பர்யந்தம் ஆசௌசம். சிசு பிறந்து இறந்தால் மாதா பிதாக் களுக்குப் பத்து நாள் ஆசௌசம்

ஞாதிகளுக்கு ஒன்பதாவது மாதத்திலிருந்து ப்ரஸவ நிமித்தமான ஆசௌசம் பத்து நாள் பூர்ணமாக இருக்கிறது என்றும், மாதா பிதா ப்ராதா இவர்களுக்கு ஏழாவது எட்டாவது மாதத்தில் ஏற்பட்ட ப்ரஸவத்திற்கு ஆசௌசம் பத்துநாள் பூர்ணமாகச் சொல்லப்பட்டி ருக்கிறது என்றும் பிரித்து அறியவும்.

பெண் பிறந்தால், கன்யையின் ப்ராதா, பிதா, பிதாவின் ப்ராதா, அவனுடைய புத்ரன், பிதா மஹன், பிதாமஹனுடைய ஸஹோதரன் இவர்களுக்கு பத்து நாள் ஜனனா சௌசம் உண்டு என்று அறியவும்.

புருஷப்ரஜை பிறந்தால் எல்லா ஞாதிகளுக்கும் பத்துநாள் ஆசௌசம். ஸ்திரீ ப்ரஜைப் பிறந்தால் மாதா, பிதா இவர்களுக்கும் பிதாமஹன், பிதாமஹனு டைய ஸஹோதரன் இவர்களுக்கும் பிதாவினுடைய ஸஹோதரர்களுக்கும் அவர்களுடைய புத்ரர்களுக்கும் பத்து நாள் ஆசௌசம் என்றும், மற்ற ஞாதிகளுக்கு ஆசௌசம் கிடையாது என்றும் அறியவும்.

ஜனனா சௌசம் இரண்டுவிதமானது. தொடக்கூடாது என்றும், தர்மம் செய்வதற்கு அதிகாரம் இல்லை என்பது என்றும் அறியவும். மாதாவுக்குப் பூர்ணமாக ஆசௌசம், பிதாவுக்கு ஸ்னான பர்யந்தம் அஸ்ப்ருச்யம் (தொடக்கூடாது) என்ற தோஷம் உண்டு, பிறகு கிடையாது. ஆனாலும், ஸ்னானத்திற்குப் பிறகு சில

நாள் தர்ம கார்யங்களுக்கு யோக்யனாகமாட்டான் என்பதாகும். தன் சொந்தக் காரியங்களுக்கு பூஜை வைச்வதேவத்திற்கு சுத்தன் என்று அறியவும். ஸபிண்டர்களுக்கு எப்பொழுதும் அஸ்ப்ருச்யத்வ தோஷம் இல்லை.

புத்ர ஜனனத்தில் ஞாதிகளுக்கு அஸ்ப்ருச்ய தோஷம் கிடையாது, சுத்தர்கள் என்று அறியவும். ஆனால் தர்மாதிகாரம் இல்லை என்பது கருத்து. மாதாவுக்கும் பிதாவுக்கும் ஆசௌசம் உண்டு. ஆனால் மாதாவுக்கு பூர்ணமான ஆசௌசம். பிதாவுக்கு ஸ்னானத்திற்குப் பிறகு அசுசித்வம் இல்லை. (புத்ர ஜனனம் கேட்டு ஸ்னானம் செய்கிற விஷயத்தைக் குறிப்பிடுகிறார்). ஸ்னானம் செய்த பிதாவுக்கு அஸ்ப்ருச்சய தோஷம் கிடையாது என்று அறியவும். பிதாவானவன் பத்னீயுடன் சேர்ந்து இருக்கும் பொழுது சுக்ல விஸர்ஜனத்திற்கு பிறகு உடனே ஸ்னானம் செய்யவேண்டும். அந்த விஷயத்தில் புத்ர ஜனனம் கேட்டு ஸ்னானம் செய்தால் அஸ்ப்ருச்யத்தவம் பிதாவுக்குக் கிடையாது என்பதாகும். ஆகையால் லோகத்தில் உள்ளபடி ஸபிண்டர்கள், பிதா, மாதா எல்லோருக்கும் அஸ்ப்ருச்யத்வம் ஸமானம் என்பது பத்து நாள் சென்ற பிறகு ஸ்னானம் செய்தால் சுத்தி ஏற்படுகிறது எல்லோருக்கும் என்று அறியவும். மாதாவுக்கு பாண்ட ஸ்பர்சம் பர்யந்தம் தீட்டு என்று அறியவும். பிதாவுக்கு தீட்டு போனாலும் தர்மத்தில் அதிகாரம் பத்னியினுடைய தீட்டு போகிற காலப் பர்யந்தம் என்று அறியவும்.

கலி நிஷித்த ப்ரகரணத்தில் ப்ராம்மணனுடைய நடத்தை அத்யயனம் முதலிய சிஷ்டாச்சாரத்தை உத்தேசித்துத் தீட்டைக் குறைப்பது செய்யக்கூடாது என்று சொல்லப்பட்டிருக்கிறது.

அஸ்ப்ருச்யத்வ தோஷம் பத்து நாள் வரையில் உண்டு. பிறகு புருஷ ப்ரஜை ஜனனத்தில் இருபது நாள் பர்யந்தமும், ஸ்திரீ ப்ரஜை ஜனனத்தில் முப்பது நாள் பர்யந்தமும், பிதாவுக்கு தர்ம காரியங்களில் அதிகாரம் கிடையாது என்றும் அறியவும், குல ஸம்ப்ரதாயத்தை அனுசரித்து அனுஷ்டிக்கவும்.

மார்கண்டேயர்:— சிசு ஜனனத்திலிருந்து ஆறாவது நாள் இரவில் பந்துக்கள் உத்ஸவம் கொண்டாட வேண்டும். இது ஜன்மதா என்ற தேவதைக்குப் ப்ரீதியைக் கொடுக்கும். ஸ்திரீகள் ஸங்கீதம் பாட வேண்டும். புருஷர்கள் ஆயுதத்துடன் இருந்து கண் விழிக்கவேண்டும். இதே மாதிரி பத்து நாளிலும் உத்ஸவம் கொண்டாடவேண்டும். இது சிசு ரக்ஷண காரியம் என்று அறியவும்.

### 7. சிசுவின் மரணத்தில் தீட்டு விசாரம்.

மரணா சௌசத்திலும், ஜனான சௌசத்திலும் தீட்டு உள்ளவர்கள் பரஸ்பரம் தொட்டுக் கொள்ளக் கூடாது. தெரியாமல் தொட்டால் ஸாந்தபனக்ருச்சரம் அனுஷ்டிக்க வேண்டும், தெரிந்து செய்தால் ப்ராஜாபத்ய க்ருச்ரம் அனுஷ்டிக்கவேண்டும் என்று அறியவும்.

மனு:— பிறந்து பத்து நாட்களுக்குள் மரித்தால் ஞாதிகளுக்கு சாவா சௌசம் கிடையாது. ஸூதகா சௌசம் உண்டு என்று அறியவும்.

வியாகரர்:— பிறந்து பத்து நாட்களுக்குள் சிசு மரித்தால் மாதா பிதாக்களுக்கு ஜனனா சௌசம்

தான் அனுஷ்டிக்க வேண்டும். பத்து நாளோடு தீட்டு விலகும். மரணா சௌசம் கிடையாது என்று சாதாதபர் சொல்லுகிறார்.

யாஞ்யவல்கியர்:— பல் முளைப்பதற்குள் சிசு மரித்தால் ஞாதிகளுக்கு ஸத்ய: சௌசம். அதற்கு பிறகு சௌளம் வரையில் ஒரு நாள் ஆசௌசம். மூன்றாவது வருஷத்திலிருந்து ஏழாவது வருஷத்திற்குள் சிசு மரித்தால் மூன்று நாள் ஆசௌசம். உபநயனம் ஆன பிறகு மரித்தால் பத்து நாள் ஆசௌசம் என்றும் அறியவும். சிசு பிறந்து பத்தாவது நாளில் மரித்தால் மாதா பிதாக்களுக்கு அதிகமாக இரண்டு நாள் ஆசௌசம் ஏற்படும். பதினோறாவது நாள் சிசு மரித்தால் மூன்று நாள் அதிகா சௌசம் என்று அறியவும். இது ஞாதிகளுக்குக் கிடையாது. மாதா, பிதா, ப்ராதா இவர்களுக்குப் பத்து நாளுக்குப் பிறகு ஏற்படும் சிசு மரணத்தில் பத்து நாள் ஆசௌசம் என்று அறியவும்.

### 8. புதைப்பது முதலிய ஸம்ஸ்காரங்கள்.

கன்யை, பாலகன் இவர்களுடைய இருபத்தி மூன்று மாதத்திற்குள் ஏற்பட்ட மரணத்தில் சிசுவுக்கு பூமியில் புதைப்பது என்ற ஸம்ஸ்காரம் செய்ய வேண்டும். இருபத்தி மூன்று மாதத்திற்குப் பிறகு அக்னி ஸம்ஸ்காரம், தகனம் செய்யவேண்டும்.

இரண்டாவது வயது பூர்ணமாகாத சிசு இறந்து தகனம் செய்யப்பட்டால் ஞாதிகளுக்கு மூன்று நாள் ஆசௌசம் என்று அறியவும்.

அங்கிரர்:— பல் முளைத்து சௌளமாகாமல் இருந்து சிசு மரித்தால், அதை தஹித்தால் ஞாதிகளுக்கு மூன்று நாள் ஆசௌசம் என்று அறியவும்.

இரண்டாவது வருஷத்தில் அல்லது முதல் வருஷத்தில் சௌளம் செய்யப்பட்டு இறந்தால், இறந்த சிசு விஷயத்தில் ஞாதிகளுக்கு மூன்று நாள் ஆசௌசம் என்று அறியவும்.

மூன்று வருஷத்திற்கு மேல் இறந்த பிராம்மண சிசு விஷயத்தில் சௌளம் செய்யப்பட்டாலும் சௌளம் செய்யப்படாவிட்டாலும் ஞாதிகள் மூன்று நாள் மந்த்ரமில்லாமல் உதக தானம் செய்யவேண்டும், பிண்ட தானங்களையும் செய்யவேண்டும். எட்டு வருஷத்திற்குப் பிறகு பத்து நாள் பிண்ட தானம் செய்யவும். ப்ரேதப் பிண்டத்தை வெளியில் தர்ப்பம் மந்த்ரமில்லாமல் கொடுக்கவும்.

தஹனத்திலிருந்து உதக தானமும், பிண்ட தானமும் ஐந்தாவது வருஷத்திலிருந்து அஸ்தி ஸஞ்சயனமும் செய்யவேண்டும். மந்த்ரமில்லாமல் செய்யவேண்டும் என்பது கருத்து.

ஆறாவது வருஷம் முதல் உபநயன பர்யந்தும் ஏகர்ச்சவிதியினால் ஸம்ஸ்காரம் செய்து திலோதகம், பிண்டதானம், நவச்ரார்தம், ஷோடச ச்ராத்தம் இவை களை மந்திரமில்லாமல் செய்யவேண்டும்.

உபநயனத்திற்குப் பிறகு பித்ரு மேத விதியினால் ஸம்ஸ்கரித்து மந்திரத்துடன் கர்மாக்களைச் செய்யவும்.

எட்டு வயதிற்குள் பிறகு பாஷாணஸ்தாபணம் செய்து உதக பிண்ட தானம் செய்யவும். ப்ரேத சாந்தியின் பொருட்டு என்று அறியவும். ஸபிண்டீ கரணம் இல்லை என்று சொல்லப்படுகிறது.

ஏழாவது வயதுக்குமேல் இறந்த க்ருஹஸ்த னுக்கும், பன்னிரெண்டாவது வயதுக்கு மேல் இறந்த ப்ரம்மசாரிக்கும் ஸபிண்டீகரணம் அவசியம் செய்ய வேண்டும் என்று அறியவும்.

கன்யை, பாலன், குமாரன் இவர்களுக்கு மூன்று நாட்களில் பிண்டோதக க்ரியைகளைச் செய்யவும். ஆசௌசம் பத்து நாள் முழுவதும் உண்டு. எட்டாவது தினம் முதல் மூன்று தினங்களில் பிண்டோதக தானத்தை முடித்துக் கொண்டு பன்னிரெண்டாவது தினத்தில் நாராயணபலி செய்யவேண்டும்.

பாலன், கன்னிகை, நபும்ஸகன், பதிதன் இவர் களுக்கு நாராயணபலி செய்ய வேண்டும். ஸன்யாஸி களுக்கும் நாராயண பலி செய்யவும்.

போதாயனர்:— மூன்றாவது வருஷம் முதல் உதக பிண்டதானத்தையும், நான்காவது வருஷம் முதல் நாராயண பலியையும் செய்யவும்.

### 9.கன்யா மரணத்தில் ஆசௌசம்.

ஆபஸ்தம்பர்:— சௌளமாகாத கன்னிகையின் மரணத்தில் ஸபிண்டர்களுக்கு ஸத்ய: சௌசம் சொல்லப்பட்டிருக்கிறது. சௌளத்திற்குப் பிறகு ஒரு

நாள் ஆசௌசம், விவாஹமான பிறகு மூன்று நாள் ஆசௌசம் என்று அறியவும்.

கன்னிகை சௌளம் செய்வதற்குள் மரித்தால் ஞாதிகளுக்கு ஸத்ய: சௌசம், பிறகு வாக் நிச்சயம் வரையில் ஒரு நாள் ஆசௌசம், பிறகு விவாஹம் ஆகும் வரையில் மூன்று நாள் ஆசௌசம். கல்யாணம் ஆகாமல் ரஜோ தர்சனம் ஏற்பட்டு மரித்தால் பத்து நாள் ஆசௌசம் என்று அறியவும்.

வாக்தானமாகி விவாஹமாகாமல் மரித்தால் வரபக்ஷத்திலும் பித்ரு பக்ஷத்திலும், ஞாதிகளுக்கு மூன்று நாள் ஆசௌசம். கன்யை, பாலன், இவர்களின் மரணத்தில் ப்ராதாவுக்கும், மாதா பிதாக்களுக்கும் எப்பொழுதும் பத்து நாள் ஆசௌசம் என்று அறியவும்.

வ்யாசர்:– விவாஹமாகி பெண் பிதாவின் க்ருஹத்தில் ப்ரசவித்தாலும், இறந்தாலும், அவளுடைய பந்துவர்க்கங்களுக்கு ஒரு நாள் ஆசௌசம். பிதாவுக்கு மூன்று நாள் ஆசௌசம். மாதாவுக்கும், ஸஹோதரர்களுக்கும் மூன்று நாள் ஆசௌசம் என்று அறியவும்.

விவாஹமாகிய பெண் பிதாவின் க்ருஹத்தில் இறந்தாலும், ப்ரஸவித்தாலும், மாதா பிதாக்களுக்கு மூன்று நாட்கள் ஆசௌசம், அவர்களின் பிள்ளைகளுக்கு ஒரு நாள் ஆசௌசம் என்று அறியவும். தற்சமயம் ஆசாரத்தில் விவாஹமான பெண்ணினுடைய ப்ரஸவித்திலும், மரணத்திலும் மாதா பிதாக்களுக்கு மூன்று நாள் ஆசௌசம் என்று அறியவும்.

எங்கு ப்ரஸவித்தாள், எங்கு மரணமடைந்தாள் என்பது விசாரிக்க வேண்டியது கிடையாது.

### 10. உபநீதா சௌசம்.

உபநயனம் செய்து கொண்டவனுக்கும், உபநயனம் செய்து கொள்ளாதவனுக்கும், எட்டுவயதுக்கு மேல் மரணம் ஸம்பவித்தால் ஞாதிக்குப் பத்து நாள் ஆசௌசம் என்று அறியவும்.

ஞாதிகளுக்குப் பத்துநாள் ஆசௌசம் எட்டுவயதுக்கு மேல் மரணம் ஸம்பவித்த விஷயத்தால் கூறப்பட்டிருக்கிறது.

சாவா சௌசத்தில் ஸபிண்டர்கள் பத்து நாட்களால் சுத்தர்கள் ஆகிறார்கள். ஸமானோதகர்கள் மூன்று நாட்களால் சுத்தர்கள் ஆகிறார்கள். ஸஹோதரர்கள் ஸ்னானத்தால் சுத்தர்கள் ஆகிறார்கள். ஏழாவது புருஷன் வரையில் ஸபிண்டர்கள். அதற்குமேல் ஏழாவது புருஷன் வரையில் ஸமானோதகர்கள் என்று அறியவும்.

பராசரர்:- அக்னி ஹோத்ரம், வேதம், ஆசாரம் இவைகளுடன் இருக்கிற ப்ராம்மணனுக்கு ஒரு நாள் ஆசௌசம், வேதம் ஆசாரத்துடன் இருக்கிறவனுக்கு மூன்று நாள் ஆசௌசம். இவை ஒன்றுமில்லாத ப்ராம்மணன் என்பவனுக்கு பத்து நாட்கள் ஆசௌசம்.

பிறப்பினாலும், கர்மாக்களினாலும் தவறியவன், ஸந்தியா வந்தனம் ஔபாஸனம், ஆசாரம் இவைகளை விட்டவன், ப்ராம்மணன் என்று பெயரை தரிக்கிறவன்

இவர்களுக்கு பத்து நாள் ஆசௌசம் என்று பராசரர் சொல்லுகிறார். இது மனு முதலியவர்களுடைய அபிப்ராயத்தை அனுசரித்துச் சொல்லப் பட்டது என்று அறியவும். கலியுகத்தில் தீட்டு விஷயத்தில் ஸங்கோசம் கிடையாது. ஆகையால் ஆசௌசத்தை பூர்ணமாக அனுஷ்டிக்கவும்.

ஹாரீதர்:— ஞாதிகளுடைய மரணத்தில் பத்து நாள் ப்ராம்மணனுக்கு ஆசௌசம் நிச்சயம். வேறு வசனங்களைக் கொண்டு ப்ரகாராந்தரங்களை அனுஷ்டிக்கக் கூடாது. கலியில் வர்ஜிக்கவேண்டும். அப்படி செய்தால் பாபம் ஸம்பவிக்கும்.

ப்ரம்மசாரீ, மாதா, பிதாக்களைத் தவிர மற்றவர்களுக்கு தஹனம் முதல் ஸபிண்டீகரணம் வரையில் உள்ள கர்மாக்களைச் செய்யக்கூடாது. செய்தால் ப்ராயசித்தம் செய்து புனருபனயனம் செய்து கொள்ள வேண்டும்.

### 11. ஸ்வீக்ருத புத்ர விஷயத்தில் ஆசௌசம்.

மனு:— தத்த புத்ரன், ஜனகனுடைய கோத்ரம், தனம் இவைகளை அடைவதில்லை. கோத்ரம் தனம் இவைகளை அனுசரித்த பிண்ட தானமும் நிவ்ருத்தி அடைகிறது என்று அறியவும்.

வேறு கோத்ரத்தை அடைந்த தத்த புத்ரனுக்கு ஜனகனுடைய தனம், ஆசௌசம், ஞாதித்தன்மை இவைகள் நிவிர்த்தியாகிறது. சேர்ந்த இடத்தில் ஞாதித்வம், தனம், ஆசௌசம் இவைகள் பூர்ணமாக உண்டு என்று அறியவும்.

தத்த புத்ரனுக்கு பரிமேத்ருத்வம், ஆசௌளம், தனம், ச்ரௌத தர்மம், ஸ்மார்த்த தர்மம், இவைகளை ஸ்வீகரித்தவனின் குலத்தை அனுசரித்து க்ரஹிக்க வேண்டியது என்று அறியவும்.

தத்தன், ஔரஸன், க்ருத்திமன் இவர்கள் மாத்ரு பித்ரு கர்மாக்கள் செய்யும்பொழுது மத்தியில் தர்சம் வந்தால் பிண்டம் உதக தானம் இவைகள் தொடர்ந்து நடக்கும். மற்றவர்கள் செய்தால் அமாவாஸ்யை நடுவில் வந்தால் அன்று முடிக்கவேண்டும் என்று அறியவும்.

மாதா பிதாக்களுக்கு ஔரஸ புத்ரன் கர்மா செய்யும் பொழுது வேறு குலத்தில் பிரவேசித்த தத்தனுக்கும் மூன்று நாள் ஆசௌசம். அதேமாதிரி தத்தன் மரணத்திலும் ஜனகன் விஷயத்தில் மூன்று நாள் ஆசௌசம் என்று அறியவும்.

ஜனக பிதாவுக்கு புத்ரன், பௌத்ரன், பிள்ளை இவர்கள் இல்லையேயானால் தத்த புத்ரன் ஜனக பிதாவுக்கு தஹனம் முதல் எல்லா கார்யங்களையும் செய்து ப்ரதி வருஷம் பார்வண ச்ரார்த்தமும் செய்ய வேண்டும் என்று சொல்லப்படுகிறது. ஜனக பிதாவினு டைய தஹனமும் தத்தனைச் சேரும், என்பது கருத்து.

ஜ்யேஷ்ட புத்ரனை ஸ்வீகாரம் கொடுக்கக்கூடாது. ஸ்வீகாரம் செய்து கொள்ளவும் கூடாது.

தத்தபுத்ரனுக்கு புத்ரனுடைய ஜனன மரணத்தில் முன் ஸபிண்டர்களுக்கு ஸசேல ஸ்னான மாத்ரம் ஸம்பவிக்கும். ஆசௌசம் கிடையாது.

## 12. மூன்று நாள் ஆசௌசம்.

பிருஹஸ்பதி:— மாதா மஹன், ஆசார்யன், ச்ரோத்ரியன் இவர்களின் மரணத்தில் மூன்று நாள் ஆசௌசம். ஞாதி இல்லாத உபநயனம் செய்வித்தவனும் ஆசார்யனாவான் என்பது கருத்து.

மாதாவின் ஸஹோதரீ, மாதுலன், மாமியார், மாமனார், குருரித்விக், யாஜ்யன் இவர்களுடைய மரணத்தில் மூன்று நாள் ஆசௌம்.

அங்கீரர்:— மாதாமஹன், மாதுலன், மாதாமஹீ அம்மாமி, மாமனார், மாமியார் இவர்களின் மரணத்தில் மூன்று நாள் ஆசௌசம்.

மாதாமஹன், மாதமஹீ, மாமா, அம்மாமி, தாயின் ஸஹோதரீ, பெண், பெண்ணின் பிள்ளை, அத்தை, தன் ஸஹோதரீ, ஸஹோதரீயின் பிள்ளை, மாமனார், மாமியார், இந்த பன்னிரெண்டு பேர் களுடைய மரணத்தில் இவர்களுடைய ப்ரதியோகிக்கு மூன்று நாள் ஆசௌசம். உபநயனம், விவாஹம், முதலிய ஸமஸ்காரத்துடன் கூடிய ஸமானோதகர்கள் ஜனன மரண விஷயத்திலும் ஞாதிகளின் குழந்தைகள் மூன்று வயதுக்குப் பிறகு உபநயனம் வரையிலும் மூன்று நாள் ஆசௌசம். தனது பெண் ப்ரஸவித்தால் தனக்கும் மனைவிக்கும், பிள்ளைக்கும் மூன்று நாள் ஆசௌசம் என்று அறியவும்.

மூன்று நாள் தீட்டை அனுஷ்டிக்கிறவன் தன்னைக் காட்டிலும் மரித்தவர்கள் வயது முதிர்ந்தவரானால் வபனம் செய்து கொள்ளவேண்டும்.

மாமனார், மாமியார் இறப்பதற்கு முன்பு பத்னி இறந்து போனால் பிறகு மரித்த மாமனார், மாமியார் விஷயத்தில் தனக்கு ஸந்ததி இருக்குமேயானால் மூன்று நாள் தீட்டு, வபனம் இவைகள் உண்டு. ஸந்ததி இல்லாவிடில் ஒரு நாள் ஆசௌசம் மட்டும் உண்டு என்று அறியவும்.

ஸஹோதரன், அவனுடைய புத்ரன், ஸபத்னீ மாதா, ஸஹோதரியின் புத்ரன், இவர்களுக்கு உபநயனம் ஆகி பிறகு மரணம் ஏற்பட்டால் ஸ்திரீகளுக்கு மட்டும் மூன்று நாள் ஆசௌசம், பர்தாவினுடைய ஆசௌசம் ஸ்திரீகளுக்கு ஸம்பவிக்கும் என்று முன்பு சொல்லப்பட்டிருக்கிறது.

## 13. பக்ஷிணீ ஆசௌசம்.

தாயாரின் பகினீ , பெண் பிள்ளைகள், தகப்பனாரின் ஸஹோதரனுடைய பெண், பகினியினுடைய பெண், அத்தை, ப்ராதாவின் புத்ரீ, பெண்ணின் புத்ரீ, புத்ரனுடைய புத்ரீ இவர்கள் இறந்தால் இவர்களுக்கு ப்ரதியோகியான ஸ்திரீ புருஷர்களுக்குப் பக்ஷிணீ ஆசௌசம் என்று அறியவும். 90 நாழிகை தீட்டு என்பார்கள். ஒரு இரவுமுன் பின் உள்ள பகலுடன் கூடியது, பக்ஷிணீ என்பதாகும் என்று அறியவும்.

யோநி ஸம்பந்த விஷயத்தில் பக்ஷிணீ ஆசௌசம் என்று அறியவும். இதற்கு அதிக்ராந்தம் கிடையாது. ஜனனத்திலும் பக்ஷிணீ ஆசௌசம் கிடையாது.

யோநி ஸம்பந்த விஷயத்தில் கௌதமர் முதலிய மஹரிஷிகளால் பக்ஷிணீ ஆசௌசம் சொன்னபடியால்

மாத்ரு பகினீ பர்தாவினுடைய மரணத்தில் பக்ஷிணீ ஆசௌசம் கிடையாது. ஸ்னானம் மட்டும் உண்டு. இதே மாதிரி மாத்ரு பகினீ புத்ரன் விஷயத்தில் அவனுடைய பத்னீ மரணத்தில் பக்ஷிணீ ஆசௌசம் கிடையாது என்று அறியவும்.

பர்த்தாவுக்கு எந்தெந்த ஆசௌசம் வருமோ அது பத்னீக்கும் உண்டு. ஆனால் பத்தினியினுடைய ஆசௌசம் புருஷனுக்குக் கிடையாது.

பிதாவின் ஸஹோதரர், அவருடைய புத்ரன், பெண், அத்தை, அவளுடைய புத்ரன், பெண், மாமா அவனுடைய புத்ரன், பெண், சிறிய தாயார், பெரிய தாயார், அவர்களுடைய புத்ரன், பெண், மாதாமஹர், மாதாமஹீ, ஸஹோதரீ, அவளுடைய பெண், புத்ரன் ஸஹோதரனின் பெண், புத்ரனின் பெண், பிதாவின் தாயார், தகப்பனார், புத்ரியினுடைய பெண் ஆக 21 (இருபத்தியொன்று) பேர்கள் மரணத்தில் ப்ரதியோகியான ஸ்திரீகளுக்கு பக்ஷிணீ ஆசௌசம் என்று அறியவும். இது அவள் பர்தாவுக்குக் கிடையாது.

## 14. ஒரு நாள் தீட்டு

ஸபத்னீ மாதாவினுடைய ஸஹோதரன்,ஸஹோதரீ பெண் இவர்களும் இவர்களுடைய. பெண், பிள்ளைகள், மைத்துனன், ஸபத்னீ மாதாவின் தாய் தந்தை, தகப்பனாருடைய ஸபத்னீ மாதாவின் பிள்ளை, அவளுடைய பிள்ளை இவர்களின் பெண்கள், பின்னி பித்ருவ்யனின் ஸஹோதரீ, அவளுடைய பெண், பிள்ளை ஆக 17 பேர்கள் மரணத்தில் ப்ரதியோகியான

புருஷர்களுக்கு ஒரு நாள் ஆசௌசம் என்று அறியவும்.

ஸபத்னீ மாதாவின் ஸஹோதரன், ஸஹோதரீ, அவளுடைய புத்ரன், பெண், இவர்களுடைய பெண், பிள்ளைகள், ஸபத்னீ மாதாவின் தாய், தந்தை, தகப்பனாரின் ஸபத்னீ மாதாவின் பிள்ளை, அவளுடைய புத்ரன், புத்ரீ இவ்விதம் 20 பேர்கள் மரணத்தில் ப்ரதியோகியான ஸ்திரீகளுக்கு ஒரு நாள் தீட்டு என்று அறியவும். இது அவளுடைய பர்தாவுக்குக் கிடையாது.

**15. அனேக ஆசௌசங்கள் சேர்ந்தால் ஆசௌச கர்மம்.**

பராசரர்:— ஒருவன் பத்து நாள் ஆசௌத்தை அனுஷ்டித்துக்கொண்டிருக்கும் பொழுது வேறு ஆசௌசம் வந்தால் முன்பு ஆரம்பித்து அனுஷ்டிக்கும் ஆசௌசத்துடன் மத்தியில் ஆரம்பித்த ஆசௌசமும் முடிந்து போகும். அது ஜனன மரணா சௌசங்கள் என்ற விபாகம் இல்லாமல் முன் பத்து நாள் தீட்டுடன் சேர்ந்து நிவிர்த்தியாகும் என்று அறியவும்.

தேவலர்:— பத்து தினங்களில் ஆசௌசம் அனுஷ்டித்துக் கொண்டிருக்கும்பொழுது நடுவில் வந்த ஆசௌசமும் முந்திய ஆசௌசத்தோடு நிவிருத்தி ஆகும். 10வது நாளில் வந்த ஆசௌசத்தை அனுஷ்டித்து நிவிருத்தி அடைகிறது. பத்தாவது தினத்தில் இரவில் கடைசீ யாமத்தில் வந்த இரண்டாவது ஆசௌசம் பிறகு மூன்று நாள் அனுஷ்டித்து நிவிருத்தி அடைகிறது. இந்த விதியானது தசராத்ர ஆசௌசத்தைப் பற்றியது என்று அறியவும்.

அங்கிரர்:— ஜனனா சௌசத்தின் நடுவில் மரணா சௌசம் வந்தாலும் மரணா சௌசத்தின் நடுவில்

ஜனனா சௌசம் வந்தாலும் மரணா சௌசத்தை அனுசரித்து சுத்தி ஏற்படுகிறது. ஜனனா சௌசத்தில் வந்த மரணாசௌசம். எந்த தினத்தில் ஆரம்பித்ததோ அதிலிருந்து பத்து நாள் ஸம்பூர்ண ஆசௌசத்தை அனுஷ்டிக்கவேண்டும் என்று கருத்து. ஜனனா சௌசம் மரணா சௌசத்தோடு நிவிருத்தியாகும் என்று அறியவும்.

அல்பமான ஆசௌசத்தில் தீர்க்கமான ஆசௌசம் சேர்ந்தால் அல்பா சௌசத்தோடு தீர்க்கமான ஆசௌசத்தின் நிவிருத்தி ஏற்படாது. தீர்க்கமான ஆசௌசத்தை பூர்ணமாக அனுஷ்டிக்கவேண்டும். பிறகு சுத்தி என்று அறியவும்.

வ்யாஸர்:— மூன்று நாள் உள்ள மரணா சௌசத்தில் பத்து நாள் அனுஷ்டிக்கவேண்டிய ஜனனா சௌசம் வந்தால் மரணா சௌசத்தாலேயே சுத்தி ஏற்படுகிறது என்று யமன் கூறுகிறார்.

சங்க:— மாதாவானவள் முதலில் இறந்து அந்த ஆசௌசத்தின் நடுவில் பிதா இறந்தால் பித்ரா சௌசத் துடன் சுத்தி ஏற்படுகிறது. பிதாவின் ஆசௌசத்தின் மத்தியில் மாதாவின் ஆசௌசம் ஸம்பவித்தால் பிதாவினுடைய ஆசௌசத்திற்குப் பிறகு பக்ஷிணீ காலம் ஆசௌசம் அனுஷ்டிக்கவேண்டும் என்று அறியவும்.

முன்பு ஏற்பட்டாலும், பின்பு ஏற்பட்டாலும் மாதா பிதாக்களின் ஆசௌசம் வேறு ஆசௌசத் துடன் நிவிர்த்தியாகாது என்று அறியவும்.

அங்கிரர்:— ஒருவருக்கு தஹனம் முதற்கொண்டு ஸம்ஸ்காரம் செய்தவன் பத்து நாள் தீட்டுக் காத்துக்

கொண்டிருக்கும் பொழுது மத்தியில் ஒருவருக்கு தஹன ஸமஸ்காரம் செய்தால் முன் ஆசௌசத்துடன் இந்த ஆசௌசமும் நிவிருத்தியாகும். ஆனால் மாதா பிதாக்கள் விஷயத்தில் மரண திவஸத்திலிருந்து பத்து நாள் பூர்ணமாக அனுஷ்டிக்கவேண்டும். மற்ற ஆசௌசத்தால் இது நிவிருத்தியாகாது.

ஆசௌசத்தை அனுஷ்டிக்கும்பொழுது ப்ரஸவித்த சிசுவின் தகப்பன், தஹனம் செய்தவன், இவர்களுக்கு முன் ஆசௌசத்தினால் பின் ஆசௌசம் நிவிருத்தி யாகாது. பூர்ணமாக ஆசௌசத்தை அனுஷ்டிக்கவேண்டும் என்று அறியவும்.

ப்ரஜாபதி:— வேறு ஆசௌசத்தை அனுஷ்டித்துக் கொண்டிருக்கும் பொழுது தனக்கு புத்ர ஜனனம் ஏற்பட்டால் ஜாதகர்மா செய்யவேண்டியிருப்பதால் உடனே சுத்தி ஏற்படுகிறது. பிறகு முன் ஆசௌசத் துடன் ஜனனா சௌசம் நிவிருத்தியாகும்.

மாதா பிதா மரணா சௌசத்தின் மத்தியில் பத்னீ ப்ரஸவித்தால், பித்ரு மரணா சௌசத்துடன் ஜனனா சௌசம் நிவிருத்தியாகும். பத்னிக்கு சொல்லப்பட்ட காலத்தினால் சுத்தி ஏற்படுகிறது.

### 16. காலம் கடந்த ஆசௌசம்.

மனு:— பத்து நாளுக்குப் பிறகு மரணத்தை கேட்டால் மூன்று நாள் ஆசௌசம். ஒரு வருஷமான பிறகு கேட்டால் ஸ்னானத்தினால் சுத்தி ஏற்படுகிறது.

சங்க:— தசராத்ரா சௌசத்தைப் பத்து நாள் ஆன பிறகு கேட்டால் மூன்று நாள் ஆசௌசம். ஒரு வருஷம்

ஆன பிறகு கேட்டால், ஸ்னானம் செய்தால் சுத்தி ஏற்படும்.

விருத்த வசிஷ்டர்:— பத்து நாள் ஆசௌசத்தை பத்து நாட்களுக்குப் பிறகு மூன்று மாதம் வரையில் கேட்டால் மூன்று நாள் ஆசௌசத்தை அனுஷ்டிக்க வேண்டும். பிறகு ஆறு மாதம் வரையில் கேட்டால் பக்ஷிணீ அனுஷ்டிக்கவும். பிறகு ஒன்பது மாதம் வரையில் ஒரு நாள் ஆசௌசம் அனுஷ்டிக்கவும். பிறகு கேட்டால் ஸ்னானம் செய்யவும்.

மூன்று நாள் ஆசௌசத்தை மூன்று நாளுக்கு மேல் பத்து நாளுக்குள் கேட்டால் ஒரு நாள் ஆசௌசம் என்று அறியவும். பக்ஷிணீ தீட்டை பக்ஷிணிக்கு மேல் பத்து நாட்களுக்குள் கேட்டால் ஒரு காலம், பகலில் கேட்டால் பகல் மட்டும், இரவில் கேட்டால் இரவில் மட்டும் ஆசௌசம் என்று அறியவும். ஒரு நாள் ஆசௌசத்தை பிறகு கேட்டால் ஸ்னானம் மட்டும் என்று அறியவும்.

பர்த்தாவின் மரணத்தைப் பத்து நாளுக்குப் பிறகு எப்பொழுது கேட்டாலும், பத்னீ பத்து நாள் ஆசௌசத்தை அனுஷ்டிக்கவும். "புத்ரன் பார்யை இரண்டுபேரும் பத்து நாள் ஆசௌசம் அனுஷ்டிக்க வேண்டும்." என்ற வசனம் இதற்கு ப்ரமாணமாகும்.

அனுபநீத மரணத்தில் மாதா பிதாக்களுக்கு அதிக்ராந்தா சௌசம் உண்டு. மற்ற ஞாதிகளுக்கு அதிக்ராந்தா சௌசம் கிடையாது. ஜனனா சௌசத்தில் அதி க்ராந்தம் கிடையாது. பிதாவுக்கு மட்டும் ஸ்னானம் உண்டு என்று அறியவும்.

பராசரர்:— வேறு தேசங்களில் உள்ள ஞாதிகளின் மரணத்தைக் கேட்டால் ஒரு நாள், மூன்று நாள், என்று ஆசௌசம் கிடையாது. ஸ்னானத்தால் மட்டும் சுத்தி ஏற்படுகிறது.

பிருஹஸ்பதி:— மஹா நதி நடுவில் இருந்தாலும், மலை மத்தியத்தில் இருந்தாலும், பாஷை வேறுபட்டாலும் தேசாந்தரம் என்று கூறப்படுகிறது.

முக்ய கர்த்தாவான புத்ரன் வேறு தேசத்திலிருந்து மாதா பிதா மரணத்தை கேட்டால் ஒரு வருஷமானாலும் ப்ரேத க்ரியை அவசியம் செய்யவேண்டும். ஒரு வருஷத்திற்குள் ஸபத்னீ மாதா மரணத்தைக் கேட்டால் உதகதானம் முதலிய ப்ரேத க்ரியை செய்யவேண்டும். வருஷத்திற்கு மேல் கேட்டால் மூன்று நாள் ஆசௌசம் அனுஷ்டிக்கவும்.

## 17. ஜனன மரணங்களில் நாள் நிர்ணயம்.

ஸூதகம் முதலியதில் இரவை பாதியாக வகுத்துக் கொண்டு, முன் பாதியில் ஸூதகாதிகள் ஏற்பட்டால் முதல் நாளை சேர்ந்தது என்றும், பின் பாதியில் ஸூதகம் முதலியவை ஏற்பட்டால் மறு நாளைச் சேர்ந்தது என்றும் கல்பம் தெரிவிக்கப் படுகிறது. இரவை மூன்றாக வகுத்துக் கொண்டு, முன் இரண்டு அம்சங்களில் ஸூதகம் முதலியது ஏற்பட்டால் முதல் நாளைச் சேர்ந்தது என்றும், மூன்றாவது அம்சத்தில் பின் ராத்திரியில் ஸூதகம், மரணம், ரஜஸ் இவைகள் ஏற்பட்டால் மறு நாளைச் சேர்ந்தது என்றும் கூறப்படுகிறது. ஒரு அம்சத்திற்கு பத்து நாழிகை

என்று அறியவும். அதில் முன் ஸந்த்யை மூன்றே முக்கால் நாழிகையும் பின் ஸந்த்யை மூன்றே முக்கால் நாழிகையையும் விட்டு இரவுக்கு த்ரியாமா என்று சொல்லப்படுகிறது. அதில் முன் ஸந்த்யைச் சேர்த்து 18 3/4 நாழிகை முதல் நாளைச் சேர்ந்தது என்று அறியவும்.

ஸூர்யோதயமான பிறகு ரஜஸ், ஜனனம், மரணம் இவைகள் ஸம்பவித்தாலும், அன்று இரவு ஸம்பவித்தாலும் அன்றைய தினத்தைச் சேர்ந்தது. மறுநாள் ஸூர்யோதய பர்யந்தம் என்று அறியவும். இது ஒரு கல்பம். ஆக மூன்று கல்பங்களில் எதைக் குலாசார க்ரமமாக தெரிவிக்கிறார்களோ அதை க்ரஹித்துக் கொள்ளவும்.

ஆசௌசமுள்ளவனுடன் போஜனம், பானம், இது முதலியவைகளை வர்ஜிக்க வேண்டும். அப்படிச் செய்தால் ஆசௌசமில்லாதவனுக்கும் அசுத்தி ஏற்படும் என்று அறியவும்.

சவம் க்ராமத்தில் இருந்தாலும், வீட்டில் இருந்தாலும், நித்யம், நைமித்திகம், காம்யம் என்ற கர்மாக்களைச் செய்யக்கூடாது.

நானூறுக்குமேல் ப்ராம்மணர்கள் இருக்கும் கிராமத்தில், கிராமமத்தியில் சவமிருந்தால் தோஷ மில்லை. கர்மாக்கள் செய்யலாம். சந்து நடுவில் இருந்தாலும், மார்க்கத்தினால் பிளவுபட்டு இருந்தா லும், வேறு தெருவில் சவம் இருந்தாலும் ஹரி பூஜை செய்யலாம், கர்மாக்கள் செய்யலாம்.

முனிகள், ஸன்யாஸிகள், யோகத்தால் வேறு சரீரம் ப்ரவேசிக்கும் ஸித்தர்கள் இவர்கள் மரணத்தில் அந்த: சவ தோஷம் கிடையாது என்று அறியவும்.

## 18. ஆசௌச ஸங்க்ரஹம்

1. பத்துநாள் தீட்டு:–

1. தசராத்ரஞாதியின் ஜனன மரணத்தில் பத்து நாட்கள் தீட்டுக் காக்கவேண்டும்.

2. பிறந்து பத்து நாட்களுக்குப் பிறகு புருஷப்ரஜை இறந்தாலும் விவாஹமாகும் வரையில் ஸ்திரீப்ரஜை இறந்தாலும், தாயார், தகப்பனார், ஸகோதரன், பின்ன ஸகோதரன் இவர்களுக்குப் பத்துநாள் தீட்டு உண்டு.

3. ஏழு வயதுக்குள் உபநயனம் ஆகி இருந்தாலும், ஏழு வயதுக்குமேல் உபநயனம் ஆகாமல் இருந்தாலும் ஞாதிகளுக்குப் பத்துநாள் ஆசௌசம் என்று அறியவும்.

2. புருஷர்களுக்கு மூன்றுநாள் தீட்டு.

1. மாதாமஹர், 2.மாதாமஹீ, 3.மாமா, 4.அம்மாமி, 5.மாமனார், 6.மாமியார், 7.தாயாரின் ஸகோதரி, 8.தகப்பனாரின் ஸகோதரி, 9.உபநீதனான மருமான், 10.உபநீதனான தௌஹித்ரன், 11.உபநீதனான ஸமானோதகன், 12.விவாஹமான பெண், 13.விவாஹமான ஸகோதரி, 14.ஜனகபிதா, 15,ஜனக மாதா, 16.ஸ்வீகாரம் கொடுத்த புத்ரன், 17.24வது மாதத்திற்கு மேல் ஏழு வயது ஆரம்பத்திற்குள் உபநயனமாகாத

ஞாதியினுடைய குழந்தை, 18.ஏழு வயது முதல் விவாஹம் வரையில் மூன்று தலைமுறைக்குட்பட்ட ஞாதியின் பெண், 19.25வது மாதத்திற்குள் சௌளமாகிய ஞாதியின் புத்ரன், இவர்கள் மரணத்தில் மூன்று நாள் ஆசௌசம்.

ஸமானோதகருக்கு, ஏழு வயதிற்குள் உபநயனமான ஸமானோதக பாலன், உபநயனமாகாவிடினும் ஏழாவது வயது முதல் ஸமானோதக பாலன் இவர்களின் மரணத்தில் மூன்றுநாள் ஆசௌசம், ஸமானோதக ஜனனத்திலும் மூன்று நாள் ஆசௌசம்.

3. புருஷர்களுக்கு பக்ஷிண்யா சௌசம்:—

1.அத்தையின் பெண், 2.அம்மானுடைய பிள்ளை, பெண், 3.மாத்ரு பகினியின் பிள்ளை, பெண், 4.ஸஹோதரியின் பெண், 5.பித்ருவ்யனின் பெண், 6.புத்ரனின் பெண், 7. பெண்ணின் பெண், 8. தௌஹித்ரன், 9.ஏழுவயதுக்குள் உபநயனமாகாத மருமான், இவர்களின் மரணத்தில் ஒன்றரை நாள் தீட்டு என்று அறியவும்.

4.புருஷர்களுக்கு ஒருநாள் ஆசௌசம்:—

1.ஸபத்னீ மாதாவின் ஸஹோதரன், ஸஹோதரி, பெண், 2.மேற்படி மூவரின் பெண், பிள்ளை, 3.பத்னியின் ஸஹோதரன், 4.பின்னோதர பித்ருவ்யனின் பெண், 5.பின்னோதர ப்ராதவின் பெண், 6.பிதாவின் பின்னோதர பகினீ, 7.மேற்படியாரின் பெண், பிள்ளை, 8.ஸபத்னீமாதாவின் மாதா, பிதா, 9.25வது

மாதம் முதல் 6வது வயது முடியும் வரையில் விவாஹமில்லாத மூன்று தலைமுறைக்குட்பட்ட ஞாதியின் பெண், 10.ஜனகப்ராதா, 11.ஜனகஸபிண்டன், 12.பத்னீ, ஸந்ததி இல்லாவிடில் மாமனார், மாமியார், 13.ஆறு மாதத்திற்கு மேல் 25வது மாதத்திற்குள் பட்ட சௌள மாகாத ஞாதியினுடைய பாலன், இவர்களுடைய மரணத்தில் ஒரு நாள் தீட்டு.

5.ஸ்தீரீகளுக்கு மூன்றுநாள் ஆசௌசம்:—

1.உபநீதனான ஸஹோதரன், 2.உபநீதனான மருமான், 3.உபநீதனான பகினீ புத்ரன், 4.ஸபத்னீ மாதா இவர்கள் மரணத்தில் மூன்று நாள் ஆசௌசம்.

6.ஸ்திரீகளுக்குப் பக்ஷிணீ ஆசௌசம்:—

1.பிதாவின் ப்ராதா, 2.மாதாவின் பகினீ, 3.மாதுலன், 4.பிதாவின் பகினீ, 5.மேற்படி நால்வரின் பெண், பிள்ளை, 6.பிதாமஹர், 7.பிதாமஹீ, 8.மாத மஹன், மாதாமஹீ, 9.ஸஹோதரீ, 10.மேற் படியாரின் பெண், 11.மருமான், இவர்கள் மரணத்தில் 1 1/2 நாள் ஆசௌசம்.

7. ஸ்திரீகளுக்கு ஒரு நாள் ஆசௌசம்:—

1.ஸபத்னீ மாதாவின் புத்ரன், புத்ரீ, ஸஹோதரன், ஸஹோதரர், 2.மேற்படி நால்வரின் பெண், பிள்ளை, 3.பின்னோதர பித்ருவ்யன், 4.பின்னோதர பித்ரு பகினீ, 5.மேற்படியார் இருவரின் பெண், பிள்ளை, 6.ஸபத்னீ மாதாவின் பிதா, மாதா, இவர்கள் மரணத்தில் ஒரு நாள் ஆசௌசம்.

ஸ்திரீகளுக்குச் சொல்லப்பட்ட தீட்டு பர்த்தாவுக்குக் கிடையாது. இவைகளில் சொல்லப் பட்ட ப்ரதியோகிகள் உபநயனமாகிய புருஷரும், விவாஹமாகிய பெண்களுமாகும்.

ஸம்க்ஷேப தர்ம சாஸ்திரத்தில் ஆசௌச தர்ம ப்ரகரணம் முற்றிற்று.

## ஸம்க்ஷேப தர்ம சாஸ்திரத்தில் ச்ராத்த ப்ரகரணம்.

### 1. மரணத்தை அடையப்போகிறவன்,ப்ராயச்சித்தம் செய்யும் முறை

யாஞ்யவல்க்யர்:— ஸ்நானம் செய்தபிறகு வைதிகமான ஸகல கர்மாக்களுக்கும் அதிகாரம் ஏற்படுகிறது. இறக்கும் சமயத்தில் வியாதி முதலிய காரணத்தாலும் தேசகாலம் இடமளிக்காததாலும், ஸ்நானத்திற்கு பிரதிநிதியான கௌண ஸ்நானங்களை (மாந்த்ரம் ஆக்னேயம்) தன் சக்திக்குத் தகுந்தவாறு அனுஷ்டிக்கவேண்டும். இவைகள் ஆஹ்னிக ப்ரகரணத்தில் விஸ்தாரமாகச் சொல்லப்பட்டிருக்கின்றன.

ஸ்நானம் செய்த பிறகு தன் குலாச்சாரப்படி ஊர்த்வ புண்ட்ரம் தரித்துக் கொண்டு பிராயச்சித்தம் ஆரம்பிக்கவேண்டும். ஊர்த்தவ புண்ட்ரம் தரித்தவன் எங்கு மரணமடைந்தாலும் பதிதனாக இருந்தாலும் விஷ்ணுலோகத்தில் ப்ரகாசிப்பான் என்று ஊர்த்வ புண்ட்ரத்தின் பெருமை கூறப்படுகிறது.

விபூதி—ருத்ராக்ஷம் தரித்தவன் யாராக இருந்தாலும் இறந்த பிறகு பரமேச்வரனுடைய ஸாரூப்யம் ஏற்படுகிறது. ஆகையால் இறக்கும்பொழுது அவைகளை தரிக்க வேண்டும். இது சாதாரண ப்ராணிக்குச் சொல்லப்பட்டது. விவேகமுள்ள மனிதர்கள் தரித்துக்கொண்டால் விசேஷ புண்யம் ஏற்படும் என்பது கருத்து.

பிறகு பகவானுடைய பாதோதகத்தை ப்ராசனம் செய்யவேண்டும். துளஸீதளத்துடன் கூடிய கங்காஜலம் ஒரு கடுகு ப்ரமாணம் சாப்பிட்டால் குலத்தின் இருபத்

தோரு தலைமுறை ஜீவர்களை பாபத்திலிருந்து காப்பாற்றுகிறது.

பராசரர்:— பிராயச்சித்தம் முதலிய காரியங்களை தன்னால் செய்யமுடியாவிட்டால் வேறு பிராமணர் களை செய்யச் சொல்லலாம். ரோகம் அசக்தி, துர்பிக்ஷம், ராஜாக்களுடைய சண்டை முதலியதான உபத்ரவம், இந்த மாதிரி சமயத்தில் உபவாஸம் இருப்பதே வ்ரதமாகும், ஹோமமாகும். பிராமணர் களால் செய்யப்பட்ட கார்யங்களும் கர்த்தா செய்தது போல் ஆகும் என்று அறியவும்.

பிராமணர்கள் நடமாடும் தீர்த்தமாவார்கள், ஸாதுக்கள் புண்ய தீர்த்தங்கள். அவர்களுடைய வாக்கியமாகிற ஜலமானது பாபிகளுடைய பாபத்தை போக்கடிக்கிறது.

பிராமணர்கள் எதை பேசுகிறார்களோ அதை தேவதைகள் அங்கீகரிக்கிறார்கள். ஏனென்றால் பிராமணன் ஸர்வ வேத ஸ்வரூபியாவான். அவனு டைய சொல் வேத வசனமாகக் கருதப்படுகிறது.

முமுர்க்ஷுவானவன் பூமியில் தர்ப்பத்தைப்போட்டுக் கொண்டு அதில் படுக்கவேண்டும். அந்த சமயத்தில் அவனால் க்ருச்சரங்களையும் அனுஷ்டிக்கமுடியாது. ஆகையால் பிரதிநிதியான தானங்களைச் செய்ய வேண்டும். கோ தானம் முக்கியமாகச் சொல்லப் படுகிறது.

எவன் மரண காலத்தில் நிறைய பால் கறக்கும் பசுவை தானம் செய்கிறானோ அவன் பசுவினால்

காண்பித்த வழியில் ப்ரம்ம லோகத்தை அடைகிறான்.

மரண சமயத்தில் தனக்கு ப்ரக்ஞை தவறிவிட்டாலும், மரணம் ஸம்பவித்தாலும், கர்தாவான புத்ரன், அல்லது பந்துக்கள் மரணத்தை அடைந்தவனுடைய க்ஷேமத்தை உத்தேசித்து தானங்கள் செய்யவேண்டும் என்று வ்யாஸர் கூறுகிறார்.

மஹா பாதகங்களைச் செய்தவனாக இருந்தாலும் நவவிதமான பாபங்களைச் செய்தவனாக இருந்தாலும் மஹான்கள் அவனைப் பார்த்தால் பாபம் விலகிவிடும். ஆகையால் மரண சமயத்தில் ஸாதுக்களின் தரிசனம் முக்யம் என்று கருத்து.

எந்த விதத்திலாவது கோவிந்த என்று சொன்னாலும், கேட்டாலும், பாபிகள் பாபத்திலிருந்து விடுபடுவார்கள். பாபமில்லாத மஹான்கள் கோவிந்த சப்தத்தைச் சொன்னாலும் கேட்டாலும் மோக்ஷத்தை அடைவார்கள்.

எவன் மரண சமயத்தில் சிவ சிவ சிவ என்று மூன்று தடவை உச்சரித்து சரீரத்தை விடுகிறானோ அவனுக்கு முதல் சிவ சப்தமே ஸகல பாபத்திலிருந்து விடுவித்து மோக்ஷத்தை அளிக்கிறது. பிறகு சொன்ன இரண்டு சிவ நாமாக்களுக்கு செய்யவேண்டிய காரியமி ல்லை. பக்தர்களுக்கு சொல்வதில் ஏற்பட்ட ஆனந்தானுபவம்தான் மிச்சம் என்று அறியவும்.

விஷ்ணு— மரண சமயத்தில் புத்ரன் வலது காதில் புண்ய ஸூக்தங்களையும், மந்திரங்களையும், பகவன் நாமாக்களையும், கர்ண மந்திரங்களையும் சொல்லி கேட்கச் செய்யவேண்டும்.

வசிஷ்டர்– பிதாவினுடைய தனது மரண சமயத்தில் புத்ரன் பிதாவின் தலையைத் வலது துடையில் வைத்துக் கொண்டு வலது காதில் புண்ய மந்திரங் களையும், அஷ்டாக்ஷரம், பஞ்சாக்ஷரம், ராமஷடா க்ஷரம் முதலிய மந்திரங்களையும் உச்சரித்துக் கொண்டு இருக்க வேண்டும். இது பிதாவுக்குச் செய்யும் புத்ரனு டைய காரியமாகும். சரீரத்தை விட்டு பிராணன் போன பிறகு பூமியில் குசத்தைப் பரப்பி அதில் பிதா சரீரத்தைப் போடவேண்டும்.

2. மரண காலத்தில் தானம் செய்யும் முறை.

ஹே தர்மபுத்ர, மனுஷ்ய லோகத்திற்கும் யம லோகத்திற்கும் நடுவில் 86 ஆயிரம் யோஜனை செல்லவேண்டி மார்கம் இருக்கிறது. ஒரு யோஜனை என்பது எட்டு அல்லது பத்து மைல்கள் கொண்டது. இதில் செல்வது கடினமானது, வெய்யில் கடுமையாக இருக்கும். மர நிழல் கிடையாது. குளம், ஓடைகள், கிணறுகள் கிடையாது. கிராமம் இல்லை. தங்குவதற்கு வீடு முதலியதும் இல்லை. வழிகள் முட்கள், கல்கள் நிறைந்திருக்கும். கொதிக்கும் மணல். இவ்வளவு சிரமமான மார்கத்தைக் கடந்து யம லோகம் செல்ல வேண்டும். ஆகையால் அதற்கு முடிந்த அளவில் தானம் செய்யவேண்டும். இவைகளை கர்த்தாக்களான புத்ரன் முதலியவர்கள் செய்யவேண்டும். அதனால் மரணமடைந்த ஜீவர்கள் சிரமமில்லாமல் யமலோகத்தை அடைவார்கள் என்று சாஸ்திரம் கூறுகிறது.

ப்ரசேதர்– பசு, பூமி, எள், தங்கம், நெய், வஸ்திரம், தான்யம், வெல்லம், வெள்ளி, உப்பு, இவைகள் தச

தானத்தின் பதார்த்தங்கள். இவைகளை மரண காலத்திலும் ஜனன காலத்திலும் அவசியம் தானம் செய்யவேண்டும். மரண காலத்தில் செய்வது பரலோகத்தில் க்ஷேமத்தைக் கொடுக்கும். ஜனன காலத்தில் செய்வது குழந்தைக்கு ஆயுஸ் முதலிய க்ஷேமங்களைக் கொடுக்கும் என்று அறியவும்.

வெளியூர் செல்லுகிறவனுக்கு வித்யை சிநேஹிதன், க்ருஹத்தில் இருப்பவனுக்கு பத்னீ சிநேஹிதன், வியாதி உள்ளவனுக்கு வைத்யர் சிநேஹிதன், மரணம் அடைகிறவனுக்கு தானம் சிநேஹிதன். அதாவது சிநேஹிதன் மாதிரி விசேஷமான உபகாரத்தைச் செய்து சௌக்யத்தை உண்டு பண்ணும் என்று கருத்து.

### 3. பர்யுஷித ப்ராயச்சித்தம்.

கார்க்யர்:— பகலில் இறந்தால் 25 நாழிகைக்குள் தஹனம் செய்யவேண்டும். அப்படிச் செய்தால் பர்யுஷித (பழையது ஆன) தோஷம் ஏற்படாது. 25 நாழிகைக்கு மேல் பகலில் அல்லது இரவில் ஸம்ஸ்காரம் செய்யவில்லையேயானால் சவம் பர்யுஷிதம் ஆகிவிடும். அதை தஹனம் செய்வதற்கு கர்த்தா பிராம்மணர்களிடத்தில் அனுமதியைப் பெற்றுக்கொண்டு மூன்று க்ருச்ரம் அனுஷ்டித்து பஞ்ச கவ்யத்தால் சவத்திற்கு ஸ்னானம் செய்வித்து பவமான மந்திரத்தினால் ஜபித்த ஜலத்தை ப்ரோக்ஷித்து ஸ்னானம் செய்வித்து பிறகு தஹனம் செய்யவேண்டும். இந்த மாதிரி செய்யாவிடில் காரியம் பலனற்றதாக ஆகும் என்று அறியவும்.

போதாயனர்:— பகலில் இறந்தால் பகலில் ஸ்ம்ஸ்காரம் செய்யவும். இரவில் இறந்தால் 9 நாழி கைக்குள் (இரவு 9 3/4 மணிக்குள்) தஹனம் செய்யவும். இரவில் 9 நாழிகைக்கு மேல் தஹனம் செய்யக்கூடாது என்பது கருத்து.

விடியற் காலையில் ப்ரம்ம முகூர்த்தத்திற்கு முன்பு மரணம் ஏற்பட்டு காலையில் தஹனம் செய்தால் பர்யுஷித ப்ராயச்சித்தம் செய்யவேண்டும். இதற்கு வைகானஸரால் சொல்லப்பட்ட ப்ராயச்சித்தம் செய்ய வும். ஆகையால் பகலில் மரித்தால் பகலில் தஹனம், இரவில் மரித்தால் 9 நாழிகைக்குள் தஹனம் செய்ய வேண்டும். பகலில் மரித்தவனுக்கு இரவிலும், இரவில் மரித்தவனுக்கு பகலிலும் தஹனம் செய்தால் பர்யுஷித ப்ராயச்சித்தம் செய்யவேண்டும் என்று கருத்து.

கும்ப, மீன ராசியில் சந்திரன் இருக்கும்பொழுது மரணம் ஸம்பவித்தால் மரணத்தை அடைந்தவனுக்கு ஸத்கதி ஏற்படும். மற்றவர்களுக்கும் பந்துக்களுக்கும் சிரமம் ஏற்படும். ஆகையால் அவிட்டம், சதயம், பூரட்டாதி, உத்திரட்டாதி, ரேவதி இந்த நக்ஷத்திரங் களில் மரணம் ஏற்பட்டால் தனிஷ்டா சாந்தி செய்ய வேண்டும்.

தக்ஷிணாயனம், க்ருஷ்ணபக்ஷம், ராத்ரி, ஊர்த்வோச் சிஷ்டம், (வாந்தி முதலிய காலத்தில் மரணம் ஏற்படுவது) அதோச்சிஷ்டம் (மல மூத்ராதி காலத்தில் மரணம் ஏற்படுவது) கட்வாதி மரணம் இவைகளில் ஒவ்வொன் றுக்கும் க்ருச்ரம் தத்தம் செய்து, தக்ஷிணை கொடுத்து, ப்ராயச்சித்த ஹோமம் செய்து தஹனம் செய்ய வேண்டும்.

ப்ராஜாபத்ய க்ருச்சரத்திற்கு ஒரு பசுவும், ஸாந்தபன க்ருச்சரத்திற்கு இரண்டு பசுக்களும், பராக க்ருச்ர, தப்த க்ருச்ர, அதிக்ருச்ரங்களுக்கு ஒவ்வொன்று க்கும் மூன்று பசுக்களும், சாந்திராயணத்திற்கு எட்டு பசுக்களும் அல்லது மூன்று பசுக்களும் சக்தியை அனுசரித்து ப்ரதிநிதியாக (பதிலாக) சொல்லப்பட்டி ருக்கிறது.

### 4.கர்த்தாக்களுடைய வரிசை.

ஆயிரம் க்ரஹண புண்ய காலங்களும், பதினாயிரம் வ்யதீ பாதங்களும், லக்ஷம் அமாவாஸ்யா புண்ய காலங்களும் ஒரு த்வாதசியின் 16ல் ஒரு பாகமாகாது. இவ்விதமான த்வாதசியின் 3 1/2 கோடிகள் மாதா, பிதாக்களின் மரணதினத்தின் 16ல் ஒரு பாகமாவதற்கு சமானமாக ஆகாது. ஆகையால் மாதா, பிதாக்களின் மரண திதி சிறந்த புண்ய காலம். அதில் ச்ரத்தையு டன் கர்மாக்களை செய்யவேண்டும் என்பது கருத்து.

ஸுமந்து:— மரணமடைந்த மாதா பிதாக்களுக்கு ஔரஸ புத்ரன் ஆதரவுடன் பித்ருமேத ஸம்ஸ்காரத்தை மந்திரத்துடன் செய்யவேண்டும்.

ஜமதக்னி:— புத்ரன், பிதாவுக்கு பிண்டதானம், உதகதானம் இவைகளைச் செய்யவேண்டும். அவன் (புத்திரனானவன்) அசக்தனாகில் அக்னி ப்ரதானம் மாத்திரம் செய்து மற்ற காரியங்களை வேறு ஒருவனால் செய்யச் சொல்லவேண்டும்.

ஸஹோதரர்கள் அநேகர்கள் இருந்தாலும் ஜ்யேஷ்ட புத்ரன் மட்டும் நவச்ராத்தம், ஸபிண்டீகரணம், ஷோடச ச்ராத்தங்கள் இவைகளைச் செய்யவேண்டும். சொத்துக்களை பிரித்துக் கொண்டாலும் மூத்தவனுக்குத் தான் அதிகாரம் என்று அறியவும். மூத்த புத்திரன் சமீபத்தில் இல்லாவிடில் இருக்கிற ஸஹோதரர்களுக்குள் எவன் பெரியவனோ அவன் தஹனம் முதலிய காரியங்களைச் செய்யவேண்டும்.

அநேக பத்னிகள் உள்ள க்ருஹஸ்தன் விஷயத்தில் எல்லோருக்கும் புத்ரர்கள் இருந்தால் அவர்களுக்குள் எவன் ஜ்யேஷ்டனோ அவன் பிதாவுக்கு ஸம்ஸ்காரம் செயயவேண்டும். இந்த இடத்தில் மூத்தவள் இளையவள் என்பது விஷயமாகாது. ஆனால் ஸ்திரீகளுக்கு அவளுடைய புத்ரன் தான் ஸம்ஸ்காரம் செய்யவேண்டும் என்று அறியவும். இரட்டையாக பிறந்த புத்ரர்கள் விஷயத்தில் பின்பு பிறந்தவன் ஜ்யேஷ்டன், முதலில் பிறந்தவன் கநிஷ்டன் ஆவான். தத்த புத்ரன் தன் ஜனக பிதாவுக்கு (கர்மா செய்ய) புத்ர, பௌத்ர, ப்ரபௌத்ரர்கள் இல்லையேயானால் (ஜனக பிதாவுக்கு) அவசியம் பித்ருமேத ஸம்ஸ்காரம் செய்யவேண்டும். புத்ர ஸ்வீகாரம் செய்துகொண்ட பிறகு தனக்கு ஔரஸ புத்ரன் பிறந்தால் அவன்தான் பிதாவுக்கு முக்கிய கர்த்தாவாகக் கருதப்படுகிறான்.

மனு:— கர்ப தீக்ஷை உள்ளவன் வபனம், தஹனம் இவைகளை மற்றவர்களுக்குச் செய்யகூடாது. மாதா, பிதாக்களுக்கோவென்றால் அவசியம் (கர்மா) செய்ய வேண்டும்.

கர்ப தீக்ஷை உள்ளவன் புத்ரனில்லாத தன் தமையனுக்கும், மாமாவுக்கும் க்ருத்யம் செய்யலாம்.

ப்ருகு:– மாதாமஹன், மாதுலன், புத்ரனில்லாத மாதாமஹீ, அம்மாமி இவர்களுக்கு ப்ரம்மசாரி கர்மா செய்யலாம். அது ப்ரம்மசர்ய வ்ரதத்தைக் கெடுக்காது. மற்றவர்களுக்கு கர்மா செய்யக்கூடாது என்று அறியவும். உபநயனம் ஆகாமல் இருந்தாலும், மந்திரம் சொல்லி மாதா, பிதாக்களுக்கு கர்மா செய்யவேண்டும்.

உபநயனமாகாதவன் மந்திரம் சொல்ல சக்தி இல்லாவிடில் தஹனம் மட்டும் மந்திரம் சொல்லி செய்து விட்டு, சமீபத்தில் உள்ள மற்றவர்களால், தர்பம் கொடுத்து அனுமதித்து கர்மாக்களை செய்யச் சொல்லவேண்டும்.

யாகத்தில் தீக்ஷை பெற்றுக்கொண்ட யஜமானனுடைய மாதா, பிதாக்களுக்கு மரணம் ஸம்பவித்தால், அவன் ஒரே புத்ரனாக இருந்தால், மாதா பிதாக்களுக்கு ஸம்ஸ்காரம் செய்து பிறகு யாக சாலையை அடைந்து யாகத்தின் பாக்கியை ச்ரத்தையுடன் முடிக்கவேண்டும். விவாஹமத்தியில் பிதா, மாதாக்களுடைய மரணம் நேர்ந்தால் தில பிண்ட தானம் செய்யவும். தஹனத்தையும் செய்யவும்; மற்ற ச்ரார்தங்களை, (நவ ச்ராத்தங்கள் முதலியவைகளைச்) செய்யக்கூடாது.

மரீசி:– இறந்தவனுக்கு க்ருத்யம் செய்ய கர்த்ரு க்ரமம் சொல்லப்படுகிறது. புத்ரன், பௌத்ரன், அவனுடைய புத்ரன் (ப்ரபௌத்ரன்), தௌஹித்ரன் (பெண்

னுடைய பிள்ளை) பத்னீ ஸஹோதரன், ஸஹோதரனின் புத்ரன், பிதா, மாதா, நாட்டுப் பெண், ஸஹோதரீ, ஸஹோதரீ புத்ரன் (மருமான்) தாயாதீ, பணத்தைப் பெறுகிறவன், இவர்கள் கர்த்தாக்கள். முந்தியவன் இல்லாவிடில் பிந்தியவன் அதிகாரியாவான் என்று அறியவும். புத்ரிகாபுத்ரன் என்பது த்வ்யாமுஷ்யாயணன் என்று கூடச் சொல்லப்படுகிறது. அதாவது, பெண்ணைக் கல்யாணம் செய்து கொடுக்கும் பொழுது இவருக்குப் பிறக்கும் பிள்ளை எனக்கும் தர்ம காரியங் களுக்கு புத்ரன் மாதிரி ஸம்பந்தம் உண்டு என்று ஸங்கல்பம் செய்து கொடுப்பதாகும். இந்த விஷயம் கலியில் ப்ரசாரம் இல்லை. ஆகையால் தௌஹித்ரனை புத்ரிகா புத்ரன் என்று க்ரஹிப்பது சிலாக்கியமாகும். "த்வ்யா முஷ்யாணனுக்கு" இரண்டு கோத்ரமும் உண்டு என்று அறியவும்.

மனு:— லோகத்தில் புத்ரனுக்கும் தௌஹித்ரனுக்கும் பேதமில்லை. ஆகையால் புத்ரன் இல்லாத மாதா மஹனுடைய சொத்துக்கு அதிகாரியாகிறான். ஆகை யால் தௌஹித்ரன் பிதாவுக்கும் மாதா மஹனுக்கும் கர்மாக்களுக்கு முக்கிய அதிகாரியாகக் கருதவேண்டும் என்று மனு சொல்லுகிறார்.

மாதா மஹனுக்கு சொத்து இல்லாவிட்டாலும் தௌஹித்ரன் கர்மாக்களை அவசியம் செய்ய வேண்டும்.

தௌஹித்ரனைக் காட்டிலும் பத்னிக்கு ஸம்ஸ்காரம் செய்யும் விஷயத்தில் ப்ரதான்யம் சொல்லப்படுகிறது. பிதாவுக்கு புத்ரன் ஸம்ஸ்காரம் செய்யவேண்டும்.

அவனில்லாத பக்ஷத்தில் பத்னி ஸம்ஸ்காரம் செய்ய வேண்டும். பிறகு தௌஹித்ரன், பிறகு ஸஹோதரன், பிறகு ஸஹோதரனின் பிள்ளை என்று ஸங்கிரஹத்தில் கர்த்ருக்ரமம் சொல்லப்படுகிறது.

புத்ரனில்லாத பத்னி இறந்தால் கணவன் பத்னிக்கு க்ருத்யம் செய்யவேண்டும். தௌஹித்ரன் இருந்தால் அவனை செய்யச் சொல்லலாம். ஒருவனுக்கு அநேக பத்னிகள் இருந்தால் ஒரு பத்னிக்கு புத்ரன் இருந்தால் அவனே எல்லா பத்னிக்களுக்கும் புத்ரனாக ஆகிறான். அவன் எல்லோருக்கும் ஸம்ஸ்காரம் செய்யலாம் என்று அறியவும்.

### 5. அக்னி நிர்ணயம்.

ஆஹிதாக்னியை மூன்று அக்னிகளாலும், அநாஹிதாக்னியை ஔபாஸனாக்னியாலும், லௌகிகாக்னியினால் மற்றவர்களையும் ஸம்ஸ்காரம் செய்யவேண்டும்.

வஸிஷ்டர்:— பத்னீகளுக்கு முன்பு இறந்த அனாஹிதாக்னியான க்ருஹஸ்தனுக்கு ஔபாஸனாக்னியினால் ஸம்ஸ்காரம் செய்யவேண்டும்.

பத்னி இறந்தபின் இறந்த க்ருஹஸ்தனுக்கு உத்தபனாக்னியினால் ஸம்ஸ்காரம் செய்யவேண்டும். பதிக்குப் பிறகு இறந்த பத்தினிக்கும் பதியைப்போல் உத்தபனாக்னியில் ஸம்ஸ்காரம் செய்யவும். பர்த்தா இறந்து தஹனமாகிய பின் அஸ்தி ஸஞ்சயனத்திற்கு முன்பு பத்னி இறந்தால் பர்த்தாவினுடைய சிதையில்

அக்னி அணையாமல் இருக்குமேயானால் அதில் பத்னியையும் தஹனம் செய்யவும். அக்னி அணைந்தால் தனி சிதை ஏற்பாடு செய்யவேண்டும்.

ஜமதக்னி:— லௌகிகாக்னியில் தர்ப்ப முஷ்டியைக் கொளுத்தி, அதில் மற்றொரு தர்ப்ப முஷ்டியைக் கொளுத்தி, அதில் மற்றொரு தர்ப்ப முஷ்டியைக் கொளுத்தினால் மூன்றாவது அக்னி உத்தபனம் எனப்படுகிறது. கபாலத்தை அக்னியில் வைத்து காய்ச்சி அதை உமியின் மேல் வைத்து அந்த உமியினால் தர்ப்பத்தில் உண்டான அக்னி கபாலக்னி எனக் கருதப்படுகிறது.

கபாலத்தில் உண்டானது கபாலாக்னி என்றும், துஷத்தில் (உமியில்) உண்டானது துஷாக்னி என்றும், மூன்றாவது தர்ப முஷ்டியில் க்ரஹிக்கப்பட்ட அக்னி யானது உத்தபனாக்னி என்றும் சொல்லப்படுகிறது. விதுரன், விதவை இவர்களுக்கும், உத்தபனாக்னியினால் ஸம்ஸ்காரம் செய்யவும். ப்ரம்மசாரிக்குக் கபாலாக்னி யினால் ஸம்ஸ்காரம் செய்யவும், அனுபநீதன், கன்னிகை இவர்களுக்கு துஷாக்னியினால் ஸம்ஸ்காரம் செய்யவும். கணவன் ஸன்யாஸம் செய்துகொண்ட பிறகு, கண வனுக்கு முன் பத்னீ இறந்தால் புத்ரன் ஔபாஸனா க்னியினால் தஹனம் செய்யவேண்டும்.

அங்கீரர்:— தன்னுடைய ஸூத்ரத்தில் கர்மா செய்யமுடியாவிடில், வேறு ஸூத்ரத்தால் கர்மாவை செய்யலாம். போதாயன ஸூத்ரத்தால் கர்மாவை அனுஷ்டித்தால் ஸ்வ ஸூத்ரத்தால் அனுஷ்டித்த பலன் கிடைக்கும்.

## 6. உபவீதமாக இருக்கவேண்டியது முதலிய நியமங்கள்.

ஸ்நானம், ஆசமனம், ப்ராணாயாமம், நமஸ்காரம், ப்ரக்ஷிணம் முதலியவைகளில், பித்ரு காரியங்களிலும் கூட உபவீதமாக பூணலை தரித்துக்கொண்டு செய்ய வேண்டும்.

பாரத்வாஜர்:— ப்ரேத கர்மாவினுடைய ஆரம்பத்திலும் முடிவிலும் ஆசமனம் செய்யவேண்டும். எல்லா கர்மாக்களிலும்கூட கர்மா ஸபலமாவதற்கும் அவசியம் ஆசமனம் செய்யவேண்டும். ஆந்த்ர சுத்யர்த்தம் ப்ராணாயாமங்கள் செய்யவேண்டும்.

ப்ரேத கர்மாவிலும், பித்ரு ச்ராத்தம் முதலிய காரியங்களிலும் பூணலை இடமாக (ப்ராசீனாவீதி) தரித்துக்கொள்ளவும். பிணங்களை வஹிக்கும் பொழுது பூணலை மாலையாக (நிவீதீ) தரித்துக் கொள்ளவேண்டும். இது சவத்தைத் தூக்குகிறவர்களுக்கு சொல்லப்பட்ட நியமமாகும்.

ஆவாஹனம், அர்க்யம், ஸங்கல்பம், பிண்டதானம், திலோதக தானம், அக்ஷயம், ஆஸனம், பாத்யம், இந்த காரியங்களில் அவசியம் நாம கோத்ரங்களைச் சொல்லவும்.

## 7. ப்ரேதத்தை எடுத்துச் செல்லும் முறை

மனு:— ருக்வேதியானவன் துண்டித்த வஸ்த்திரத்தினால் சவத்தை மூடவேண்டும். யஜுர் வேதியானவன்

துண்டிக்காத வஸ்திரத்தினால் சவத்தை மூட வேண்டும்.

ப்ரசேதர்:— ப்ரேதத்தை புத்ரன் ஸ்னானம் செய்வித்து, வஸ்திரம் முதலியவைகளால் பூஜித்து, சந்தனம் பூசி, மாலைகளால் அலங்கரிக்கவும். ஆஹிதாக்னியாக இருந்தால் ப்ரேதத்திற்கு க்ஷௌரம் செய்ய வேண்டும். அநாஹிதாக்னியான சவத்திற்கு க்ஷௌரம் கிடையாது.

வஸிஷ்டர்:— அத்திக் கட்டையாலாகிய ஆஸந்தியில் மேல்நோக்கிய முகமாக சவத்தை வஹிக்கவும், க்ராமாபி முகமாயும், கீழ்நோக்கியதுமாய் வஹிக்கக்கூடாது. தெற்கில் சிரசுள்ளதாய் வஹிக்கவும்.

வயது முதிர்ந்தவர்கள் ப்ரேதத்தினுடைய முன்பு செல்லவேண்டும், ஸ்திரீகளும் சிறுவர்களும் பின் செல்லவேண்டும். எல்லோரும் உத்தரீயத்தை கீழே தரித்துக் கொண்டு தலைமயிரை விரித்துக் கொண்டவர்களாக பந்துக்கள் பின் செல்லவேண்டும். அக்னிக்கும் ப்ரேதத்திற்கும் நடுவில் போகக்கூடாது.

முதலில் அக்னி, பிறகு ஸம்பாரங்கள், எள், அரிசி, சரு, பலாச சாகை, ஹிரண்ய சகலங்கள், நெய் பாத்ரங்கள், கல் மணல், இவைகளை அனுப்பி, பிறகு ப்ரேதத்தை எடுத்துச் செல்லவும். க்ராமத்தை நோக்கியதாக ப்ரேதத்தை எடுத்துச் செல்லக்கூடாது.

**8.தஹனம் செய்யும் முறை.**

வ்யாக்ரபாதர்:— கீழ்நோக்கிய முகத்துடனும், வஸ்திர

மில்லாமலும், அழுக்குடன் கூடியதாயும், சவத்தை தஹிக்கக்கூடாது. யாகத்திற்கு அர்ஹமில்லாதவையும், பதிதர்களால் கொண்டு வரப்பட்டதாயும், பூச்சி, புழு முதலியதால் கெடுக்கப்பட்டதாயும், வெகு நாளாகி மக்கிப்போனதாயும் உள்ள கட்டைகளால் தஹனம் செய்யக்கூடாது. சவத்தின் பாதி வஸ்த்திரத்தை எரித்து விட்டு பாதி வஸ்திரத்தை சவத்திற்குக் கட்டவேண்டும்.

ஆபஸ்தம்பர்:- பிறகு சவத்தை சிதையின் மேல்வைக்கவும். இந்திரியஸ்தானங்களில் ஸ்வர்ணத்துண்டுகளை யாவது ஆஜ்ய சொட்டுக்களையாவது சேர்க்க வேண்டும்.

போதாயனர்:- தயிர், நெய், எள், அரிசி இவைகளை ப்ரேதத்தின் வாயில் போடவேண்டும்.

வஸிஷ்டர்:- சவத்தின்மேல் அக்னியைப் போடக் கூடாது. வேதத்தில் சவத்தை ஆஹுதி த்ரவ்யமாய் சொல்லியிருப்பதால் ஆஹுதி த்ரவ்யத்தின்மேல் அக்னியை போடுவதானால் அந்த கர்மா பலனற்றதாகும். ஆகையால் சிதையில் நேராக அக்னியைப் போடவேண்டும். உபஸ்தான மந்திரம் சொல்லி பிறகு பாக்கி உள்ள அக்னியை சிதையில் போடவும்.

சிதையை எல்லாப் புறங்களிலும் கொளுத்தவும். ப்ரேதன் ப்ரம்ம லோகத்தை ஜயித்தான் என்று அறியவும்.

சவத்தை தஹனம் செய்தபிறகு வஸ்த்திரத்தை சோதனம் செய்து கொண்டு ஸ்னானம் செய்யவும்,

பிறகு ஸசேல ஸ்நானம் செய்து சுத்தனாகிறான். சுத்தமனதுள்ளவனாக ஆகிறான் என்பது கருத்து.

ச்மசானத்திற்குப் போகும் பொழுது கனிஷ்டன் முன்பு செல்லவேண்டும். க்ருஹத்திற்கு வரும்பொழுது மூத்தவன் முன்பு செல்லவேண்டும்.

உசானர்:— இறந்தவனை பின் தொடர்ந்து சென்றாலும் க்ஞாதிகளை அனுசரித்தாலும், ஸ்னானம் செய்து நெய் சாப்பிட்டு மறுபடியும் ஸ்னானம் செய்ய வேண்டும். நெய் கிடைக்காவிடில் பத்து தடவை காயத்ரீ உச்சரித்து ஜலம் சாப்பிடவும். ஒரு நாள் ஜப ஹோமங்களைச் செய்யக்கூடாது.

9. க்ஷௌரம் செய்து கொள்ளும் முறை.

வபனம் செய்துகொள்ளாமல் ப்ரேத கர்மாவை செய்யக்கூடாது. உதக தானம், பிண்ட தானம், ச்ராத்தம் இவைகளையு ம் வபனம் செய்து கொள்ளாமல் செய்தால் நிஷ்பலமாகும் என்று அறியவும்.

தஹனம் செய்வதற்கு முன்பு க்ஷௌரம் செய்து கொண்டால் பித்ருக்களை ஹிம்ஸித்தவனாவான். ஆகையால் சவத்தை தஹனம் செய்துவிட்டுப் பிறகு வபனம் செய்து கொள்ளவேண்டும். தஹனம் செய்த கர்த்தாவுக்கு உடனே வபனம் விதிக்கப்பட்டிருக்கிறது. க்ஞாதிகளுக்குப் பத்தாவது நாளில் சுத்யர்த்தமான வபனம் உண்டு என்று அறியவும்.

ப்ராதாவாயினும், ப்ராத்ரு புத்ரனாயினும்,

ஸபிண்டனாயினும், சிஷ்யனாயினும், வயதில் சிறியவன் தஹனம் செய்தால் அவசியம் வபனம் செய்து கொள்ளவேண்டும். ராத்திரியில் தஹனம் ஸம்பவித்தால் உதக தானம் அப்பொழுதே செய்துவிட்டு மறுநாள் வபனம் செய்து கொள்ளவும். ராத்ரியில் வபனம் செய்து கொள்ளக்கூடாது என்று அறியவும்.

மாதா, பிதா ம்ருதி விஷயத்தில் வெள்ளிக் கிழமையாக இருந்தாலும், பத்தாவது நாளிலும், ராத்ரியில் தஹனம் ஏற்பட்டாலும், அக்காலத்திலேயே வபனம், பிண்டோதக தானம் இவைகளைச் செய்ய வேண்டும். மற்றவர்கள் விஷயத்தில் மறுநாள் வபனம் செய்து கொள்ளவும். நிஷேதங்கள் மாதா, பிதா, ஸம்ஸ்காரத்தில் தடையாக இராது என்று அறியவும். மாதா, பிதாக்களின் விஷயத்திலும் இரவில் இரண்டு யாமங்களுக்குப் பிறகு வபனம் கூடாது, என்பது சாஸ்திரம் கூறுகிறது. ஆகையால் ராத்ரியில் வபனம் இரண்டு யாமங்களுக்குள் புத்ரனுக்கு உண்டு என்று கருத்து. இறந்தவன் சிறியவனாக இருந்தால் வயதில் பெரியவர்களான க்ஞாதிக்கு வபனம் கிடையாது.

மாதாமஹன், மாதாமஹீ, பித்ருவ்யன், மாதுலன், ஜ்யேஷ்டன், மாமனார், ஆசார்யன் இவர்களின் பத்னீ, பித்ரு பகினீ, மாத்ரு பகினீ, பகினீ இவர்களுக்கு ஸம்ஸ்காரம் செய்தால் செய்கிற கர்த்தா கர்பினீ பதி யானாலும், க்ஷௌரம் உண்டு. கர்த்தாவா இல்லா விடில் இவர்கள் மரணத்தில் கர்பினீ பதிக்கு வபனம் கிடையாது என்று அறியவும். வயதான க்ஞாதிகள், மாமனார், மாமியார், ஜ்யேஷ்ட பகினீ, அவளுடைய பர்த்தா, இவர்களின் மரணத்தில் வபனம் உண்டு.

பத்னீ முன்பு இறந்தாலும், ஸந்ததி இல்லாவிட்டாலும் மாமனார் மாமியாரின் விஷயத்தில் ஒரு நாள் ஆசௌசம், வபனம் கிடையாது.

தசம தினத்தில் சுக்ர வாரமாக இருந்தால் க்ஞாதிகள் ஒன்பதாவது தினத்தில் க்ஷௌரம் செய்துகொள்ள வேண்டும். புத்ரனுக்கு சுக்ர வாரம் தோஷமாகாது.

மாதா, பிதாக்களுக்கு 12வது நாளில் ஸபிண்டீகரணம் செய்தால் வபனம் செய்து கொள்ள வேண்டாம். த்ரிபக்ஷம் முதலிய காலங்களில், ஸபிண்டீகரணம் செய்ய நேர்ந்தால் வபனம் செய்து கொள்ளவேண்டும்.

க்ஷௌரத்தில் ஷஷ்டீ, அஷ்டமி, ப்ரதமை, ரிக்த திதிகள் (சதுர்த்தீ, நவமி, சதுர்தசீ) இவைகளை வர்ஜிக்கவேண்டும். சந்திரன், குரு, புதன், சுக்ரன், இவர்களின் வாரம், அம்சம், உதயம், த்ருஷ்டி, இவை களும் க்ஷௌரத்திற்கு உகந்தன. சவதீட்டு க்ஷௌரம் வெள்ளிக்கிழமையில் செய்துகொள்ளக் கூடாது.

### 10. பத்தாவது நாள் முடிய செய்ய வேண்டிய காரியங்கள்.

ஈர வஸ்த்திரத்துடன் கிராமத்தை அடைந்து நக்ன ப்ரச்சாதன ச்ராத்தத்திற்கு வெண்கலப் பாத்திரம், வஸ்த்திரம், நெய், அரிசி நிரம்பிய பாத்திரம் இவைகளை ப்ராம்மணனுக்குக் கொடுக்கவும்.

புது வஸ்த்திரம், எள், தர்ப்பம், குடம், இவைகளை எடுத்துக் கொண்டு சென்று தீர்த்தத்தில் ஸ்நானம்

செய்து தீர குண்டத்தில் மந்திரம் சொல்லி பாஷாணங்களில் ப்ரேதத்தை ஆவாஹனம் செய்து, பிறகு வாஸோதகம் மூன்று, திலோதகம் மூன்று செய்து, பிறகு வீட்டில், பாஷாண ஸ்தாபனம் செய்து வாஸோதகம் மூன்று செய்து பிறகு பிண்டம், பலி இவைகளைக் கொடுக்கவேண்டும்.

விஷ்ணு:— ஆசௌசம் உள்ள வரையில் ப்ரேதத்திற்கு உதக தானம், பிண்ட தானம் இவைகளைச் செய்ய வேண்டும். திலோதகத்தை தினமும் ஞாதிகளும் கர்த்தாவும், முதல் நாளில் மூன்று, இரண்டாவது நாளில் நான்கு, மூன்றாவது நாள் ஐந்து இந்த மாதிரி பத்து தினத்தில் ஏகோத்தர வ்ருத்தியாக 75 திலோதக தானம் செய்யவேண்டும். வாஸோதகத்தில வ்ருத்தி கிடையாது. தினம் மூன்று தடவை கொடுக்கவேண்டும். வேஷ்டியை மூன்றாக மடித்துப் பிழிய வேண்டும்.

ப்ரசேதர்:— தர்ப்பங்களை தெற்கு நுனியாகப் போட்டுக் கொண்டு தானும் தெற்கு முகமாக இருந்து வாயிற்படியின் ப்ரதேசத்தில் பிண்டத்தைக் கொடுக்கவும். பிண்ட ஸந்நிதியில் மௌனியாகவும், சுத்தனாகவும் இருக்கவும். பிண்டத்தின் மீதியான அன்னத்தை நதியில் போடவேண்டும்.

ஆப்திகத்திலும், பார்வணத்திலும், விளாங்கனி, பில்வப்பழம் அளவு உள்ளதாயும், கயா ச்ராத்தத்திலும், மஹாளயத்திலும், நெல்லிக்கனி அளவு உள்ளதாயும், ஏகோத்திஷ்டத்திலும், ஸபிண்டீகரணத்திலும், தேங்காய் அளவு உள்ளதாயும், மற்ற எல்லா ச்ராத்தங்களிலும் கோழி முட்டை அளவு உள்ள்தாயும் பிண்டங்கள் இருக்க வேண்டும் என்று அறியவும்.

வஸ்த்திரம், பாஷாணம், ஜலங்கொண்டு வரும் குடம், சமைக்கும் பாத்திரம், கர்த்தா இவைகளுள் ஒன்று மாறினாலும் முன்கொடுக்கப்பட்ட உதகாஞ் சலிகளை மறுபடி கொடுக்கவேண்டும் என்று தேவல மஹர்ஷியால் சொல்லப் படுகிறது.

ஆவாஹனம் செய்து ஸ்தாபிக்கப்பட்ட பாஷாணத்தை பத்து நாள் பர்யந்தம் அசைக்கக்கூடாது. சிலை நஷ்டமாகி விட்டால் வேறு பாஷாணத்தை ஸ்தாபித்து முன் கொடுக்கப்பட்ட உதகாஞ்தலிகளை மறுபடியும் கொடுக்கவும். பாஷாணம் நகர்ந்தால் அதைத் தொட்டுகொண்டு மூன்று தடவை ப்ராணாயாமம் செய்யவேண்டும்.

ஏகோத்தர வ்ருத்தி ச்ராத்தம் என்பது எந்த தினத்தில் எவ்வளவு உதக தானங்கள் செய்யப் படுகிறதோ, அவ்வளவு ச்ரார்த்தம் ஆம ரூபத்தினால் செய்யவேண்டும்.

நவச்ரார்தங்களை 1,3,5,7,9,11 இந்த ஒற்றைப்படை நாட்களில் செய்யவேண்டும். ஆக ஆறு நவ ச்ரார்த்தங்கள் செய்யப்படுகிறது. இந்த நவ ச்ரார்த்தங்கள் சொன்ன தினத்தில் செய்யமுடியாவிட்டால் பதினோறாவது நாளில் அவசியம் செய்யவேண்டும்.

ஆபஸ்தம்பர்:— தஹனம் செய்து, பிறகு மறுநாளில் அல்லது மூன்றாவது நாள், ஐந்தாவது நாள், ஏழாவது நாள், இவைகளில் அஸ்தி ஸஞ்சயனம் செய்ய வேண்டும். இவ்விடத்தில் அஸ்தி ஸஞ்சயனம் செய்ய குறிப்பிட்ட மறுநாளிலிருந்து மூன்றாவது நாள் என்று

அறியவும் அஸ்தி ஸஞ்சயனம் பத்து நாழிகைகளுக்குள் காலையில் செய்வது சுபமாகும்.

யோகயாக்ஞவல்கியர்:— கங்கை அல்லது யமுனை, காவேரி, சதத்ருது, ஸரஸ்வதி, இந்த நதிகளில் அஸ்திகளை கர்த்தாவான புத்ரன் முறைப்படிப் போடவேண்டும். மாதா, பிதாக்கள், விஷயத்தில் அஸ்தி ஸஞ்சயனத்திற்கு நாள் பார்க்கவேண்டியது கிடையாது. மற்றவர்கள் விஷயத்தில் நாள் பார்த்து ஸஞ்சயனம் செய்யவேண்டும்.

பத்தாவது நாளில் ப்ரேதமானது பூர்ணமான அவயவங்களுடன் இருப்பதால் பெரும் பசி ஏற்படுகிறது. அதை சமனம் செய்ய பக்ஷண பணியாரங்களுடன் ப்ரபூதபலி (பெரிய பலி) போடவேண்டும். இவைகளை தசம தினத்தில் செய்யவேண்டிய உதககதான பிண்டதானங்களுக்கு முன் செய்யவேண்டும். பிண்டோதக தானமான பிறகு சிலையிலிருந்து ப்ரேதத்தை விஸர்ஜனம் செய்யவேண்டும். ஆகையால் முன்பு செய்யவேண்டும் என்று சொல்லப்பட்டது.

பத்து தினங்களுக்குள் தர்சம் வந்தால் அதற்குள் உதக தானங்கள், பிண்ட தானங்கள் எல்லாவற்றையும் முடிக்கவேண்டும். அஸ்தி ஸஞ்சயனத்தை அமாவாஸ்யைக்கு முன்பே செய்யவேண்டும். இது வேறு பந்துக்களுக்கு கர்மா செய்யும் கர்த்தாவுக்குச் சொல்லப்பட்ட நியமம் என்று அறியவும்.

புத்ரன் மாதா, பிதாக்களுக்குக் கர்மா செய்யும் பொழுது தர்சம் வந்தால் அதற்கு பிறகும் உதக

தானங்கள் முதலியவைகளைச் செய்யவும். பத்து நாட்களைக் குறைக்கக்கூடாது என்பது கருத்து. மற்றவர்கள் விஷயத்தில் இந்த நியமம் கிடையாது.

**11. கர்த்தாவின் விஷயத்தில் சில நியமங்கள்.**

ஆசௌசிகள் உப்பு, உறைப்பு, தைலம், தாம்பூலம் ஸ்திரீ சங்கம், கட்டிலில் படுப்பது இவைகளை வர்ஜிக்கவேண்டும்.

ஆஹிதாக்னி விஷயத்தில் சவாக்னி அனுகதமானால் லௌகிகாக்னியை க்ரஹித்து ப்ராயச்சித்தாஹுதி செய்து கொள்ளவும். ப்ராயச்சித்தம் இரண்டு பேர் களுக்கும் பொதுவானது.

1. கனிஷ்டனால் ஸம்ஸ்காரம் செய்யப்பட்டு உதக க்ரியையும் செய்யும் பொழுது ஸஞ்சயனத்திற்கு முன்பு அல்லது பின்பு வந்த ஜ்யேஷ்டன் முன்பு வந்தால் வபனம் செய்துகொண்டு ஸஞ்சயனம் செய்து அதீத உதக க்ரியையுடன் ஸ்வகால உதக க்ரியையையும் செய்து க்ரமமாக செய்யவேண்டிய வைகளை ஸபிண்டீகரண பர்யந்தம் செய்யவும், ஸஞ்சயனம் ஆன பிறகு வந்தால் அதீத உதக பிண்டதானங்களுடன் ஸ்வகால பிண்டோதக தானங்களையும் ஏகோத்திஷ்டத் தையும் செய்து கேட்டதிலிருந்து பத்து நாள் தீட்டுக் காத்து பிறகு ஆவ்ருத்தாத்யம் செய்து த்ரிபக்ஷ காலத்தில் ஸபிண்டீகரணம் செய்யவும்.

2. மற்றவனால் ஸம்ஸ்காரம் செய்யப்பட்டிருந்தால் புத்ரன் புனர்தஹனம் செய்து பாக்கி காரியங்களை

செய்யவும். 10 நாளில் சுத்தனாகிறான்.

3. அன்னியனால் ஸஞ்சயனம் செய்யப்பட்டிருந்தால் புனர் தஹனம் செய்யவேண்டும்.

4. புத்ரனில்லாத முக்கிய கர்த்தா ஸஞ்சயனத்திற்கு முன் வந்தாலும் புனர் தஹனம் கிடையாது. மாதா, பிதாக்கள் தவிர மற்றவர் விஷயத்தில் புனர்தஹனமே கிடையாது என்று அறியவும்.

5. அஸபிண்டனானவன் தஹனம் செய்தால் ஸஞ்சயனத்திற்கு முன் முக்கிய கர்த்தா வந்தால் தஹனம் செய்தவனுக்கு ஆசௌசமும் உதக தானமும் கிடையாது. ஸஞ்சயனத்திற்கு பின்பு வந்தால் தஹனம் செய்தவன் ஆசௌசான்னத்தைச் சாப்பிட்டால் 10 நாள் தீட்டு, உதக தானம் இவைகள் அவனுக்கும் உண்டு.

6. ஸமானோதகன், மருமான் முதலிய, மூன்று நாள் ஆசௌசிகள் ,தஹனம் செய்தால் எப்பொழுது கர்த்தா வந்தாலும் 10 நாள் ஆசௌசம் உதக தானம் இவைகள் உண்டு என்று அறியவும்.

7. முக்கிய கர்த்தா வராவிடில் ஸஞ்சயனம், உதக தானம் பிண்ட தானம் முதலியவைகளை ஆசௌசம் முடியும் வரையில் செய்து ஏகோத்திஷ்டமும் செய்யவேண்டும். செய்யாவிட்டால் தஹனம் செய்தவனுக்கு சுத்தி ஏற்படாது.

8. கனிஷ்டன் ஸம்ஸ்காரம் செய்யும்பொழுது ஜ்யேஷ்டன் 10வது நாள் வந்தால் வபனம்,

உதக, பிண்ட ப்ரபூதபலி ப்ரதானம் இவைகளை செய்து ஸர்வாங்க வபனம் செய்துகொண்டு சாந்தி ஹோமாதிகளைச் செய்து, 11வது நாளில் ஏகோத்திஷ்டம் செய்து கேட்டது முதல் 10 நாள் தீட்டு காத்து பிறகு ஆவ்ருதாத்யம், ஸபிண்டீகரணமும் செய்யவேண்டும். புத்ரனில்லாத வேறு முக்கிய கர்த்தாவானால் 11வது நாளில் சுத்தனாகிறான் என்று அறியவும்.

9. பத்து நாள் க்ருத்யம் ஆனபிறகு 11வது நாள் காலையில் புத்ரன் வந்தால் வபனமும், ஏகோத்திஷ்டமும் செய்து பத்து நாள் செய்ய வேண்டிய திலோதக ப்ரதானம் செய்யவேண்டும். பத்து நாள் க்ரியை செய்யப்படாத விஷயத்தில் பத்து நாளுக்குள் வந்தால் ச்வரணத்திலிருந்து 10நாள் உதக தானம் முதலியவைகளை செய்து 11வது நாளில் ஏகோத்திஷ்டம் செய்யவும். பிறகு த்ரிபக்ஷத்தில் ஸபிண்டீகரணம் செய்யவும். பத்தாவது நாள் இரவில் வந்தால் மறுநாளில் பத்துநாள் செய்யவேண்டிய க்ருதயங்களையும் 11நாளில் ஆத்யம் செய்யவேண்டும்.

10. அந்நியனால் தஹனம் முதலிய பத்து நாள் க்ருத்யமும் செய்யபட்டிருந்தால் 11வது நாளில் ஸஞ்சயனத்திற்கு முன் வந்த புத்ரன் புனர் தஹனம் முதல் எல்லாவற்றையும் ஏகோத் திஷ்டத்தையும் செய்து அன்று முதல் பத்து நாள் ஆசௌசம் உதக தானம் இவைகளை அனுஷ்டிக்கவேண்டும். ஸஞ்சயனத்திற்கு பின்பு வந்தால் வ்ருஷோத்ஸர்னமும், ஏகோத்திஷ்டமும்

செய்து பத்து நாள் ஆசௌசம், உதக தானம் இவைகளை அனுஷ்டிக்கவும்.

11. விதேசத்தில் உள்ள புத்ரன் தன் மாதா, பிதாக் களுக்கு அந்நியனால் அல்லது வேறு புத்ரனால் ஏகோத்திஷ்டம் முடிய செய்திருந்தால், கேட்ட பிறகு வபனம் செய்து கொண்டு பத்து நாள் ஆசௌசத்துடன் உதக தானம், ஸபிண்டீகரணம் இவைகளைச் செய்யவேண்டும். மற்றவனால் ஸபிண்டீகரணமும் செய்யப்பட்டிருந்தால் மறு படியும் ஜ்யேஷ்டன் ஸபிண்டீகரணம் பர்யந்தம் முறைப்படி செய்யவும். ஜ்யேஷ்டன் செய்திருந்தால் கனிஷ்டன் செய்யவேண்டியது கிடையாது.

12. இதனால் ஸபிண்டீகரணம் செய்யப்பட்டிருந்தால் ஜ்யேஷ்டன் சமீபத்தில் இல்லாவிடில் கனிஷ்டர் கள் சொத்து விபாகமுள்ளவர்களாக இருந்தால் தனித்தனியாக ஸபிண்டீகரணம் செய்யவேண்டும். சொத்து பொதுவாக இருந்தால் அவர்களுள் ஜ்யேஷ்டன் ஒருவன் செய்தால் போதுமானது என்று அறியவும்.

13. விதேசத்தில் உள்ள புத்ரன் ஒரு வருஷத்திற்குப் பிறகு மாதா, பிதாக்கள் மரணம் கேட்டால் பத்து நாள் ஆசௌசத்துடன் எல்லாம் செய்ய வேண்டும். ஆனால் மாஸிகங்கள் ஸோதகும்பம் இவைகள் கிடையாது. ஆப்திகம் மட்டும் அனுஷ்டித்தால் போதுமானது. வருஷத்துக்குள் கேட்டால் முன்போல் செய்து மீதியுள்ள மாஸிகங்களை அந்த அந்த மாதத்தில் செய்து

க்ரமமான திதியில் ஆப்திகம் செய்யவும். கனிஷ்ட புத்ரனானல் ஜ்யேஷ்ட புத்ரன் செய்த காரியங்களை மறுபடியும் அனுஷ்டிக்கவேண்டியது கிடையாது. மூன்று நாள் ஆசௌசம் அனுஷ்டித்து உதக தானம் செய்தால் போதுமானது.

14. ஸபத்னீ மாதாவின் ஔரஸ புத்ரன் சமீபத்தில் இல்லாவிடில் ஸபத்னீ புத்ரன் செய்யவும். நடுவில் வந்தால் பாக்கியை செய்யவும். ஸபிண்டீகரணம் செய்த பிறகு வந்தால் அதை ஔரஸ புத்ரன் மறுபடியும் செய்யவும். ஸபத்னீ மாதாவின் மரணத்தை வருஷத்திற்குள் கேட்டால் 10 நாள் ஆசௌசம், உதக தானமும் செய்யவும். பிறகு கேட்டால் ஒரு நாள் ஆசௌசம்.

15. க்ரியைகள் செய்யப்பட்ட ப்ரதாவின் மரணத்தை 6 மாதத்திற்குள் கேட்டால் மூன்று நாள் ஆசௌசம். பிறகு கேட்டால் பக்ஷிணீ. (90 நாழிகை)

16. தேசாந்தரம் சென்றவன் இருக்கிறான் இல்லை என்ற விஷயம் தெரியாவிடில் 12 வருஷம் சென்ற பிறகு உத்திரக்ரியை ப்ருதி க்ருதி தஹனத்துடன் மூன்று நாளில் (கர்மா) செய்யவேண்டும். நாராயண பலி செய்து பிறகு செய்யவேண்டும். மாதா, பிதாவானால் 15 வருஷங்கள் சென்ற பிறகு செய்யவேண்டும். ஆஷாடம், மாகம், மார்க்கசீர்ஷம், பாத்ரபதம் இந்த மாதங்களிலும் கிருஷ்ணபக்ஷத்தில், ஏகாதசீ தர்சம் இவைகளை காலமாக க்ரஹிக்கலாம். வெளியில் சென்ற திதி மாஸங்கள் தெரிந்தாலும் அவைகளை க்ரஹிக்கலாம் என்று அறியவும்.

17. ஆஹிதாக்னிகளுக்கு தஹனத்திலிருந்து பத்து நாள் ஆசௌசம், அனாஹிதாக்னிகளுக்கு மரணத்திலிருந்து பத்து நாள் ஆசௌசம் என்று அறியவும்.

18. தஹனம் செய்த கர்த்தா 10 நாட்களுக்குள் வேறு ஒருவரையும் தஹனம் செய்ய நேர்ந்தால் முந்திய ஆசௌசத்துடன் பிந்திய ஆசௌசம் போய்விடும். சுத்தி ஏற்படும் என்பதாகும். ஆனால் மாதா, பிதாக்களுக்கு தஹனம் செய்ய நேர்ந்தால் அதிலிருந்து பத்து நாள் ஆசௌசம் என்று அறியவும்.

19. மாதாவின் ஆசௌசத்தின் மத்தியில் பிதா இறந்தால் பிதாவின் மரணம் முதல் புத்ரர்களுக்குப் பத்து நாள் ஆசௌசம் பிதாவின் ஆசௌசத்தினுடைய மத்தியில் மாதா இறந்தால், பிதாவின் ஆசௌசத்திற்குப் பிறகு 90 நாழிகை (பக்ஷிணீ) ஆசௌசம் என்று அறியவும்.

20. மாதா முன்பு இறந்தால் க்ரமமாக 11வது நாளில் மாதாவுக்கு ஏகோத்திஷ்ட ச்ராத்தம் செய்ய வேண்டியது. மாத்ரு ஆசௌசத்தின் மத்தியில் இறந்த பிதாவுக்கும் பத்துநாள் செய்து 11வது நாளில் ஏகோத்திஷ்டம் செய்யவேண்டியது. பிதா முன்பு இறந்து, பிறகு மாதா இறந்தால் பிதாவின் பத்தாவது நாளில் மாதாவுக்கு உதகதானம், பிண்டதானம் முதலியவைகளை முடித்துக்கொண்டு பிதாவின் 11வது நாளில் பிதாவுக்கு ஏகோத்திஷ்ட ச்ராத்தம் செய்து

பிறகு மாதாவின் க்ரமாக வருகிற பதினோறாவது நாளில் ஆத்ய ச்ராத்தம் செய்யவேண்டும் என்று அறியவும்.

### 12. தம்பதிகள் சேர்ந்து மரணமடைந்தால் அதன் க்ரமம்.

ஹாரீதர்:— தம்பதிகளுக்கு ஒரே சமயத்தில் மரணம் ஏற்பட்டாலும், தஹனத்திற்கு முன்பு மற்ற வருக்கு மரணம் ஸம்பவித்தாலும், தஹனம் முதலிய க்ரியைகளை சேர்த்தே செய்யவும், தஹனத்தின் பிறகு ஸம்பவித்த மரணத்தில் தனித்தனியாக செய்ய வேண்டும்.

ஹிரண்ய சகலம், நக்னப்ரச்சாதன ச்ராத்தம், வாஸோதகம், திலோதகம், பிண்டம், ஏகோத்தரவ்ருத்தி ச்ராத்தம் நவச்ராத்தம் ஸோத கும்பம், வ்ருஷோத் ஸர்கம், ஷோடச ச்ராத்தம் இவைகளைத் தனித் தனியாகச் செய்யவேண்டும். சருகார்யம், சிதை, குண்டம், அஸ்தி ஸஞ்சயனம், சாந்தி ஹோமம் இவை களைச் சேர்த்து ஒன்றாகச் செய்யவும் ஏகோத் திஷ்டம் ஸபிண்டீகரணம், நிமித்வரணம் இவைகளைத் தனியாகச் செய்யவேண்டும். பாகஹோமம் விச்வே தேவர்கள் இவைகளை ஒன்றாகச் செய்யவும்.

ஸபிண்டர்களுக்கு ஒரே காலத்தில் மரணம் ஏற்பட்டால், ஸம்பந்தத்தின் ஸாமீப்யத்தைப் பார்த்து அந்த க்ரமமாய் ச்ராத்தத்தை (க்ரியையை) செய்யவும். இது ஒரே கர்த்தா செய்யவேண்டிய விஷயத்தில் என்று அறியவும்.

ஹாரீதர்:— ஸங்காத மரணத்தில் புத்ரன் மாதா, பிதாக்களுக்கு 12வது நாளில் ஸபிண்டீகரணம் செய்யவும். மற்றவர்களுக்கு த்ரிபக்ஷத்தில் செய்யவும். இதுவும் ஒரே கர்த்தா என்ற விஷயத்தில் என்று அறியவும்.

### 13. கர்பிணீயின் ஸம்ஸ்காரம்.

போதாயனர்:— கர்பிணீ மரித்தால் அவளை ச்மசானத்திற்கு கொண்டு சேர்த்து, தஹனஸ்தலத்தை கல்பித்து, சிதைக்கு மேற்கில் ப்ரேதத்தின் வயிற்றை இடது பாகத்தில் கீறவும் "ஹிரண்ய கர்ப்ப:" என்ற மந்திரத்தால் கீறியதால் காணப்பட்ட சிசுவை "ஜீவது மம புத்ரோ தீர்க்காயுத்வாய" என்று மந்திரம் சொல்லி சிசு ஜீவித்திருந்தால் அதற்கு ஸ்னானம் செய்வித்து பால் கொடுத்து க்ராமத்திற்கு கொண்டு வரவும். பிறகு வயிற்றில் ஆஜ்யாஹுதி செய்து சில மந்திரங்கள் சொல்லி ஊசியினால் தைத்து பிறகு ப்ரேதத்தை சிதையில் ஏற்றி முறைப்படி தஹனம் செய்யவும். பசுக்களைத் தானம் செய்யவும்.

### 14. பதினோறாவது நாளில் வ்ருஷப உத்ஸர்ஜனம்

வ்யாஸர்:— பதினோறாவது நாளில் ஜீவனுக்கு ஸ்வர்க்க ப்ராப்தியை உத்தேசித்து வ்ருஷபத்தை ருத்ர ப்ரீதயர்த்தமாக த்யாகம் செய்து பிறகு ச்ராத்தத்தில் ப்ராம்மணர்களை போஜனம் செய்விக்கவேண்டும்.

விஞானேச்வரர்:— 11வது நாளில் எவனுக்கு வ்ருஷப உத்ஸர்ஜன கர்மா செய்யப்படவில்லையோ

அவனுக்கு ஏற்பட்ட பிசாசத்வம் நீங்குவதில்லை. 100 ச்ராத்தங்கள் செய்தாலும் பிரயோஜனமில்லை. ஆகையால் வ்ருஷபோத்ஸர்ஜனம் முக்கியம் என்று கருத்து.

பதினோறாவது நாளில் ஏகோத்திஷ்ட ச்ராத்தம் அவசியம் செய்யவேண்டும். செய்யாவிடில் மறுபடியும் ஸம்ஸ்காரம் செய்ய நேரிடும்.

11வது நாளில் ப்ராம்மணன் கிடைக்காவிடில், நெய்யுடன்கூடிய பாயஸான்னத்தை கையால் கபள ப்ரமாணமாக எடுத்து "யமயாயஸோமம்" என்ற மந்திரத்தைச் சொல்லி 32 ஆஹுதிகளைச் செய்ய வேண்டும். கர்த்தா மௌனமாக இருந்துகொண்டு தெற்கு நோக்கிய முகத்துடன் ஹோமம் செய்யவும். இப்படி செய்தால் ச்ராத்தம் ஸபலமாக ஆகிவிட்டது, ஸந்தேஹம் வேண்டாம் என்பது கருத்து.

கௌதமர்:— ஆத்ய ச்ராத்தத்தில் ப்ராம்மணனை போஜனம் செய்விக்கவேண்டும். அக்னியிலாவது ஹோமம் செய்யவும். மறுபடி ப்ராம்மணனை போஜனம் செய்விக்கவேண்டும். இதில் இரண்டு தடவை ஆவ்ருத்தி ஏற்பட வேண்டும்.

ஆத்ய ச்ராத்தத்தை ப்ராம்மணனிடத்தில் அல்லது அக்னியில் செய்யவும். மறுபடி ப்ராம்மணனிடத்தில் செய்யவும்.

**15. 16 ச்ராத்தங்கள்.**

ஷோடசம் முதலிய எல்லாவற்றையும் 11வது நாளில் செய்யலாம். 12வது நாளில் ஸபிண்டீகரணத்தையும் செய்யவேண்டும்.

கௌதமர்:— தேச காலங்கள் அனுகூலமில்லாத காரணத்தாலும் மரணம் ரோகம் முதலிய ஸந்தேஹத்தாலும் 16 ச்ராத்தங்களையும் அபகர்ஷித்து 11வது நாளில் செய்யவும்.

ஷோடச ச்ராத்தங்கள் சொல்லப்படுகின்றன. 11வது நாளில் ஆத்யம், முதல் மாதம் ஊனமாக இருக்கும்பொழுது ஊன மாஸிகம், த்ரிபக்ஷத்தில் த்ரைபக்ஷிகம், பிறகு ஊனஷான் மாஸிகம் (6வது மாதம் ஊனமாக இருக்கும் பொழுது) ஒவ்வொரு மாஸத்திலும் மரணமடைந்த திதியில் வரும் மாஸிகங்கள், வருஷ முடிவில் வருஷம் ஊனமாக இருக்கும் பொழுது ஊனாப்தம் ஆக 16 மாஸிகங்கள் என்று அறியவும்.

12வது நாளில் ஸபிண்டீகரணம் செய்தால் முதல் நாளில் (11வது நாளில்) 16 மாஸிகங்களையும் அபகர்ஷித்து ஏகோத்திஷ்டமாய்ச் செய்யவேண்டும். ஒரு பிண்டத்தைக் கொடுக்கவும். மாஸிகங்களை ஸபிண்டீகரணத்திற்கு முன் செய்யும்பொழுது பிண்டதானம் தனித்தனியாக செய்யவேண்டும். அக்னியில் ப்ரேதாஹுதி ஒரே தடவை, 15 தடவை அவதானம் செய்து ஒரே ப்ரேதாஹுதியைச் செய்யவேண்டும். ஸபிண்டீகரணம் ஆன பிறகு அந்த அந்த காலங்களில் மாஸிகச்ராத்தங்களை அவசியம் செய்யவேண்டும். ஷோடச ச்ராத்தங்களை ப்ராம்மணர்கள் கிடைக்காவிடில் ஆமரூபமாகவும் செய்யலாம்.

மூன்று அல்லது இரண்டு, ஒன்று ஊனமான (குறைவான) நாளில் மாஸிகங்கள் ஊன மாஸிகம்

செய்யவேண்டும். இதே மாதிரி ஊனாப்திகமும் என்று அறியவும். 27வது நாளுக்கு மேல் மூன்று நாட்களில் ஊனமாஸிகமும், 40 தினங்களுக்குமேல் ஐந்து தினங்களில் த்ரைபக்ஷிகமும்,170 தினங்களுக்கு மேல் 10 தினங்களில் ஊனஷான் மாஸிகமும், 340 தினங்களுக்கு மேல் 15 தினங்களில் ஊனாப்திகம், திதியில் ஆப்திகமும் செய்யவேண்டும். ஊன மாஸிகங்களை ஒற்றைப்படை திதியில் செய்யவேண்டும், நாள் பார்த்துச் செய்வது ச்லாக்யமானது என்று அறியவும். க்ருஹத்தில் சுப காரியங்கள் ஏற்பட்டால் மாஸிகங்களை ஆகர்ஷித்து செய்யலாம். ஆனால் சுபமான பிறகு புன:கரணம் செய்யக்கூடாது.

ஸபிண்டீகரணத்திற்கு முன்பு 16 ச்ரார்த்தங்களை ஏகோத்திஷ்ட விதானத்தினால் செய்யவும். ஸபிண்டீ கரணத்திற்கு பிறகு செய்யும் மாஸிகங்களை ப்ரத்யா பித்திக ச்ரார்த்தம் மாதிரி செய்யவேண்டும். பார்வண ச்ரார்த்தம் மாதிரி செய்யவேண்டும். பித்ரு, பிதாமஹ, ப்ரபிதாமஹ என்ற மூன்று புருஷர்களை உத்தேசித்து செய்வது பார்வணமாகும் என்று அறியவும்.

யமன்:— தண்டத்தை க்ரஹித்த மாத்திரத்தினால் ஸன்யாஸிகளுக்கு ப்ரேதபாவம் ஏற்படுவது இல்லை. ஆகையால் அவர்களுக்கு புத்ரன் ஏகோத்திஷ்டம், ஸபிண்டீகரணம் இவைகளை செய்யக்கூடாது. 11வது நாளில் பார்வண ச்ரார்த்தம் செய்யவேண்டும். 12வது நாளில் நாராயணபலி செய்யவும்.

**16. ஸபிண்டீகரணம்.**

ஆச்வலாயனர்:— ஸபிண்டீகரணத்திற்கு காலம் சொல்லப்படுகிறது. ஒரு வருஷம் முடிந்தவுடன்

ஸபிண்டீகரணம் செய்யலாம். 12வது நாளிலும் செய்யலாம்.

போதாயனர்:– வருஷம் முடிந்தவுடன் அல்லது 11வது மாதத்திலும், 6வது மாதாத்திலும், நாலாவது மாதத்திலும் ஸபிண்டீகரணம் செய்யலாம். 12வது நாளிலும் செய்யலாம்.

ஏக புத்ரனாக இருப்பவனும், ஸ்வயம் அக்னிமானாக இருப்பவனும் மாதா, பிதாக்களுக்கு 12வது நாளில் ஸபிண்டீகரணம் செய்வது தான் உசிதமானது. கொண்டாடத் தகுந்தது. சரீரம் ஸ்திரமில்லை என்ற காரணத்தால் நாள் கடத்தக்கூடாது என்று அறியவும்.

கர்த்தா அக்னிமானாயும், இறந்தவன் அக்னிமானாயும் இருந்தால் 12வது நாளில் மாதா, பிதா விஷயத்தில் ஸபிண்டீகரணம் செய்யவேண்டும்.

இரண்டு பேரும் அக்னிமானாக இல்லாவிட்டாலும் 12வது நாளில் செய்யலாம். வேறு காலங்களிலும் செய்யலாம். ஆனால் ஆசாரத்தில் என்ற ச்ருதியை அனுசரித்து 12வது நாள் செய்வது அதிகமான ப்ரசாரத்தில் காணப்படுகிறது என்று அறியவும்.

கர்த்தாவானவன் ஸபிண்டீகரணம் செய்யாமல் சோபன காரியம் செய்யக்கூடாது. செய்தால் கர்த்தாவுக்கு ஆபத்து ஏற்படும் என்று அறியவும்.

11வது நாள் முதல் 16வது நாள் வரையில் ஸபிண்டீகரணம் செய்யலாம். பிறகு 17வது தினத்திலும் செய்யலாம்.

சொல்லப்பட்ட காலத்தில் செய்யமுடியாவிடில் க்ருஷ்ணபக்ஷத்தில் பஞ்சமீ, அஷ்டமீ, அமாவாஸ்யை, ஏகாதசீ இவைகளில் ஸபிண்டீகரணம் செய்யலாம்.

அமாவாஸ்யை அல்லது ம்ருத திதி, மஹாளய பக்ஷம் இவைகளில் ஸபிண்டீகரணம் செய்யலாம். திதி, வார தோஷங்களைப் பார்க்க வேண்டாம். வர்ஷம் முடிந்த பிறகு ஸபிண்டீகரணம் செய்ய நேர்ந்தால் ஷோடச ச்ராத்தங்களை மறுபடியும் செய்யவேண்டும்.

கோபிலர்:— கர்த்தா ஆஹிதாக்னியாயும் இறந்தவன் அனாஹிதாக்னியாயும் இருந்தால் 12வது நாளில் ஸபிண்டீகரணம் செய்யவேண்டும்.

### 17. ஸபிண்டீகரணத்தில் அதிகாரிகள்

ஔரஸ புத்ரன், அல்லது ஸ்வீகாரப் புத்ரன் ஸபிண்டீகரணம் செய்யவேண்டும். அவன் இருக்கும் பொழுது மற்றவர்கள் செய்வது தோஷமாகக் கருதப் படுகிறது.

சங்கர்:— பிதாவுக்குப் புத்ரன் ஸபிண்ட்யத்தை செய்யவேண்டும். அவனில்லாவிடில் பௌத்ரன், பிறகு பத்னீ, பத்னீ இல்லாவிடில் ஸஹோதரன் என்று க்ரமம்.

புத்ரன் இல்லாத ஸ்திரீ விஷயத்தில் பர்த்தா ஸபிண்டீ கரணம் செய்யவேண்டும்.

வயதைக் கவனிக்காமல் ஸ்திரீகளுக்கும், புருஷர் களுக்கும் விவாஹமாகி இருந்தால் ஸபிண்டீகரணம் செய்யவேண்டும்.

வஸிஷ்டர்:— ப்ரம்மச்சாரிகள், நபும்ஸகர்கள், பதிதர்கள், துஷ்ட ஸ்திரீகள், நைஷ்டிகர்கள், ஸன்யாஸிகள் இவர்களுக்கு நாராயண பலி செய்யவும். உபகுர்வாண ப்ரம்மசாரிக்கு ஸபிண்டீகரணம் உண்டு என்று அறியவும். 12வயதுக்குள் இறந்த ப்ரம்மசாரிக்களுக்கு நாராயண பலி என்று அறியவும்.

## 18.ஸபிண்டியம் செய்யும் முறை.

ப்ருஹத்விஷ்ணு:— பிதாவின் மரணதினத்திலிருந்து 12வது நாளில ஸபிண்டீகரணம் செய்யவும். ப்ரேதனான பிதாவுக்கு ப்ரேதத்வ நிவிருத்தி அடைந்து பிதா மஹாதிகளுடன் ஸபிண்டத்வம் ஸித்திப்பதற்கும் ஸமானோதகத்வம் ஸித்திப்பதற்கும், புத்ரன் பிதா மஹாதிகளுக்கு பார்வண விதியாலும் ப்ரேதனான தனது பிதாவுக்கு ஏகோத்திஷ்ட விதியாலும் பார்வண ஏகோத்திஷ்டஸமுச்சய ஸ்வரூபமான ஸபிண்டீகரணம் ச்ராத்தம் செய்யவேண்டும்.

எவனுக்கு பிதா இறந்து பிதாமஹன் ஜீவித்து இருக்கிறானோ அந்த கர்த்தா ப்ரபிதாமஹபூர்வகமான மூன்று பேர்களுக்கு பார்வண ச்ராத்தம் செய்து அந்த பிண்டங்களுடன் பித்ரு பிண்டத்தை சேர்க்கவும்.

புத்ரனில்லாத பத்னிக்கு பர்த்தா ஸபிண்டீகரணம் செய்யவேண்டும்.

இரண்டு ச்ராத்தத்தை ஆரம்பித்து ஸபிண்டீகரணம் செய்யவேண்டும். அவைகளுள் பார்வணம் முதலில் செய்யவும். பிறகு ஏகோத்திஷ்ட ரீதியில் ப்ரேத

வர்ண ச்ராத்தம் செய்யவும். இவ்விரண்டும் சேர்ந்து ஸபிண்டீகரண ச்ராத்தமாகும்.

ஸபிண்டீகரண ச்ராத்தத்தில் முதலில் காலகாமக விச்வேதேவரையும், பிறகு பித்ருக்களையும், கடைசியில் ப்ரேதத்தையும் வரணம் செய்யவேண்டும்.

எந்த பார்வண ச்ராத்தத்திலும், விஷ்ணுவை உத்தேசித்து ப்ராம்மணனை வரிக்கவேண்டும். விஷ்ணுவை பூஜிக்காத ச்ராத்தம் ஸித்திகாது என்று தேவலரும், சாண்டில்யரும் கூறுகிறார்கள்.

## 19. பிண்டத்தைச் சேர்ப்பதின் முறை.

இனி பிண்ட ஸம்யோஜனத்தைப் பற்றித் தெரிவிக்கிறோம். ஹோமம் செய்து பாக்கி உள்ள அன்னத்தையும், திலத்தைக் கலந்து ஏழு பிண்டங்களைப் பிடித்துக் கொள்ளவும். அனுமரணமானால் எட்டு பிண்டங்கள், பலருக்கு ஸாபிண்டியமானால் அவ்வளவு நிமித்த பிண்டங்கள், இவைகளைச் செய்து கொண்டு, உச்சிஷ்ட ஸன்னதியில் அக்னிக்கு தென் புறத்தில், தெற்கு நுனியுள்ள தர்ப்பங்களை மூன்று விதமாக பரப்பிக் கொண்டு, தெற்கு நோக்கி இடது முழங்காலை கவிழ்த்து உட்கார்ந்து கொண்டு, பரப்பிய தர்ப்பங்கள் நடுவில் உள்ள தர்ப்பங்களில் மார்ஜயந்தாம் மம பிது: பிதர: என்பது முதலிய மந்திரங்களாலும், மேற்கு திக்கில் மார்ஜயந்தாம் மம மாதர: என்ற மந்திரங்களாலும், தெற்கில் முடிவாகும்படி மார்ஜனம் செய்து, மார்ஜனம் செய்த முறைப்படி ஏதத்தே மம பிது: தத என்பது முதலிய மந்திரங்களால்

ஆறு பிண்டங்களை வைத்து யேசத்வாமனு, பாச்சத்வாமனு என்பவைகளால் ஒவ்வொரு பிண்டத்திலும் தர்பங்களின் அடியில் லேபத்தை (கையில் லுள்ளவற்றை) துடைத்து மார்ஜயதாம் மம பிதா ப்ரேத: அல்லது மார்ஜயதாம் மம மாதா ப்ரேதா என்று ஜலத்தைவிட்டு....... கோத்ர...... சர்மன், ப்ரேதஏதம் பிண்டம் உபநிஷ்ட என்று பிண்டத்தைக் கொடுத்து...... கோத்ரே...... நாம்னி ப்ரேதே என்று ஸ்திரீக்கு) பிண்டத்தைக் கொடுக்கவேண்டும்.

ப்ராம்மணர்களால் அனுக்ஞை செய்யப்பட்டவனாய் "ஸமானோ மந்தர:" ஸமாநீவ:, என்ற இரண்டு மந்திரங்களால் ப்ரேதார்க்யத்தை பித்ராதிகளின் ஆர்க்ய பாத்திரங்களில் சேர்த்து மௌனமாய் நீட்டமாக பிடித்துப் ப்ரேத பிண்டத்தை எடுத்து மூன்றாகச் செய்து மூன்று பாகங்களையும் பிதா முதலியவரின் பிண்டங்களில் எதிரில் வைத்து, வைதரணீ கோதானத்தைச் செய்து, அனுக்ஞையைப் பெற்று மதுமதீ முதலிய மந்திரங்களாலும், ஸங்கச்சத்வம், ஸமானோ மந்திரம் ஸமாநீவ: என நான்கு மந்திரங்களால் மூன்றாகச் செய்த ப்ரேத பிண்டங்களை பித்ராதி பிண்டங்களுடன் கைகளால் ஒரே சமயத்தில் சேர்க்கவும்.

இந்த மாதிரி ப்ரேத பிண்டத்தைச் சேர்த்து யேஸமானா: யேஸஜாதா: என்ற இரண்டு மந்திரங்களால் உபஸ்தானம் செய்து சேர்க்கப்பட்ட ஆர்க்ய ஜலத்தால் மந்திரங்களை ஊஹிக்காமல் முன்போல் மார்ஜனம் செய்யவும், என்று கூறப் படுகிறது. இந்த விஷயங்களில் த்ரிபிண்டிகளாக

இருந்தால் நான்கு பிண்டங்கள் ஸம்பவிக்கும் என்று அறியவும்.

சங்க:— மாதாவின் ஸபிண்டீகரணத்தில் புத்திரர்கள் மாதாவின் பிண்டத்தை பிதாமஹீ முதலியவர்களுடைய பிண்டங்களுடன் சேர்க்கவேண்டும். இந்த மாதிரி மாதாமஹ மாதாமஹீ ஸபிண்டீகரணத்தில் ஊஹித்துக் கொள்ளவும்.

கோத்ரம் தெரியாமல் இருந்தால் காச்யப கோத்ரம் என்று சொல்லிக் கொள்ளவும். வேதமானது எல்லா ப்ரஜைகளும் காச்யபரிடமிருந்து உண்டானார்கள் என்று கூறுகிறது.

தகப்பனாரின் சர்மா தெரியாவிடில் "ப்ருதி விஷத்" என்று சொல்லவும். இதே மாதிரி பிதாம ஹரின் சர்மா தெரியாவிடில் "அந்தரிக்ஷஸத்" என்றும், ப்ரபிதாமஹருக்கு "திவிஷத்" என்றும் சொல்லிக் கொள்ளவும்.

ஜமதக்னி:— வைதரணீ என்னும் நதீ துர்நாற்ற முள்ள ரக்தத்துடன் கூடியதாய், கருத்த தண்ணீருள்ள தாயும், மஹா வேகமுள்ளதாயும், எலும்பு மயிர் இவைகளுடன் கூடிய அலைகளுடையதாயும் உள்ளது. இது யமலோகம் போகும் வழியில் உள்ளது. எவன் ஸாபிண்ட்யத்தில் பசு கொடுக்கிறானோ அவன் அந்த நதியைத் தாண்டுகிறான். ஆகையால் வைதரணீ கோதானம் முக்கியம் என்று அறியவும்.

மாதா, பிதாக்களின் ஸபிண்டீகரணத்தை ஜ்யேஷ்டனே செய்யவேண்டும். எல்லோருடைய அனுமதியினால்

பிரிக்கப்படாத தனத்தைக் கொண்டு ஜ்யேஷ்டனால் செய்யப்பட்டது எதுவோ அது எல்லோராலும் செய்யப்பட்டதாகும். மாதா, பிதாக்களின் ஸபிண்டீ கரணத்தை எல்லா புத்ரர்களும் செய்யக்கூடாது.

மாதா, பிதாக்களுக்கும், மாதாமஹன் மாதாமஹீ, ஸீமந்த ஜ்யேஷ்ட ப்ராதா இவர்களுக்கும் ஔபாஸனாக்னியில் ஸபிண்டீகரணம் செய்யவேண்டும். ஸீமந்த ஜ்யேஷ்ட ப்ராதா பிதாவுக்கு ஸமனாவான், பிதாமஹன், பிதாமஹீ இவர்களுக்கு ஔபாஸனாக்னி யில் ஸபிண்டீகரணம் செய்யவேண்டும்.

ப்ரம்மச்சாரி, பத்னி இல்லாதவன் (விதுரன்) இவர்கள் லௌகிகாக்னியில் ஸ்பிண்டீகரணம் செய்ய வேண்டும். இது ஆபஸ்தம்பருடைய மதமாகும்.

ஔபாஸனாக்னி தூரத்திலிருந்தால் பாணியிலேயே ஹோமம் செய்யவேண்டுமென்று சில ஸாதுக்கள் விரும்புகிறார்கள். இது ஸாமஞ்சஸமாகாது. பூணூலை இடமாக செய்துகொண்டு செய்யும் ஹோமமானது அக்கினிலேயே செய்யவேண்டும், பிராம்மணோத்த மர்களே.

ஹோமசேஷத்தை ப்ராம்மணர்களின் போஜனப் பாத்திரங்களில் வைக்கவேண்டும், விஷ்ணுவை ஸ்மரித்துக் கொண்டு என்பது சாஸ்திரமாகும்.

பத்னி இல்லாதவன், தூரத்தில் உள்ள பார்யையை உடையவன், ப்ரம்மசாரீ இவர்கள் ச்ராத்தத்தில் அக்னி காரியத்தை அக்னியில் செய்வது உசிதமாகும். ஆகையால் லௌகிகாக்னியில் செய்யவும்.

பத்னி ரஜஸ்வலையாக இருந்தால் ஸ்னானம் செய்த பிறகு அக்னி ஸந்தானம் செய்துகொண்டு ஸபிண்டீகரணம் செய்யவும். அக்னி இருந்தாலும், பத்னி ரஜஸ்வலையாக இருந்தால் ஸபிண்டீகரணத்திற்கு நிறைய காலம் சொல்லப்பட்டிருப்பதால் ஸ்னானம் செய்தபிறகு செய்வது உசிதமானது. அசுத்த காலத்தில் செய்யவேண்டாம் என்பது கருத்து.

அநேக ப்ராதாக்கள் இருக்கும்பொழுது மூத்தவன் அக்னிமானாக இல்லாமல் இருந்தால் அக்னிமானாக (ஔபாஸனாக்னி) இருப்பவன் ஸபிண்டீகரணம் செய்யவும். ஒரே புத்ரனாக இருந்து அக்னிமானாக இல்லாமல் இருந்தால் லௌகிகாக்னியில் ஸபிண்டீகரணம் செய்யவும்.

கர்த்தாவுக்கு பத்னி அனுகூலையாக இல்லாவிடில் ஒரு வருஷம் வரையில் அவளுடைய வரவை எதிர்பார்த்து, வந்த பிறகு ஸபிண்டீகரணம் செய்யவும். அல்லது அடுத்த ப்ராதாவை அக்னிமானாக உள்ளவனை செய்யச் சொல்லவும். ஒரு புத்ரனாக இருந்து ஒரு வருஷத்திற்குள் வரவில்லையானால் பத்னிக்குப் பிரதிநிதி செய்துகொண்டு ஸபிண்டீகரணம் செய்யவும்.

பத்னி அனுகூலமாக இருந்து ஸபிண்டீகரணத்திற்கு கூட இருந்து நடத்திக் கொடுக்க ஸித்தமாக இருக்கும் பொழுது அவளை திரஸ்கரித்து செய்யும் ஸபிண்டீகரணம் வீணாக ஆகும். இவன் மேற்படி காரியம் செய்ய அர்ஹனல்ல என்று அறியவும்.

## 20. ஸோதகும்ப ச்ராத்தம் செய்யும் முறை.

விச்வேதேவர், விஷ்ணு, வரணம் இல்லாமல் மூன்று புருஷர்களை உத்தேசித்து செய்யும் ச்ராத்தம், உதகும்பத்துடன் கூடியது, ஸோதகும்ப ச்ராத்தமெனப் படும். இது கர்த்தாவுக்கும் போக்தாவுக்கும் விசேஷ ச்ராத்த நியமம் கிடையாது. கர்த்தா ப்ரம்மயக்ஞம், பூஜை முதலிய தேவகார்யங்களை செய்து பிறகு செய்யலாம். 12வது தினத்தில் ஸபிண்டீகரணம் செய்தபிறகு அன்றைய தினமே ஆரம்பித்து ஆப்திக பர்யந்தம் தினமும் செய்யவேண்டும்.

காத்யாயனர்:— ப்ரதி தினமும் செய்யமுடியா விடில் ஒவ்வொரு மாதத்திலும் ஸோத கும்ப ச்ராத் தங்களைச் சேர்த்துச் செய்யவும். தர்சத்தில் செய்யலாம். மாஸிகத்திற்கு முன்பு செய்யலாம். சென்றவைகளையும், விட்டுப் போனவைகளையும் சேர்த்துச் செய்யவும். 12வது நாளில ஸபிண்டீகரணம் ஆனபிறகு ப்ரேதத்வம் நீங்கிவிடுகிறபடியால் தஹன ஜனித க்ஷுத்த்ருஷ்ணா வினால் உண்டான தாபம் இல்லை. ஆகையால் ஸோத கும்ப ச்ராத்தம் எதற்கு என்று நினைக்கலாம். சாஸ்த்திரம் ஒரு வருஷம் வரையில் ஆப்திக பர்யந்தம் செய்யச் சொல்லிருக்கிறது. ஆகையால் ப்ரேத பாபம் நீங்கினாலும் மனதில் ப்ரேத பாபம் இருப்பதுபோல் தோன்றும் என்று அறியவும்.

ஸபிண்டீகரணத்திற்குப் பிறகு ஆப்திகத்திற்கு முன்பு தர்சம், மஹாளயம், மன்வாதி ச்ராத்தங்களைச் செய்யக்கூடாது. தர்ப்பணம் செய்யலாம். ஆனால் அஷ்டகா ச்ராத்தம் மாத்திரம் செய்யலாம்.

ஆசௌசம் 12நாள் வரையில் உள்ளது. ஆகையால் ஸபிண்டீகரணத்திற்கு முன்பு தேவ பூஜை, பித்ரு கார்யம், ஹோமம், தானம், ஜபம் முதலியவைகளைச் செய்யக்கூடாது.

## 21. ஆப்திக ச்ரார்த்தம்

எவனுக்கு எந்த மாஸத்தில் எந்த பக்ஷத்தில் எந்த திதியில் மரணம் ஏற்பட்டதோ அந்த திதியில் ஆப்திகம் செய்யவேண்டும், விஷயமறிந்தவன்.

நாரதர்: எந்த திதியில் மரணம் ஏற்பட்டதோ அந்த திதியில் ஆப்திகம் செய்யவேண்டும். திதி, வாரம், நக்ஷத்திரம் இவைகளுக்குள் திதி அதிக பலம் உள்ளது என்று அறியவும்.

எவன் மாதபக்ஷதிதிகளுடன் கூடிய தினத்தில் இறந்தானோ அவனுக்கு ப்ரதி வருஷமும் அதே விதமான காலத்தை ம்ருதாஹச்ராத்த தினமாக பெரியோர்கள் சொல்லுகிறார்கள்.

தர்சத்திற்குப் பிறகு தர்சம் வரையுள்ளது, சாந்த்ர மாஸம். 30 நாட்கள் கொண்டது ஸாவன மாஸம். ஸூர்யனின் ஸங்கரமணத்தை அடையாளமாயுள்ளது ஸௌர மாஸம் என்று ஜ்யோதிஷர்களால் கூறப் படுகிறது.

சாந்த்ர மாஸம் தர்சாந்தம் என்றும், பூர்ணி மாந்தம் என்றும் இரண்டு விதமாய் சொல்லப்படுகிறது. ஜாதி பேதங்களாலும், தேச பேதத்தாலும், அந்த

இரண்டு மாஸங்களும் தீர்மானம் செய்யப்பட்டிருக்கிறது. நர்மதா நதியின் தெற்கில் உள்ள தேசத்தில் தர்சாந்த சாந்த்ர மாஸமும் நர்மதையின் வடக்கு பாகமுள்ள தேசத்தில் பூர்ணிமாந்தமான சாந்த்ர மாஸமும் என்று ஜ்யோதிஷத்தில் கூறப்படுகிறது. வ்ரதானுஷ்டானத்தில் சாந்த்ர மாஸம் உயர்ந்தது. ச்ரார்த்த காரியங்களில் அது ப்ரசஸ்தமாகாது, சாந்தர மாஸமானது அடிக்கடி அதி மாஸம் ஏற்படுமாகையால் ஸ்திரமில்லாதது. ஸௌர மாஸமானது ஸ்திரமானது. ஆகையால் ச்ரார்த்த காரியங்களுக்கு ஸௌர மாஸம் உயர்ந்தது என்று அறியவும்.

அயனம் ஸூர்ய கதியை அனுஸரித்து ஏற்படுவதால் அயனம் ஸௌரம் என்றே கூறப்படுகிறது, மகரஸங்கராந்தியை உத்தராயணம் என்றும், கர்கடக ஸங்கராந்தியை தக்ஷிணாயனம் என்றும் அயனபுண்ய காலங்களை குறிப்பிடுகிறோம்.

ச்ரார்த்த விஷயத்தில் ஸௌர, சாந்தர மாஸங்களை சாஸ்த்திரங்களில் ப்ரமாணமாக க்ரஹிப்பதால் அனுஷ்டானத்தில் விகல்பம், அதாவது ஒரு ப்ராமணத்தை ஆதாரமாகக் கொண்டு இரண்டு மாதங்களுக்குள் ஒரு மாதத்தில் ஆப்திக ப்ரத்யாப்திக ச்ராத்தங்களை அனுஷ்டிக்கவும். நம் வம்சங்களில் பெரியோர்கள் அனுஷ்டித்த பிரகாரம் அனுஷ்டிக்கவும். சாந்த்ர மாஸ ரீதியில் செய்கிறவர்கள் அதி மாஸம் வந்தால் அதி மாஸ திதியிலும், நிஜ மாஸ திதியிலும் ச்ரார்த்தத்தை அனுஷ்டிக்கவேண்டும்.

## 22. ஸௌர மாஸத்தில் இரண்டு திதி ஸம்பவித்தால் அனுஷ்டிக்க வேண்டிய முறை.

ஸௌர மாதத்தில் இரண்டு திதிகள் வந்தால் ஆப்திகம், மாஸிகம் ப்ரத்யாப்திகம், முதலிய ச்ராத்தங்களை பின் திதியில் அனுஷ்டிக்கவேண்டும். பின் திதியில் க்ரஹணம், ஸங்க்ரமணம் முதலியவை வந்தால் துஷ்டமாகி விடுகிறது. அப்பொழுது முன் திதியில் ச்ரார்த்தம் செய்யவேண்டும்.

இரண்டு திதிகளிலும் தோஷமிருந்தால் சூர்ய ஸங்க்ரமணம் மத்தியானத்திற்கு முன்பு இருந்தால் பூர்வ திதியை க்ரஹிக்கவும். இல்லாவிடில் பின் திதியை க்ரஹிக்கலாம். இரண்டு திதிகளிலும் அபராஹ்ணம் துஷ்டமானால் எந்த திதியில் மாஸ ஸம்பந்தம் அதிகமாயுள்ளதோ அந்த திதியை க்ரஹிக்கவும்.

ஒரு மாஸத்தில் மாதா, பிதாக்களின் ம்ருத திதியில் பகலில் ஸங்கரமணம் அபராஹ்ணத்திற்கு பிறகு நேர்ந்தால் ச்ரார்த்தம் செய்யலாம். இது ஒரே திதி வரும் விஷயத்தில் என்று அறியவும். தோஷமில்லாமல் இரண்டு திதி ஸம்பவித்தால் பின் திதியில் ச்ராத்தம் செய்யவும்.

ஸம்வர்த்தர்:— ஸௌர மாஸ விதிப்படி ம்ருத மாஸத்தில் திதி கிடைக்காவிடில் அப்பொழுது முன் மாத திதியில் ச்ரார்த்தம் செய்யவும். பின் மாத திதியில் ச்ரார்த்தம் செய்யக்கூடாது. செய்தால் துக்கம் வரும் என்று அறியவும்.

இறந்த தினத்தில் ப்ரதி வருஷம் ச்ரார்த்தம் செய்யவேண்டும். தவறிவிட்டால் கோடி ஜன்மாக்களில் சண்டாளனாகப் பிறப்பான். ஆகையால் ப்ராணன் போகும் ஆபத்து நேர்ந்தாலும் ச்ரார்த்தத்தை விடக் கூடாது என்பது கருத்து.

### 23. ச்ரார்த்தத்திற்கு தகுந்த திதி முதலியவைகளின் நிருபணம்.

கௌதமர்:— எந்த திதியில் மத்யாஹ்ன வ்யாப்தி இருக்கிறதோ அதில் ஏகோத்திஷ்டம் செய்யவேண்டும். எந்த திதி அபராஹ்ணத்தில் இருக்கிறதோ அதில் பார்வண ச்ரார்த்தம் செய்யவேண்டும்.

வ்யாஸர்:— மூன்று முகூர்த்தம் (6 நாழிகைகள்) ப்ராத:காலம் என்றும், பிறகு மூன்று முகூர்த்தம் ஸங்கவகால மென்றும், பிறகு மூன்று முகூர்த்தம் மத்யாஹ்ன காலம் என்றும், பிறகு மூன்று முகூர்த்தம் அபராஹ்ணம் என்றும், பிறகு மூன்று முகூர்த்தம் ஸாயாஹ்ணம் என்றும் சொல்லப்படுகிறது. ஸாயாஹ்னம் கர்மாக்களுக்கு உகந்ததல்ல என்று அறியவும்.

பகலில் 15 முகூர்த்தங்கள் உள்ளது. முகூர்த்தம் இரண்டு நாழிகைகள் என்று அறியவும். ரௌத்ர: சைத்ரஸாலகட: ஸாவித்ர: ஜயந்த: காந்த்ரவ: குதப: ரௌஹிண: விரிஞ்ச: விஜய: நைர்ருத: மாஹேந்தர: வருண: போத: என்று பெயருள்ளவைகள் இந்த பதினைந்து முகூர்த்தங்கள் என்று அறியவும்.

வாஸரத்தை இரண்டு விதமாயும், மூன்று விதமாயும், நான்கு விதமாயும், கூறப்படுகிறது. ஆனால்

ஐந்துவிதமாக கூறுகிற பக்ஷத்தைத் தான் வேதம் ஸ்மிருதிகள் அங்கீகரித்து விதி நிஷேதங்களை தெரிவிக் கின்றன. ஆகையால் ஐந்துவித விபாகபக்ஷமே ச்லாக் யமானது.

பகலில் எட்டாவது முகூர்த்தம் குதபம் என்பதாகும். அதற்கு மேல் நான்கு முகூர்த்தங்களும், குதபத்தை சேர்த்து ஐந்து முகூர்த்தங்களும், ச்ரார்த்தத்திற்கு சரியான காலம் என்று அறியவும். ஆக 15வது நாழிகையிலிருந்து 24வது நாழிகை வரையில் ச்ரார்த்த கால மென்று குறிப்பிடப்படுகிறது. அபராஹ்ணம் 19வது நாழிகையி லிருந்து 24வது பர்யந்தம் சொல்லப் படுகிறது. அது ச்ரார்த்ததிற்கு முக்கிய காலம் என்பது.

குதப காலத்தில் ஆரம்பித்து ஸாயாஹ்னத்திற்கு முன் உள்ள காலமானது ச்ரார்த்தத்திற்கு முக்கிய காலம் என்று அறியவும்.

போதாயனர்:— முன் பின் இரண்டு நாளும் அபராஹ்ண வ்யாபிநீதிதியாக இருந்தால், க்ஷயதிதியாக இருந்தால் முதல் அபராஹ்ண வ்யாபிநீ திதியில் ச்ரார்த்தம் செய்யவும். வ்ருத்தி திதியாக இருந்தால் மறுநாள் அபராஹ்ண வ்யாபிநீ திதியில் ச்ரார்த்தம் செய்யவும். இரண்டு நாளிலும் அபராஹ்ண வ்யாபித்வம் திதிக்கு இல்லையேயானால் முதல் நாள் அஸ்தமன வ்யாபியான திதியில் ச்ரார்த்தம் செய்யவும்.

வஸிஷ்டர்:— பித்ரு காரிய விஷயத்தில் அஸ்தமன காலத்தில் ஸம்பந்தப்பட்ட திதி பூர்ணமானது என்று அறியவும்.

## 24. ஆப்திகம் முதலிய ச்ரார்த்தங்களை பிரிந்த ஸஹோதரர்கள் தனித்தனியாகச் செய்யவேண்டும்.

சொத்தைப் பிரித்துக்கொண்டு இருக்கும் ஸஹோதரர்கள், தன்னால் ஸம்பாதித்ததைக் கொண்டு ஜீவனம் நடத்துபவர்கள் தர்சம், ஆப்திகம், ப்ரத்யாப்திகம் முதலிய ச்ராத்தங்களைத் தனித்தனியாகச் செய்யவேண்டும்.

புத்ரனில்லாத ஸ்திரீ, தன் பர்த்தாவுக்கு ச்ராத்தம் வரும் திதி காலத்தில் ரஜஸ்வலையாக இருந்தால் அந்த ச்ராத்தத்தை ஐந்தாவது நாளில் செய்யவேண்டும்.

ஆபத்தை அடைந்தாலும் ஆப்திக ச்ராத்தத்தை ஆமரூபமாக ஒரு காலும் செய்யக்கூடாது. அந்த திதியில் செய்யமுடியாமல் போனால், அமாவாஸ்யை அல்லது க்ருஷ்ண ஏகாதசியில் செய்யவேண்டும். ஆசௌசத்துக்குள் ச்ராத்த திதி வந்தால் ஆசௌசம் போனவுடன் செய்யவேண்டும்.

பித்ரும்ருதாஹ ச்ரார்த்தத்தில் பிதா பிதாமஹ ப்ரபிதாமஹர்களுக்கு உத்தேச்யத்வம், அதே மாதிரி மாத்ரும்ருதாஹ ச்ரார்த்தத்தில் மாதாபிதாமஹீ பரபிதாமஹீ இவர்களுக்கு உத்தேச்யத்வம் என்று அறியவும்.

விஷ்ணு:— மாத்ரு ச்ரார்த்தத்தில் ஹோமம், பிண்டம், இவைகள் பிதாவுக்கும், பிதா மஹருக்கும் ப்ரபிதாமஹருக்கும் என்று, ஆபஸ்தம்பிகளுக்குச்

சொல்லப்பட்டது. மாத்ரு வர்கத்திற்கு வரணம், அர்க்யம் முதலிய உபசாரங்கள் உண்டு என்று அறியவும்.

ஏகோத்திஷ்டங்களிலும், ஸபிண்டீகரணத்திலும் மாஸிகங்களிலும், ஆப்திகத்திலும், ச்ராார்த்தாங்க திலதர்ப்பணம் செய்யக்கூடாது. பாக்கி உள்ள ப்ரத்யாப்திக, மஹாலயாதி ச்ராார்த்தங்களில் ச்ராார்த்தாங்க தில தர்ப்பணம் அவசியம் செய்யவேண்டும்.

### 25. மலமாஸ நிரூபணம்

சுக்ல பக்ஷ ப்ரதமையிலிருந்து அமாவாஸ்யை பர்யந்தம் சாந்த்ர மாஸமாகும். அந்த மாஸத்தில் ஸெளர்ய ஸங்க்ரமணம் இல்லையேயானால் அந்த சாந்த்ர மாஸம் மல மாஸம் என்று சொல்லப்படுகிறது.

எப்பொழுது சாந்த்ர மாஸத்தில் இரண்டு ஸங்க்ரமணம் வருகிறதோ, அதற்கு க்ஷய மாஸம் என்று பெயர். இதுவும் மலமாஸம்போல் கர்மாக் களுக்கு உகந்தது இல்லை என்று அறியவும்.

சாந்த்ர மாஸத்தில் இரண்டு ஸங்கரமணம் வந்த க்ஷய மாஸத்தை அம்ஹஸ்பதி என்றும் சொல்லப் படுகிறது. இது அபூர்வமாக வரும். இது எந்த சாந்த்ர மாஸத்தில் வருகிறதோ அந்த மாதம் க்ஷயமாகி அடுத்த மாதம் வந்துவிடும் என்று அறியவும். அடுத்த மாத புண்யங்காலங்கள் வந்து விடும் என்பது கருத்து.

ஒரு ஸெளர மாதத்தில் இரண்டு அமாவாஸ்யை வருமானால் இது ஸம்ஸர்ப்பக மாஸம் என்று

சொல்லப்படுகிறது. இவைகளில் ஸம்ஸர்ப்பக ரூபமான அதி மாஸத்தில் முதல் மாதம் துஷ்டமானது. கர்மாவுக்கு அர்ஹமில்லை. அடுத்த மாதம் கர்மார்ஹமானது, சுத்தமானது. அம்ஹஸ்பதி ரூபமான அதி மாஸமானது முதல் மாதம் சுத்தமானது. கர்மாவுக்கு உகந்தது. பின் மாதம் கர்மானர்ஹமானது, துஷ்டமானது என்று அறியவும்.

வ்ருத்த வஸிஷ்டர்:— ஓடை, கிணறு, குளம் இவைகளின் ப்ரதிஷ்டை, ஸோமயாகம், மஹாதானங்கள் (துலாபுருஷ தானங்கள்) இவைகளையும் மல மாதத்தில் செய்யக்கூடாது.

ஜாதகர்மா, பும்ஸவனம், ஸீமந்தோன்னயனம், வ்ரதம் இவைகளை மல மாதத்திலும் செய்யலாம், இந்த காரியங்களுக்கு அவசியமான நிமித்தம் நேர்ந்தால் என்று அறியவும். அபர காரியங்களும் செய்யலாம்.

### 26. தர்ச ச்ராத்தம்.

அரசனே, ஒவ்வொரு மாஸத்திலும் க்ருஷ்ண பக்ஷத்தில், அமாவாஸ்யையில் ச்ரத்தையுடன் தர்ச ச்ராத்தம் செய்கிறவன் உலகம் முழுவதையும் திருப்தி செய்விக்கிறான்.

இறந்த பிதாவை உடையவன், தர்ச ச்ராத்தம் அவசியம் செய்யவேண்டும். அமாவாஸ்யையில் ச்ராத்தம் செய்யாத ப்ராம்மணன் ப்ராயச்சித்தம் செய்து கொள்ளவும்.

தர்சத்தில் பித்ரு பிதாமஹ ப்ரபிதாமஹர்களையும் மாதாமஹ, மாது: பிதாமஹ, மாது: ப்ரபிதாமஹர் களையும் வரணம் செய்யவும். தர்சத்தில் தனியாக மாத்ரு வர்கத்திற்கும், மாதாமஹீ வர்கத்திற்கும் உத்தேச்யத்வம் கிடையாது என்று அறியவும்.

தர்சம், அஷ்டகை, ஸங்கரமணம், வ்யதீபாதம், க்ரஹணம் இவைகளில் ஸ்நானம் செய்து திலதர்ப் பணம் செய்து பிறகு ச்ரார்த்தம் செய்யவேண்டும் என்று அறியவும்.

பித்ரு காரியங்களுக்கு அபராஹ்ணம்காலமாகும். ஆகையால் அபராஹ்ண வ்யாப்தியான அமாவாஸ்யையை க்ரஹிக்கவும். ச்ராத்தத்திற்கு பூர்வத்தில் அஸ்தமன வ்யாப்தியாக இருந்தாலும் அந்த தர்சம் ச்ரார்த்தத்திற்கு உகந்தது அல்ல.

அபராஹ்ணத்தில் அமாவாஸ்யை அல்ப வ்யாப்தியாக இருக்கும் தினத்தைத் தியாகம் செய்து நிறைய வ்யாப்தி உள்ளதை க்ரஹிக்கவும்.

நாரதர்: அமாவாஸ்யையானது இரண்டு நாள் அபராஹ்ணத்திலும் வ்யாபித்து இருக்குமேயானால் அப்பொழுது திதி க்ஷய விஷயத்தில் பூர்வ திதியை க்ரஹிக்கவும். திதி வ்ருத்தியிலும் ஸாம்யத்திலும் மறுநாளை க்ரஹிக்கவும்.

**27. அர்தோதயமஹோதய புண்ணிய கால நிரூபணம்**

வ்யதீ பாதத்தில் முடிவு அமாவாஸ்யையின் முதல் பாகம், ச்ரவணத்தின் மத்ய பாகம், சூர்யோதயம்,

ஞாயிறு இவைகள் புஷ்யமாக மாஸங்களில் ஸம்பவித்தால் அர்தோதய புண்ணிய காலமாகும். இதில் முன் நான்கும், திங்கள் கிழமையும் சேர்ந்தால் மஹோதய புண்ணிய காலமாகும்.

அமாவாஸ்யை திங்களுடனும், ஸப்தமீ ஞாயிற்றுக் கிழமையுடனும், சதுர்த்தீ செவ்வாயுடனும், அஷ்டமீ புதனுடனும் ஆக நான்கு திதிகளும் சூர்ய க்ரஹணப் புண்ணிய காலங்களுக்குச் சமமாகும் என்று அறியவும்.

## 28. அஷ்டகா ச்ரார்த்தத்தின் நிரூபணம்.

சௌனகர்:— ஹேமந்தசிசிரருதுக்களுடைய மாஸங்களில் க்ருஷ்ண பக்ஷங்களில் வரும் அஷ்டமீக்கள் அஷ்டகா புண்ய காலமாகும். மார்க்கசீர்ஷம், பௌஷம், மாகம், பால்குணம் இந்த மாதங்களில் வரும் அஷ்டமீக்கள் என்று அறியவும். ஒவ்வொன்றிலும் பூர்வேத்யு: அஷ்டகா அன்வஷ்கா என்று ஸப்தமீ, அஷ்டமீ, நவமீ திதகளில் மூன்று ச்ரார்த்தங்கள் செய்யவேண்டும்.

மாக மாத பூர்ணிமைக்குப் பிறகு வரும் கிருஷ்ண பக்ஷத்தில் அஷ்டமீ, கேட்டை நக்ஷத்திரத்துடன் கூடுகிறது. அதற்கு ஏகாஷ்டகா என்று சொல்லுவார்கள். இது முக்கியமான அஷ்டகையாகும் என்று ஆபஸ்தம்பர் கூறுகிறார்.

பாத்ரபத மாஸம், மாகமாதம், இந்த மாதக் கிருஷ்ண பக்ஷ அஷ்டமியில் ச்ரார்த்தம் செய்ய தன வசதி

குறைவு உள்ளவர்கள் பித்ருக்களை உத்தேசித்து சில தர்ப்பணமாவது செய்யவேண்டும்.

### 29. மஹாலய ச்ராத்த நிரூபணம்.

மார்கண்டேயர்:— ஸூர்யன் கன்யா ராசியை அடைந்திருக்கும் பொழுது பதினைந்து நாட்களிலும் பார்வண விதானமாக ச்ராத்தம் செய்யவேண்டும்.

ஜாபாலி:— ஸூர்யன் கன்யா ராசியிலிருக்கும் பொழுது க்ருஷ்ண பக்ஷத்தில் எப்பொழுதும் ச்ராத்தம் செய்யவேண்டும். ஆஷாட பூர்ணிமையிலிருந்து ஐந்தாவது பக்ஷம் ச்ராத்த காரியங்களில் ப்ரசஸ்தமாகும். ஐந்தாவது பக்ஷத்தில் ச்ராத்தம் செய்தால் புத்ரர்கள் ஆயுஸ், ஆரோக்கியம், அதிக ஐஸ்வர்யம் இவைகளை யும், எதை விரும்புகிறோமோ அவைகளையும் அடையலாம்.

ஸூர்யன் கன்யா ராசியை அடைந்து இருப்பதால் இந்த பக்ஷம் புண்ணியமெனக் கருதப்படுகிறது. ஆதியில் அல்லது நடுவில், முடிவிலாவது ஸூர்யன் கன்யா ராசியில் இருந்தாலும் போதுமானது. அந்த பக்ஷம் ச்லாக்யமானது. சில மஹர்ஷிகள் ப்ரதமையில் ஆரம்பித்து அடுத்த ப்ரதமை பர்யந்தம் 16 நாள் ச்ராத்தம் செய்யலாம் என்று சொல்லுகிறார்கள். இந்த இடங்களில் இரண்டு விதியும் சாஸ்திர ஸம்மதமாகும். ஆகையால் ஒரு சாஸ்த்திரத்தை அனுசரித்து அனுஷ்டிக்கவும். மாதவீயத்தில் 15 தினங்களும் செய்யலாம். 16 தினங்களும் செய்யலாம் என்பது விகல்பமாகும். ஆனால் பக்ஷம் என்பது 15]

தினங்களாகும். அது எல்லோராலும் அனுஷ்டிக்கப் படுகிறது.

ஸூர்யன் கன்யா ராசியில் இருக்கும்பொழுது பித்ருக்கள் அவரவர்களுடையப் புத்திரர்களை அடைகிறார்கள். ஆகையால் யமபட்டினம் காலியாகி விடுகிறது. புத்ரர்களை அடைந்து ச்ராத்தம் செய்வான். ஆகையால் நம்முடைய பசி தாகம் போகுமென்று எண்ணத்துடன் பித்ருக்கள் வருகிறார்கள். ஆகையால் பித்ரு பக்ஷத்தில் ச்ராத்தம் செய்யவேண்டும். ஒரு நாளாவது செய்யவேண்டும். செய்யாவிடில் வ்ருச்சிக மாஸ பர்யந்தம் எதிர் பார்க்கிறார்கள். அப்பொழுதும் ச்ராத்தம் செய்யவில்லையேயானால் சாபத்தைக் கொடுத்துவிட்டுச் செல்லுகிறார்கள். இந்த பக்ஷத்தில் பரணீ, அஷ்டமீ, வ்யதீபாதம், த்வாதசீ இவைகள் விசேஷ புண்ணிய காலமாகும் என்று அறியவும். இந்த பக்ஷத்தில் ஒரு நாளாவது ச்ராத்தம் செய்ய வேண்டும். அதற்கு "ஸக்ருத் மஹாளய ச்ராத்தம்" என்று பெயர்.

மஹாளய ச்ராத்தத்தில் உத்தேச்ய பித்ருக்களைக் குறிப்பிடுகின்றனர் விச்வேதேவர், பிதா, மாதா, ஸபத்னி மாதா, ஸபத்னீகர்களான மாதா மஹாதிகள், பித்ருவ்யர், அத்தை, மாமா, சிறிய தாயார், பெரிய தாயார், ஜாமிகள் (குல ஸ்திரீகள்) ஸஹோதரீ, பெண், பார்யை, மாமனார், மாமியார், பகினீபதி, நாட்டுப் பெண், மைத்துனன், குரு, ஆசார்யன், ஸ்வாமி, ஸ்நேகிதன், இவர்கள் முதலியவர்கள் காருணிக பித்ருக்கள் ஆவார்கள். இவர்களும் தனியாக பூஜிக்கத்தக்கவர் (மஹாளய ச்ராத்தத்தில்,) என்பது தனிச் சிறப்பாகும் என்று அறியவும்.

மாதா, பிதாக்களின் ச்ரார்த்தத்திற்கு முன்பு அந்த மாதத்தில் மஹாளயத்தை செய்யக்கூடாது. மாதா, பிதாக்களின் ச்ரார்த்தம் செய்த பிறகு மஹாளயம் செய்யவேண்டும். சிலர் பார்வணம் செய்ய முடியாத காரணத்தினால் ஹிரண்ய ரூபமாக மஹாளய ச்ரார்த்தம் செய்து தர்ப்பணம் செய்து ப்ராம்மண போஜனம் செய்விக்கிறார்கள், அதுவும் உசிதமென்று அறியவும்.

### 30. வ்ருத்தி ச்ரார்த்த நிரூபணம்

தகப்பனார், தன் புத்திரர்களுக்கு ஜாதகர்மா, நாமகரணம் முதலிய காரியங்களை தானே செய்ய வேண்டும். அந்த சமயத்தில் நாந்தீ ச்ரார்த்தமும் செய்ய வேண்டும்.

நாமகரணம், அன்னப்ராசனம், சௌளம், ஸீமாவர்த்தனம், ஸோமயாகம், உபநயனம், பும்ஸவனம், ஸ்னான கர்மா, அக்ன்யாதானம், விவாஹம், இவைகளில் நாந்தீ ச்ரார்த்தம் செய்யவேண்டும். இவைகளில் ஜாத கர்மா முதல் விவாஹப்பர்யந்தம் உள்ள காரியங்களில் தகப்பனார் புத்திரனை உத்தேசித்து நாந்தீ செய்யவேண்டும் என்று அறியவும்.

நாந்தீ ச்ரார்த்தம் பூர்வாஹ்ணத்தில் செய்ய வேண்டும். அஹஸ்ஸை மூன்றாக விபாகம் செய்தால் பூர்வாஹ்ணம் பத்து நாழிகைகள் உள்ள காலமாகும் (பத்து மணிக்குள் செய்வது) அதில் நாந்தீ ச்ராத்தம் செய்யவேண்டும் என்பது கருத்து, நாந்தீ ச்ரார்த்ததில் தயிர், இலந்தைப் பழம், அக்ஷதை கலந்த பிண்டங்களினால்

பிண்ட ப்ரதானம் செய்யவேண்டும். எள், ஸ்வதாசப்தம், பூணூலை இடமிட்டுக் கொள்வது இவைகள் கூடாது. தக்ஷிணாக்ரமாக தர்ப்பங்கள் போடக்கூடாது. ப்ராம்மணர்கள் தனம் முதலிய வசதி இல்லையேயானால் ஹிரண்ய ரூபமாக செய்யலாம். சில கர்மாக்களைச் சேர்த்து ஒரே ஸமயத்தில் செய்யும் பொழுது நாந்தீ ச்ரார்த்தம் ஒரு தடவை செய்தால் போதும் என்று அறியவும்.

## 31.ச்ரார்த்தத்தில் தேச காலங்கள் நிரூபணம்

நல்ல தேச காலங்களில் யோக்யனான ப்ராம்மணனிடத்தில் ச்ரத்தையுடன் முறைப்படி பித்ருக்களை உத்தேசித்து எது கொடுக்கப்படுகிறதோ அது ச்ரார்த்தமென்று கூறப்படுகிறது. அது இரண்டு விதமானது. ஒருவனை உத்தேசித்துச் செய்யப்படும் ச்ரார்த்தம் ஏகோத்திஷ்டம் என்றும், மூன்று பேர்களை உத்தேசித்துச் செய்யப்படும் ச்ரார்த்தம் பார்வணம் என்றும் சொல்லப்படுகிறது.

ஏகோத்திஷ்டம் என்றும், பார்வணம் என்றும் ச்ரார்த்தம் இரண்டுவிதம், இந்த ச்ரார்த்தங்கள் நித்யம், நைமித்தகம், காம்யம் என்று மூன்று விதமாகச் சொல்லப்படுகிறது. அதாவது, ம்ருதாஹச்ராத்தம் (ப்ரதி தினம் பித்ருக்களை உத்தேசித்து ஒரு ப்ராம்மணனுக்குப் போஜனம் செய்விக்கும் ச்ராத்தம்). தர்ச ச்ராத்தம் மஹாளய ச்ரார்த்தம் இவைகள் நித்யமென்றும், ப்ரேத ச்ரார்த்தம் ஸபிண்டீகரண ச்ராரேத்தம் (ஸங்க்ரமண ச்ராத்தம்) க்ரஹண ச்ராத்தம் ஸோத கும்ப ச்ரார்த்தம் இவைகள் நைமித்தகமென்றும், மன்வாதி ச்ரார்த்தம்,

யுகாதி ச்ரார்த்தம், மஹோதய ச்ரார்த்தம், வ்யதீபாத ச்ராத்தம் இவைகள் காம்யமென்றும் மூன்று விதங்களாகக் கூறப்படுகின்றன.

தேசம், காலம், யோக்ய ப்ராம்மணன், த்ரவ்யம், கர்த்தா, பித்ருக்கள், இவைகள் ச்ரார்த்த பூர்த்திக்கு காரணங்கள் என்று அறியவும்.

தேவலர்:— இயற்கையான ப்ரதேசங்களிலும், மலைகளிலும், புண்ணிய தீர்த்தங்களிலும், புண்ணிய ஸ்தலங்களிலும், ஏகாந்தமானதும் சுத்தமாயும் இருக்கிற பிரதேசங்களில் செய்யும் ச்ரார்த்தங்கள் பித்ருக்களுக்கு ஸந்தோஷத்தைக் கொடுக்கின்றன என்று அறியவும். கோமயத்தினால் மெழுகின சுத்தமான மண்தரையுள்ள தன் க்ருஹத்தில் ச்ரார்த்தம் செய்வது ச்லாக்கியமானது.

வ்யாஸர்:— புஷ்கரம், மஹோததி, ப்ரயாகம், காசீ, குருஜாங்கலம் இந்த க்ஷேத்ரங்களில் செய்யப்பட்ட ச்ரார்த்தம், ஜபஹோமதபசுகள், அக்ஷயமான பலத்தைக் கொடுக்கின்றன.

எந்த புருஷன் கயாசீர்ஷத்திலும் அக்ஷயவடத்திலும் ச்ரார்த்தம் செய்வானோ அந்த மஹா புருஷன் நம் வம்சத்தில் பிறப்பானா என்று பித்ருக்கள் நினைத்து சொல்லுகிறார்கள்.

புண்ணிய தீர்த்தங்களில் ப்ராம்மணனை பரீக்ஷை செய்யவேண்டாம். அன்னத்தை விரும்பி வந்தவனை போஜனம் செய்விக்கவும், ஒரு காலும் பரீக்ஷிக்க வேண்டாம் என்று மனு சொல்லுகிறார்.

அமாவாஸ்யை, வ்யதீபாதம், ஸங்க்ரமணம், வைத்ருதி, அஷ்டகைகள், மன்வாதிகள், யுகாதிகள், மஹாளய பக்ஷம், சந்த்ர ஸூர்ய க்ரஹணங்கள், கஜச்சாயை, த்ரவ்யம், நல்ல ப்ராம்மணர்கள் இவைகளின் லாபம், இவைகள் ச்ரார்த்த காலங்கள் என்று கூறப்படுகிறது.

தைவ கர்மாக்களில் ப்ராம்மணர்களை பரீக்ஷிக்காமல் உபயோகப்படுத்தலாம். பைத்ருகமான கர்மாக்களில் ப்ராம்மணர்களை பரீக்ஷிக்கவேண்டும். குல சுத்தி இருக்கிறதா, ச்ரோத்ரியனா, ஆசாரமுள்ள வனா என்று பார்க்கவேண்டும் என்று அறியவும்.

மனு: — எவனுடைய பிதா வேதாத்யயனம் செய்யாமல் புத்ரன் பூர்ணமாக வேதாத்யாயனம் செய்தவனோ, எவனுடைய பிதா பூர்ணமாக வேதாத்யயனம் செய்து புத்ரன் வேதாத்யயனம் செய்யவில்லையோ இந்த இடங்களில் எவனுடைய புத்ரனை ச்ரார்த்தத்திற்கு வரிப்பது என்ற விஷயத்தில், பூர்ணமாக வேதாத்யயனம் செய்தவரைத் தகப்பனாராக அடைந்த புத்ரன் ஸ்வயம் அத்யயனம் செய்யா விட்டாலும் ச்ரார்த்தத்திற்கு வரிக்கத் தகுந்தவன்.

வேதாத்யயனம் செய்தவனும் மிகவும் பூஜிக்கத் தகுந்தவனாயுமிருக்கிற ப்ராம்மணனுக்குக் கொடுத்த த்ரவ்யமானது மஹாபலத்தைக் கொடுக்கும். ஆகையால் உயர்ந்த ப்ராம்மணர்களை தேவ பித்ரு காரியங்களில் வரித்துப் போஜனாதிகளால் பூஜிக்கவேண்டும்.

காயத்ரீ ஜபத்தில் ச்ரத்தையுள்ளவன், நியமத்துடன் இருப்பவன் உயர்ந்தவன். அந்த ப்ராம்மணனை

பித்ருக் காரியங்களில் வரிக்கலாம். நான்கு வேதம் தெரிந்தும் கண்ட இடங்களில் புஜித்துக் கொண்டும், எல்லாவற்றையும் விற்றுப் பிழைப்பவனும், ஸ்னான ஸந்த்யை இல்லாதவனுமான ப்ராம்மணன் பித்ரு காரியங்களுக்கு உகந்தவனல்ல என்று அறியவும்.

அக்னி ஹோத்ரம் செய்கிறவன், நியாய சாஸ்திரமறிந்தவன், ஆறு அங்கங்களையும் அறிந்தவன், மந்திர ப்ராம்மணமறிந்தவன், தர்மங்களை ரக்ஷிப்பவன், குரு தேவதை, அக்னி இவர்களை பூஜிப்பவன், ஞானீ, சிவ பூஜாரதன், விஷ்ணு பக்தி உள்ளவன் இவர்கள் பங்க்தி பாவனர்கள். ஆகையால் பித்ரு காரியங்களுக்கு வரிக்கலாம் என்று கருத்து. ஸன்யாஸிகள் க்ராமத்தில் இருந்தால் அவர்களிடம் தெரிவித்துவிட்டு ச்ராத்தம் செய்யவேண்டும்.

அனத்யாயகாலமான அமாவாஸ்யை ப்ரதமை முதலிய காலங்களில் வேதம் சொல்லுகிறவனும், ஸதாசாரம், சௌசம் இவைகள் இல்லாதவனும், சதுர்த்தனுடைய அன்ன ரஸத்தால் சரீரத்தை வளர்த்தவனும் பங்க்தியை தூஷிப்பவர்களாவார்கள் என்று அறியவும்.

எந்த மாஸத்தில் ச்ரார்த்தம் வருகிறதோ அந்த மாதத்தில் அல்லது அந்த பக்ஷத்தில் க்ஷௌரம், பரான்னம், ஸ்திரீ ஸங்கம் இவைகளை த்யாகம் செய்யவேண்டும்.

கோமயம், ஜலம் இவைகளினால் ச்ரார்த்த பூமியையும், பாத்திரங்களையும் சுத்தி செய்யவேண்டும். பிறகு ச்ரார்த்த பூமியில் எள்ளை இறைக்க வேண்டும்.

யவை, நெல், கோதுமை, எள், பயறு, கடுகு, பரியங்கு, கோவிதாரம், அவரை இவைகள் ச்ராத்தத்திற்கு உரியவைகள்.

உளுந்து இல்லாமல் செய்த ச்ரார்த்தம் செய்ததாகக் கருதப்படவில்லை. ஆகையால் உளுந்து அவசியமானது என்று அறியவும்.

தயிர், பால் இவைகளுடன் அன்னமும், பசு நெய்யும், சர்க்கரையும் ச்ரார்த்தத்தில் கொடுக்கவும். அது ஒரு மாதம் பித்ருக்களை திருப்தி செய்கிறது என்று கேசவர் கூறுகிறார்.

தேனால் திருப்தி அடைந்த பித்ருக்கள் விரும்புகிற பொருளைக் கொடுக்கிறார்கள். ஆகையால் தேன் அவசியம் ச்ரார்த்தத்தில் போடவும். பலாப்பழம், வாழைப்பழம், மாதுலம்பழம், மாம்பழம், த்ராக்ஷை, இவைகளும், பாகல், வெள்ளரி, அவரை, புடல், வாழைக்காய், கருவேப்பலை, கருணைக்கிழங்கு, இஞ்சி, எலுமிச்சை, இவைகளும் அவசியம் ச்ரார்த்தத்தில் உபயோகப்படுத்தவேண்டும்.

ச்ரார்த்தத்தில் தனது சக்திக்குத் தகுந்தவாறு அவசியம் வஸ்த்திரம் கொடுப்பது ச்லாக்கியமானது.

1. 12 நாழிகைக்கு மேல் வரித்த ப்ராம்மணர்களுக்கு ஸ்னானத்திற்கு தைலம், சூர்ணம் முதலியவைகளைக் கொடுத்து ஸ்நானம் செய்வித்துப் பிறகு கர்த்தா ஸ்நானம் செய்யவும். த்வாதசியில் நெல்லி சூர்ணம் கொடுக்கவும்.

2. ஆவாஹனம், அர்க்யம், ஸங்கல்பம், பிண்டதானம், திலோதகம், அக்ஷய்யம், ஆஸனம், பாத்யம், அன்னதானம் இவைகளில் நாமகோத்ரங்களைச் சொல்லவும்.

3. தேவர்களின் ஆவாஹணத்தில் வலது பாதம், இடது பாதம், வலது முழங்கால், இடது முழங்கால், வலது தோள், இடது தோள், சிரஸ் இவைகளில் அக்ஷதைகள் போடவும். பித்ருக்க ளின் ஆவாஹண்த்தில் சிரஸ், இடது தோள், வலது தோள், இடது முழங்கால், வலது முழங்கால், இடது பாதம், வலது பாதம், இவை களில் திலங்களைப் போடவும்.

4. ப்ராம்மணர்கள் வீண் பேச்சுப் பேசக்கூடாது.

5. தேவர்களுக்குக் கட்டை விரலை க்ரஹிக்காம லும், பித்ருக்களுக்கு கட்டைவிரலுடனும் ஆமந்த்ரணம் செய்யவேண்டும்.

6. பாதத்தின் குணதோஷங்களைச் சொல்லக்கூடாது.

இவ்விதம் அநேக நியமங்கள் இருக்கின்றன. பெரியவர்களிடம் தெரிந்து கொள்ளவும்.

பித்ருக்களை வஸுக்களாயும், பிதாமஹரை ருத்ரர்களாயும், ப்ரபிதாமஹரை ஆதித்யர்களாயும் வேதம் கூறுகிறது. ம்ருதாஹச்ஶ்ராத்தத்தைத் தவிர மற்ற ச்ராத்தங்களை ஆமரூபமாயும், ஹிரண்ய ரூபமாயும் செய்யலாம்.

மற்ற புண்ணிய கால ச்ராத்ததினங்களில் சக்தியற்றவன், பசுக்களுக்கு ஒரு நாள் போதுமான புல்களை போடவேண்டும். பிண்டங்கள் போடலாம். தில தர்ப்பணம் பித்ருக்களை உத்தேசித்துச் செய்யலாம். ஸ்நானம் செய்து உலர்ந்த வஸ்த்திரம் தரித்துத் தர்ப்பணம் செய்யவேண்டும்.

ச்ரார்த்தம் செய்யமுடியாதவன் விதிக்கப்பட்ட அனுகல்பத்தை (ப்ரதிநிதி) ஜாதி, அவஸ்தை இவைகளை அபேக்ஷித்து ச்ரத்தையுடன் அனுஷ்டித்தால் முக்கிய கல்பத்தை அனுஷ்டித்த பலன் கிடைக்கிறது என்று அறியவும்.

## 32. ச்ரார்த்தத்தைப் புகழ்வது.

ஸுமந்து: ச்ராத்தத்தைக் காட்டிலும் மனிதனுக்கு க்ஷேமத்தைக் கொடுக்கக்கூடிய வேறு காரியம் கிடையாது. ஆகையால் க்ஷேமத்தை விரும்புகிறவன் ச்ராத்தத்தை சிரத்தையுடன் செய்யவேண்டும்.

யமன்: எவர்கள் பித்ருக்களையும், தேவர்களையும், அக்னியையும், பூஜிக்கிறார்களோ அவர்கள் ஸர்வப் பிராணிகளுக்கும் அந்தர்யாமியான விஷ்ணுவைப் பூஜிக்கிறார்கள். ஆயுஸ், புத்ரர்கள், புகழ், ஸ்வர்க்கம், யசஸ், புஷ்டி, பலம், பாக்யம், பசுக்கள், சுகம், தனம், தான்யம் இவைகளைப் பித்ரு பூஜனத்தால் அடைகிறார்கள். ஆகையால் க்ருஹஸ்தர்கள் ச்ரத்தையுடன் ச்ராத்தத்தைச் செய்யவேண்டும் என்பது கருத்து.

ஸம்க்ஷேப தர்ம சாஸ்த்திரத்தில் ச்ரார்த்த தர்ம ப்ரகரணம் ஸம்பூர்ணம்.

## ஸம்க்ஷேப தர்மசாஸ்திரத்தில் திதி நிர்ணய ப்ரகரணம்.

### 1. கால நிரூபணம்.

இனி காலத்தினுடைய ஸ்வரூபம் லக்ஷணங்கள் தெரிவிக்கப்படுகிறது. காலமானது கர்மாவுக்கு அங்கமாக அமைகிறது.

ப்ரதானமான கர்மாவுக்கு அங்கமாக இருந்துதான் திதி வார நக்ஷத்திரங்கள் புண்ணிய பாபங்களுக்கு ஸாதனமாக ஆகிறது; ஸ்வதந்திரமாக திதி வாரம் முதலியவை புண்ணிய பாபங்களுக்கு காரணமாகாது.

### 2.நிமிஷம் முதலியவைகளின் ஸ்வரூபம்.

கண் இமை கொட்டுவது ஒரு நிமிஷம், இரண்டு நிமிஷங்கள் ஒரு த்ருடி என்பது, இரண்டு த்ருடிகள் ஒரு லவம் என்பது, இரண்டு லவங்கள் ஒரு க்ஷணம் என்பது, பத்து க்ஷணங்கள் ஒரு காஷ்டா என்பது, முப்பது காஷ்டைகள் ஒரு கலா என்பது, முப்பது கலாக்கள் ஒரு முகூர்த்தம் என்பது,/முப்பது முகூர்த்தம் ஒரு அஹோராத்தம் (ஒரு இரவு பகல்) இப்படி பகவான் ஹரர் கூறுகிறார்.

### 3. திதி ஸ்வரூபம்.

சூர்யன் சந்திரன் இவர்களுடைய சேர்க்கை அமாவாஸ்யை எனப்படும், நன்றாக விலகியிருப்பது பூர்ணிமை எனப்படும். சந்திரனுடைய கலை ஸூர்யனி டத்தில் ஒவ்வொன்றாகப் பிரவேசிப்பது க்ருஷ்ண

பக்ஷத்தினுடைய திதிகள். பிறகு ஸூர்யனிடமிருந்து ஒவ்வொரு கலையாக வெளிவருவது சுக்லபக்ஷ திதிகள் என்று சொல்லப்படுகிறது.

4. கண்ட திதிகளுடைய ஸ்வரூபம்.

எந்த திதிகள் ஸூர்யோதயத்திலிருந்து மறுநாள் ஸூர்யோதய பர்யந்தம் இருக்கின்றனவோ இவைகள் சுத்த திதிகள், சுத்தா என்ற ஸம்ஞை அடைகிறது, திதிக்கு ஏற்பட்ட அறுபது நாழிகள் இருக்கிறதல்லவா என்று கருத்து.

தர்மங்கள் அதர்மங்கள் காரணமாக திதிகள், கர்வா, தர்ப்பா, ஹிம்சரா என்று மூன்றுவகைப்படும். திதியானது ஸமமாக இருக்குமேயாகில் கர்வா என்றும் திதியானது விருத்தி அடைந்தால் தர்ப்பா, என்றும், திதியானது குறைந்தால் ஹிம்சரா என்றும் சொல்லப் படுகிறது.

நிமித்தமான காலத்தை அனுசரித்து சாஸ்த்திரங்களில் சொல்லப்பட்ட கர்மாக்களை அனுஷ்டிப்பது, சாஸ்த் திரத்திரங்களில் நிஷேதிக்கப்பட்டதை செய்யாமல் இருப்பது என்று ஏற்படுகிறது. எந்த திதிகள் கர்மாக் களுக்கு உகந்ததோ அது பூஜ்யமானது. எந்த திதியில் வேண்டாம் என்று கார்யங்கள் நிஷேதிக்கப்பட்டிருக் கிறதோ அந்த காலம் மாத்திரம் தெரிந்தால் போதும். ஆகையால் அதில் பூஜ்யதா விசாரம் கிடையாது என்பது கருத்து. சுத்தமான பூர்ண திதியில் விதிக்கப் பட்ட கார்யங்கள் செய்யலாம், வேண்டாம் என்ற விசாரத்திற்கு இடமில்லை. கண்ட திதிகள் விஷயத்தில்

தான் விசாரிக்கவேண்டும், எது யோக்யமானது கர்மாவுக்கு என்று. ஆகையால் கண்ட திதிகளைப் பற்றி விஜாரிப்போமாக.

### 5. திதிகளுடைய வேதை விசாரம்.

வேதை என்பது ஒரு திதிக்கு மற்றொரு திதியினுடைய ஸம்பந்தம் எனப்படும். ப்ரதமைக்கு பூர்வத்திலுள்ள அமாவாஸ்யை ஸம்பந்தம் ஒன்று. பிறகு வரக்கூடிய த்விதீயா ஸம்பந்தம் மற்றொன்று.

வேதை ஸ்வரூபம் இவ்விடம் சொல்லப்படுகிறது. திதியானது மற்ற திதியினால் ஸம்பந்தப்படாமல் இருந்தால் அது சுத்த திதி என்று கூறப்படுகிறது. வேறு திதிகளுடைய ஸம்பந்தம் இருந்தால் இது வித்தா திதி என்று கூறப்படுகிறது. அது இரண்டு விதம். ஒன்று உதயகாலத்தில் ஆரம்பித்து மூன்று மூகூர்த்தம் (6 நாழிகை) உள்ள திதியானது மற்ற திதியில் ஸம்பந்தப்பட்டால் வித்தா திதி என்று ஒருவகைப்படும். பின் திதியானது மறுநாள் அஸ்தமனத்திற்கு முன்பு மூன்று முகூர்த்தம் (6 நாழிகை)இருந்து முன் திதியோடு ஸம்பந்தப்படும்போது அந்த திதயானது வித்தா திதி என்று சொல்லப்படுகிறது. அதாவது உதய காலத்தில் மூன்று மூகூர்த்தம் உள்ள தர்ச திதியினால் ஸம்பந்தப் பட்ட ப்ரதமை வித்தா என்றும், மறுநாள் அஸ்த மனத்திற்கு முன்பு மூன்று முகூர்த்தம் உள்ள த்விதீயை ஸம்பந்தப்பட்ட ப்ரதமையும் வித்தா என்று கூறப் படுகிறது. உதயா ஸ்தமய காலத்தில் 6 நாழிகைக்கு குறைவாக இருக்கும் திதி ஸம்பந்தம் வேதையாக கருதப்படவில்லை. அதிகமாக இருக்கலாம் என்பது

கருத்து. இதைக் குறிப்பிடும் போது பூர்வ வித்தை திதி உத்தரவித்தை திதி என்று குறிப்பிடுவார்கள்.

### 6. ப்ரதமா திதி நிர்ணயம்.

சுக்லபக்ஷத்தில் அமாவாஸ்யை வித்தமான ப்ரதமை யும் க்ருஷ்ணபக்ஷத்தில் த்வீதியை வித்தமான ப்ரதமை யும் உபவாஸத்திற்கு உகந்த காலமாகும். சுக்ல ப்ரதமை பூர்வ வித்தம் ச்லாக்யம். ஆனால் அபராண் ணத்தில் ப்ரதமை ஸம்பந்தம் இருக்கவேண்டும். அது அகப்படாவிடில் ஸாயாஹ்னத்திலாவது ப்ரதமை ஸம்பந்தம் இருக்கவேண்டும். அந்த சுக்ல ப்ரதமையில் உபவாசம் இருக்க தகுந்தது.

பகல்வேளையை ஐந்து பாகமாக விபாகம் செய்கிறோம். ஒரு பாகத்திற்கு ஆறு நாழிகைகள், ஆக ஐந்து பாகத்திற்கு 30 நாழிகைகள். ப்ராத:, ஸங்கவ, மத்யாஹ்ன, அபராண்ண, ஸாயாஹ்னம் என்று ஐந்து பாகங்கள். இவைகள் சாஸ்திரங்களில் முக்கியமாகக் கருதப்படுகிறது.

ஒரு பகல் வேளையை பூர்வாண்ஹம் அபராண்ஹம் என்று இரண்டாயும், பூர்வாண்ஹம் மத்யாஹ்னம் அபராஹ்ணம் என்று மூன்றாயும், பூர்வாஹ்ணம் மத்யாஹ்னம் அபராண்ஹம் ஸாயாஹ்னம் என்று நான்காயும், ப்ராத: ஸங்கவ: மத்யாஹ்னம்: அபராஹ்ணம் ஸாயன்ஹ்னம்: என்று ஐந்தாயும் விபாகம் செய்கிறார்கள். இவைகளில் ஐந்தாக விபாகம் செய்தது சிலாக்யமானது.

எந்த திதியில் ஸூர்யாஸ்தமனம் ஏற்படுகிறதோ, அந்த திதி தானம், பாராயணம், உபவாஸம் முதலிய

கர்மாக்களுக்கு சிலாக்கியமானது. அந்த திதியும் மூன்று முகூர்த்தத்திற்குக் குறையக்கூடாது. அதிகமாக இருக்கலாம். அந்த மாதிரி உள்ள திதிதான் கர்மாவுக்கு யோக்யமானது என்பது கருத்து.

ஸூர்யாஸ்தமன காலத்தில் திதி வ்யாப்தியாக இருக்கவேண்டியது என்றால் மூன்று முகூர்த்தமாவது இருக்கவேண்டும். அதுதான் தர்ம கார்யங்களுக்கு ஸம்பூர்ணமான திதயாக பெரியோர்கள் சொல்லுகிறார்கள்.

திதி, நக்ஷத்ரம், இவைகளை அனுசரித்து உபவாஸம் அனுஷ்டித்தால் திதி, நக்ஷத்ரங்கள் இவைகளுடைய முடிவில் பாரணம் செய்யவேண்டும். அப்படிச் செய்யாவிட்டால் வ்ரதபங்கம் ஏற்படும். இது வேதை உள்ள திதி. நக்ஷத்ரங்களை அனுசரித்தது. சுத்த திதி நக்ஷத்ரங்களில் இவை ஸம்பவிக்காது. சிவராத்திரி விரதம் சிரவண விரதம் இவைகளிலும் திதியினுடைய முடிவில் பாரணம், சிரவண நக்ஷத்ர முடிவில் பாரணம் என்பதும் கிடையாது.

திதி, நக்ஷத்ரம் இவைகளுடைய முடிவில் பாரணம் எங்கே விதிக்கப் பட்டிருக்கிறதோ அந்த இடத்தில் திதி நக்ஷத்திரம் மூன்று யாமத்திற்கு மேல் இருந்தால் ப்ராத: காலத்திலேயே பாரணம் செய்யலாம்.

பூர்வ வேதை உள்ள முக்ய திதி அனுஷ்டிக்க முடியவில்லையேயானால் உத்ர வேதை உள்ள திதிகளை அனுசரித்து உபவாஸ திதிகளை அனுஷ்டிக் கலாம்.

எந்த விரதத்திற்கு எந்த காலம் குறிப்பிட்டிருக்கிறதோ, அந்தக் காலத்தில் வ்யாபித்த திதியைப் பார்த்து வ்ரதம் அனுஷ்டிக்கவேண்டும்.

## 7. ஏகபக்த நிர்ணயம்.

சுத்தமான உபவாஸம் இருக்க முடியாமல்போனால் ஏகபக்தம் (ஒரு வேளை சாப்பிடுவது) அனுஷ்டிக்கலாம். பகல் வேளை பாதிக்குமேல் ஏகபக்தம் அனுஷ்டிக்கலாம். அதற்கு 15 நாழிகைக்குமேல் 18 நாழிகைக்குள் முக்ய காலம். பிறகு அஸ்தமனத்திற்கு முன்பு உள்ள காலம் கௌண காலமாகும் என்பது கருத்து.

ஏகபக்தம், தேவபூஜை, விரதங்கள் எல்லாவற்றிற்கும் மத்யாஹ்ன வ்யாபியான திதி காரணம் என்று கூறப்படுகிறது. இது பொதுவான சாஸனமாகும்.

இந்த மத்யாஹ்னவ்யாப்தியான திதி விஷயத்தில் ஆறு ப்ரகாரமாக நிர்ணயம் செய்கிறோம்.

1.முன்நாள் மட்டும் மத்தியாஹ்ன ஸம்பந்தம் உள்ளது. 2. பின் நாள் மட்டும் மத்தியாஹ்ன ஸம்பந்தம் உள்ளது. 3. இரண்டு நாளும் மத்தியாஹ்ன ஸம்பந்தம் உள்ளது . 4. இரண்டு நாளும் மத்யாஹ்ன ஸம்பந்தம் இல்லாதது. 5. இரண்டு நாளும் மத்யாஹ்ன காலத்தில் ஸமமாக கொஞ்ச ஸம்பந்தமுள்ளது. 6. இரண்டு நாளும் மத்தியாஹ்ன காலத்தில் ஜாஸ்தி குறைவாக ஸம்பந்தமுள்ளது, என்ற ரீதியில் திதிகள் காணப்படுகிறது.

இவைகளில் முதல் இரண்டாவது விஷயங்களில் மத்தியான வ்யாப்தி உள்ளதை கிரஹிக்க வேண்டும். மூன்றாவது விஷயத்தில் பூர்வ வித்தை திதியை ச்லாக்யமாக சொல்லுவதாலும், கௌண கால வ்யாப்தி அதிகமாக இருப்பதாலும், முதல் நாள் மத்யான்ஹ திதிதான் கிராஹ்யமாகும். நான்காவது விஷயத்தில் இரண்டு நாளும் மாத்யாஹ்ன வ்யாப்தி இல்லை என்றாலும் பூர்வ வித்தை திதிதான் உயர்ந்தது என்பதால் முதல் நாள் தான் கர்மார்ஹமானது. ஐந்தாவது விஷயத்தில் ஸமமாக இரண்டு நாள் கொஞ்சம் மத்தியாஹ்ன வ்யாப்தி இருந்தாலும் பூர்வ வித்தை ச்லாக்யம் என்ற ரீதியில் முதல் நாள் திதிநாள் கிராஹ்யமாகும். ஆறாவது விஷயத்தில் ஜாஸ்தி குறைவாக இரண்டு நாள் மத்யாஹ்ன வ்யாப்தி இருந்தால் என்றைக்கு மத்யாஹ்ன வ்யாப்தி ஜாஸ்தியாக திதிக்கு இருக்கிறதோ அந்த திதி கிராஹ்யமாகும் என்பது கருத்து. இந்த மாதிரி ஏகபக்ஷ விஷயம் அனுஷ்டிக்கவும். பூஜை, விரதம் இந்த விஷயங்களிலும் இந்த மாதிரி பார்த்து அனுஷ்டிக்கவும்.

### 8. நக்த வ்ரத நிர்ணயம்.

இனி நக்த விரதம் நிருபிக்கப்படுகிறது.

மார்க்க சீர்ஷமாத சுக்லபக்ஷ பிரதமா திதியில் இரவில் நக்த விரதம் அனுஷ்டித்து விஷ்ணுவை பூஜிக்க வேண்டும். நக்த விரதம் என்றால் பகலில் சாப்பிடாமல் இரவில் சாப்பிடவேண்டும் என்பது தாத்ரபர்யம்.

நக்த விரதத்தில் அஸ்மனத்திற்கு முன்பு மூன்று முகூர்த்தம் (6நாழிகைகள்) திதி இருக்கவேண்டும்.

அஸ்தமனத்திற்கு பின்பு மூன்று முகூர்த்தம் இருக்கவேண்டும். இந்த திதிதான் நக்த வ்ரதத்திற்கு சிலாக்கியமானது. அஸ்தமனத்திற்கு முன்பு ஸாயங்கால வ்யாப்தி திதியானது கௌண காலமாகும். அஸ்தமனத்திற்குப் பின்பு வ்யாப்தி உள்ள திதி முக்ய காலமாகும். ப்ரதோஷ வ்யாப்தி உள்ள திதி நக்த வ்ரதத்திற்கு சிலாக்கியமானது. அதில் விசேஷம் ஸன்யாஸிகள், விதவைகள், இரவில் சாப்பிடக்கூடாது. ஆகையால் கௌண கால வ்யாப்தி உள்ள திதி அவர்களுக்கு உயர்ந்தது. நக்த வ்ரதத்திற்கு க்ருஹஸ்தர்கள் இரவில் சாப்பிடலாம். ஆகையால் ப்ரதோஷ வ்யாப்தியான திதி க்ருஹஸ்தர்களுக்கு உகந்தது. (நக்தம் இரவு, ப்ரதோஷம் இரவு ஆரம்பகாலம்).

ஸூர்யாஸ்தமனமான பிறகு மூன்று முகூர்த்த காலம் ப்ரதோஷம். அப்பொழுது நக்த வ்ரதம் அனுஷ்டிக்கவேண்டும். இந்த விஷயத்திலும் திதிவ்யாப்தி ஆறுவிதமாக விபாகம் செய்து முன்பு மாதிரி பார்த்து அனுஷ்டிக்கவேண்டும்.

ப்ரதோஷ வ்யாப்தி இல்லாவிடில் ஸாயங்காலத்தில் நக்த வ்ரதம் அனுஷ்டிக்கலாம். அதாவது வெய்யிலுடைய நிழல் இரண்டு மடங்காக தெரிந்த காலம் பகல் நக்தத்திற்கு உகந்தது. இது க்ருஹஸ்த விஷயம். நக்த விரதத்தில் பானுவாரம் ஸம்பந்தப்பட்டால் க்ருஹஸ்தன் கூட இரவில் சாப்பிடக்கூடாது அன்றைய தினம் பகலில் நக்தவ்ரதம் அனுஷ்டிக்கவேண்டும்.

ஞாயிற்றுக்கிழமை அமாவாஸ்யை பூர்ணிமா இவைகளில் இரவு போஜனம் நிஷேதம்; சதுர்தசீ, அஷ்டமீ

இவைகளில் பகலில் போஜனம் நிஷேதம் என்று அறிந்து கொள்ளவும்.

எவ்விடத்தில் சாஸ்திரம் போஜனம் செய்யக்கூடாது என்று நிஷேதிக்கிறதோ அந்த காலம் போனால் சாப்பிடலாம் என்று கருத்து. ராத்ரியில் பர்வ போஜனம் நிஷேதிக்கப்பட்டிருக்கிறது. க்ரஹண காலத்தில் விமோசனம் ஆன பிறகு சாப்பிடலாம் என்கிறார். இதிலிருந்து அந்த காலத்தில் நிஷேதம் இருப்பதால் திதி முதலியவைகள் சென்ற பிறகு சாப்பிடலாம் என்பது கருத்து. மஹாநிசியில் க்ரஹணம் பிடித்தால் சாப்பிடக் கூடாது அது வேறு நிஷேதமாகும்.

ஸ்னானம், தானம், இவைகளுக்கு உத்ரவித்தையான திதி க்ரஹிக்கவேண்டும். பூர்வாஹ்ன காலம் ப்ராத: காலமாகும். அப்பொழுதுதான் ஸ்நானதானாதிகள் செய்யத்தகுந்தது என்று கருத்து.

### 9. த்விதீயை திதி நிர்ணயம்.

த்வீதீயை திதியானது பரவித்தையாக உபவாஸம் முதலியவை க்ரஹிக்க வேண்டும். இதேமாதிரி ஏகாதசீ, அஷ்டமீ, ஷஷ்டி, த்விதீயா, சதுர்தசீ த்ரயோதசீ, அமாவாஸ்யை இவைகள் பரவித்தையானது தான் உபவாஸத்திற்கு ச்லாக்யமானது.

### 10. த்ருதீயா நிர்ணயம்.

ரம்பா வ்ரதம் த்ருதீயை அன்று செய்யவேண்டும். அது பூர்வ வித்தையான த்ருதீயையில் அனுஷ்டிக்க

வேண்டும். அதைத் தவிர வேறு பூஜை உபவாஸங்களில் த்ருதீயை பரவித்தையாக இருக்கவேண்டும் என்பது கருத்து.

### 11. சதுர்த்தீ நிர்ணயம்.

கணபதி வ்ரதமானது த்ருதீயையோடு கூடிய சதுர்த்தியில் அனுஷ்டிக்கவேண்டும். ஆனால் சதுர்த்தி மத்யாஹ்ன காலத்தில் இருக்கவேண்டும். அது மாதிரி இல்லாவிட்டால் மறுநாள் மத்தியாஹ்னத்தில் சதுர்த்தி இருந்தால் த்ருதீயையோடு கூடிய சதுர்த்தீயை விட்டு மறுநாள் சதுர்த்தி வ்ரதம் அனுஷ்டிக்கவேண்டும். சதுர்த்தி வ்ரதம் தவிர வேறு உபவாஸாதிகளுக்கு பரவித்தை பஞ்சமீயோடு கூடிய சதுர்த்தீதான் ச்லாக்கியமானது.

### 12. பஞ்சமீ நிர்ணயம்.

பஞ்சமீ பூர்வ வித்தையானதுதான், தேவ பித்ரு தார்யங்களுக்கு ச்லாக்கியமாக கருதப்படுகிறது. சதுர்த்தி யோடு கூடின பஞ்சமீ என்பது கருத்து.

### 13. ஷஷ்டி நிர்ணயம்.

ஷஷ்டி திதி பரவித்தையானது, உபவாஸத்திற்கு ச்லாக்கியம். ஆனால் ஸ்கந்த ஷஷ்டி பூர்வ வித்தையானது ச்லாக்யமானது.

க்ருஷ்ணாஷ்டமீ, ஸ்கந்த ஷஷ்டி, சிவராத்ரீ, சதுர்தசீ இவைகள் பூர்வ வித்தையானது தான்

அனுஷ்டானத்திற்கு உகந்தது என்று வஸிஷ்டர் சொல்லுகிறார்.

## 14. ஸப்தமீ நிர்ணயம்.

ஸப்தமி ஸம்பந்தமான ஸமஸ்தமான வ்ரதங்களிலும் ஸப்தமீ பூர்வ வித்தையானது க்ரஹிக்கவேண்டும். இது சரியாக கிடைக்காவிடில் பரவித்தையை க்ரஹிக்கலாம்.

## 15. அஷ்டமீ நிர்ணயம்.

சுக்லபக்ஷ அஷ்டமீ, சுக்ல சதுர்தசி இவைகள் பரவித்தையானது ச்லாக்யம் என்று கூறப்படுகிறது. க்ருஷ்ண பக்ஷத்தில் உள்ள அஷ்டமீ பூர்வ வித்தை யானது ச்லாக்யமானது என்று அறியவும்.

## 16. ஸ்ரீ கிருஷ்ண ஜன்மாஷ்டமீ நிர்ணயம்.

க்ருஷ்ண ஜன்மாஷ்டமீ வ்ரதம் ஸ்ரீ ஜயந்தி வ்ரதத்தைக் காட்டிலும் வேறுபட்டது என்று அறியவும். ஜன்மாஷ்டமீ வ்ரதத்திற்கு திதி முக்யம். ஸ்ரீ ஜயந்தி வ்ரதத்திற்கு ரோஹிணி யோகம் முக்யம் என்று அறியவும்.

ச்ராவண க்ருஷ்ணபக்ஷ அஷ்டமியில் க்ருஷ்ண ஜன்மாஷ்டமி வ்ரதம் அனுஷ்டிக்கவேண்டும். அதைச் செய்யாவிடில் ராக்ஷசனாகப் பிறப்பான்.

ச்ராவண மாஸ க்ருஷ்ணாஷ்டமியில் ரோஹிணி யோகம் கிடைக்குமேயானால் அதற்கு ஜயந்தி திதி என்று பெயர், அது உயர்ந்தது.

ச்ராவண மாஸத்தில் அல்லது பாத்ரபத மாதத்தில் ரோஹிணி ஸஹித அஷ்டமீ ஸம்பவித்தால் அதற்கு ஜயந்தீ என்று சொல்லப்பட்டிருக்கிறது. அதில் ஒரு விசேஷம் ச்ராவண மாதத்தில் ஸம்பவித்த ரோஹிணி யோகம் விசேஷமாகும். அது முக்யம் என்று கருத்து. பாத்ரபத மாதத்தில் ஸம்பவித்த அஷ்டமீ ரோஹிணி யோக அனுகல்பம் கௌணமாகும்.

இவ்விடம் ச்ராவணம் பாத்ரபதம் என்பது ஆவணி மாதத்தில் வரக்கூடிய ச்ராவண பாத்ரபத மாதத்தைக் குறிப்பதாக அறியவேண்டும். புரட்டாசி மாதத்தில் பாத்ரபதத்தையும் ஆடியில் வந்த ச்ராவணத்தையும் கிரஹிக்கக்கூடாது. இது க்ருஷ்ணாஷ்டமீ ஜயந்தி வ்ரதத்தை உத்தேசித்து என்பது கருத்து.

அஷ்டமியில் ஜயந்தி யோகம் ச்ராவணத்தில் அல்லது பாத்ரபதத்தில் வரலாம். அது ஆவணி மாதத்தில் வரவேண்டும் என்பது நியமம். அது கிடைக்கா விட்டால் ச்ராவண அஷ்டமியில் ஜன்மாஷ்டமி வ்ரதம் அனுஷ்டிக்கவும். இது ஸ்மார்த்தர்களுக்குச் சொன்ன விஷயமாகும். ஸ்ரீ வைஷ்ணவர்கள் ரோஹிணி நக்ஷத்ரத்தை ப்ரதானமாக வைத்து க்ருஷ்ணாவதார புண்யகாலத்தை அறியவும்.

இவ்விடம் கிருஷ்ணாவதார காலம் பூர்ணமாக சொல்லப்படுகிறது. ஸிம்ம ராசியில் ஸூர்யன் இருக்கும் பொழுது அதாவது ஆவணி மாதத்தில் ஆகாசம் மேகத்தால் சூழ்ந்து இருக்கும்பொழுது பாத்ரபதமாக கிருஷ்ணாஷ்டமியில் பாதி ராத்ரியில் சந்திரனுடைய உதயகாலத்தில் ரோஹிணீ நக்ஷத்ர கடைசி பாதத்தில்

புதன் கிழமையில் வ்ருஷப லக்னத்தில் ஹர்ஷண யோகத்தில் கௌலவகரணத்தில் வசுதேவர் தேவகிக்கு புத்ரனாக அவதரித்தேன் என்று பகவான் ப்ரம்மாவிடம் சொல்லுகிறார்.

பத்ம புராணத்தில் சிராவணமாத அஷ்டமீ ரோஹிணியோடு கூடியதாகவும் புதன் கிழமை அல்லது திங்கள் கிழமையோடு கூடியதாக இருந்தால் வ்ரதானுஷ்டானத்திற்கு யோக்ய விசேஷ காலமாகும் என்பது கருத்து.

மாஸ பேதமானது கல்பபேதத்தை அனுசரித்து அவதாரம் ஏற்படும் என்பதைக் குறிக்கிறது

நடுநிசியில் அஷ்டமீ ரோகிணீ யோகம் இருக்க வேண்டும்.

நடுநிசி காலத்தில் இருக்கும் அஷ்டமீ ரோஹிணியை தான் புண்ணிய காலமாக கிரஹிக்க வேண்டும். அதாவது 15வது நாழிகை 16வது நாழிகை காலம் நடுநிசியாகும். அதில் ரோஹிணி யோகம் ஏற்படவில்லையேயானால் அஷ்டமியை மட்டும் புண்ணிய காலமாகக் கிரஹிக்கவேண்டும் என்பது கருத்து. ஜன்மாஷ்டமிக்கு நிசீதத்தை புண்ணிய காலமாகக்குறிக்கிறார்கள்.

அஷ்டமீயை நிசிவியாப்தியை முன் கூறிய ப்ரகாரம் வித்தை விஷயத்தில் அறியவும். நடுநிசி உள்ள அஷ்டமீ புண்ணிய காலமாகும். இந்த இடத்தில் பூர்வ வித்தை பரவித்தை என்பது விஷயமில்லை.

எந்த அஷ்டமியானது இரவு நடுநிசிக்கு பிறகு ஆரம்பித்து மறுநாள் நடுநிசிக்குள் முடிவடைகிறதோ, அந்த இடத்தில் இரண்டு ராத்ரி ஸம்பந்தம் அஷ்டமிக்கு இருந்தாலும் மறுநாள்தான் அனுஷ்டிக்கவேண்டும். காரணம் ஸங்கல்ப காலத்தி அஷ்டமி இருப்பது உயர்ந்தது. இப்படியாக தெரிந்துகொள்ளவும். இந்த ஜன்மாஷ்டமீ விரதம் அவச்யம் அனுஷ்டிக்கவேண்டும். இது ஸந்தியாவந்தனாதிகள் மாதிரி நித்யமாகக் கருதப் படுகிறது.

ஜன்மாஷ்டமியில் உபவாஸம் முக்யம். மறுநாள் பாரணம் (போஜனம்) அஷ்டமி பாக்கியிருந்தால் அதில் செய்யக்கூடாது. அஷ்டமீ திதி முடிந்த பிறகு பாரணம் செய்யவேண்டும் என்று கூறப்படுகிறது.

## 17. ஸ்ரீ ராம நவமி நிர்ணயம்.

சைத்ர மாஸ சுக்லபக்ஷ நவமி திதி புனர்வசு நக்ஷத்ரத்துடன் கூடியதாக மத்யான்ன வியாப்தியுடன் இருந்தால் சிலாக்ய புண்ணிய காலமாகும். புனர்வசு யோகமில்லாவிட்டால் சுத்த நவமியில் மத்தியான்ன கால வ்யாப்தியுடன் கூடிய திதியில் ராமநவமீ வ்ரதம் அனுஷ்டிக்கவேண்டும். இதற்கும் உபவாஸம் முக்யமாகும்.

ஸ்ரீ ராம நவமீ புண்ணிய காலம் கோடி ஸூர்ய க்ரஹணத்தைக் காட்டிலும் அதிக புண்ணியமானது. ஆகையால் ராமனை உத்தேசித்து எந்த புண்ணிய காரியம் செய்தாலும் பக்தியுடன் செய்தால் மஹா பலத்தைக் கொடுக்கும். ஸ்ரீ ராம பூஜை, அவதார கட்ட பாராயணம், உபவாஸம், ஜாகரணம், பித்ருக்களை

உத்தேசித்து தர்ப்பணம் எதுவும் செய்யலாம். மோக்ஷ பர்யந்துமான ஸகல க்ஷேமமும் ஏற்படும். இதுவும் நித்யமான வ்ரதமாகும். அனுஷ்டிக்காமல் இருந்தால் பாபம் ஸம்பவிக்கும் என்பது கருத்து.

### 18. தசாவதார கால நிர்ணயம்.

1. சைத்ர கிருஷ்ண த்ரயோதசியில்—மத்ஸ்யா வதாரம்.
2. ஜ்யேஷ்ட கிருஷ்ண த்வாதசியில் —கூர்மாவதாரம்.
3. சைத்ர கிருஷ்ண பஞ்சமியில்— வராஹா வதாரம்
4. வைசாக சுத்த சதுர்தசியில் ஸ்வாதி நக்ஷத்ரத்தில் ஸாயம் ஸந்தியா காலத்தில்—நரஸிம்மாவாதாரம்.
5. பாத்ரபத சுக்ல த்வாதசியில் ச்ரவண நக்ஷத்ரத்தில்— வாமனாவதாரம்.
6. மார்க்கசீர்ஷ கிருஷ்ண த்விதீயையில் பரசுராமா வதாரம்.
7. சைத்ர சுத்த நவமி புனர்வசு நக்ஷத்ரத்தில் — ஸ்ரீ ராமாவதாரம்
8. வைசாக சுத்த த்ருதீயையில் —பலராமாவதாரம்
9. ச்ராவண க்ருஷ்ணாஷ்டமியில் ரோஹிணியில்— ஸ்ரீக்ருஷ்ணாவதாரம்

10. பாத்ரபத சுக்ல த்விதீயையில் —கல்கி அவதாரம்.

இந்த மாதிரி தசாவதார காலங்களை தெரிந்து, முடிந்த அளவில் புண்ணிய கார்யங்களை அந்த தினத்தில் செய்வது மஹாபலத்தைக் கொடுக்கும். கொஞ்ச புண்ணியம் கோடி மடங்காகும் என்பது கருத்து.

**19. தசமீ நிர்ணயம்.**

சங்க:— ஸூர்யோதய கால வ்யாப்தியுள்ள தசமீ திதி சுக்லபக்ஷத்தில் ச்லாக்யமானது. ஸூர்யாஸ்தமன கால வ்யாப்தி உள்ளது க்ருஷ்ணபக்ஷத்தில் ச்லாக்ய மாகும் என்பது கருத்து. பார்த்து உபவாஸாதிகளை அனுஷ்டிக்கவும்.

**20. ஏகாதசீ நிர்ணயம்.**

சுக்ல க்ருஷ்ணபக்ஷங்களில் வரும் இரண்டு ஏகாதசிகளிலும் எப்பொழுதும் உபவாஸம் இருக்க வேண்டும்.

சுக்ல க்ருஷ்ணபக்ஷங்களில் வரும் ஏகாதசிகளில் உபவாஸம் அவசியம் இருக்கவேண்டும். இது நித்யம் என்று கூறப்படுகிறது. அதாவது ஜீவித்திருக்கும் பொழுது ஏகாதசியை தியாகம் செய்யக்கூடாது. அவசியம் அனுஷ்டிக்க வேண்டும்.

தனக்கு விஷ்ணுஸாயுஜ்யம், இஹலோகத்தில் சௌக்யம் ஸம்பத்துக்கள் இவைகள் அடைய

விருப்பமிருக்குமேயானால் இரண்டு ஏகாதசிகளிலும் உபவாஸமிருக்கவும்.

ஸனதகுமாரர்:— ஏகாதசி உபவாஸத்தை உல்லங்கனம் செய்யவேண்டாம். ஸுராபாணம் செய்தவனுக்கு ப்ராயச்சித்தம் உண்டு. ஆனால் ஏகாதசியை விட்டவனுக்கு ப்ராயச்சித்தம் சொல்லப்படவில்லை. ஆகையால் ஏகாதசியை அவசியம் அனுஷ்டிக்கவேண்டும். விட்டால் பாபம் ஸம்பவிக்கும். அதை பரிஹரிக்க முடியாது.

இந்த வசனங்களிலிருந்து ஏகாதசி வ்ரதம் காம்யம், அதாவது தனக்கு க்ஷேம லாபங்களை உத்தேசித்து அனுஷ்டிக்கலாம். தனக்கு சௌகர்யமிருக்கிறது என்று நினைத்து அனுஷ்டிக்காமல் இருக்கக்கூடாது. அப்படி யிருந்தால் பாபம் ஸம்பவிக்கும் என்பதால் நித்யம், ஆக நித்யகாம்யம் ஏகாதசி வ்ரதம் என்று கருத்து.

ஸ்மார்த்தர்கள் ஏகாதசீ அனுஷ்டானம் எப்படி என்பது பற்றி ஏகாதசி திதியை நிர்ணயம் செய்கிறோம்.

தசமீ வேதமுள்ள ஏகாதசீ திதி உபவாஸத்திற்கு உகந்தது இல்லை என்று சொல்லப்படுகிறது. அந்த விஷயத்தில் வைஷ்ணவர்களுக்கும் ஸ்மார்த்தர்களுக்கும் மதபேதம் காணப்படுகிறது. வைஷ்ணவர்கள் அவர் களுடைய பாஞ்சராத்ர ஆகம ரீதியில் தீக்ஷை உள்ளவர்கள் என்று சொல்லப்படுகிறார்கள். திதிகளில் அதிவேதை மஹா வேதை என்று சொல்லுகிறோம். அவைகள் வேதைகள் ஆகாது. ஸுர்யோதய கால வேதைதான் வேதை என்று சொல்லப்படுகிறது. இது ஸ்மார்த்தாகளுக்கு ப்ரமாணமான வசனம்.

இந்த ச்லோகத்திற்கு வைத்தியநாத தீக்ஷிதர் அர்த்தம் சொல்லுகிறார்: அருணோதய காலமென்பது ஸூர்யோதயத்திற்கு முன்பு நாலு நாழிகைகள், அதில் ஆரம்பத்தில் அரை நாழிகை தசமீ ஸம்பந்தம் வேதை என்பது; ஒரு நாழிகை சம்பந்தம் அதிவேதை என்பது; ஸூர்யோதய பர்யந்தம் அதாவது ஸூர்யோதய பூர்வ க்ஷணத்தில் ஸம்பந்தம் உள்ளது. அருணோதயகால பூர்ணமாக வ்யாபித்திருப்பது மஹாவேதை என்பது, ஸூர்ய உதய காலத்தில் தசமீ இருப்பது சில வினாடிகள் இருந்தாலும் போதுமானது. உதயவேதை என்பது வேதைகளுடைய லக்ஷணம்.

தசமீ திதி ஸம்பந்தத்துடன் அருணோதய காலத்தில் ஏகாதசீ இருந்தால் அது ஸ்ரீ வைஷ்ணவர்களுக்கு உபவாஸம், பூஜை இவைகளுக்கு உகந்தது அல்ல என்பது கருத்து. ஆகையால் உதய காலத்தில் தசமீ இருந்தால் அந்த தசமீ வித்தமான ஏகாதசீ ஸ்மார்த்தர் களுக்கு உபவாஸத்திற்கு உகந்தது இல்லை என்று அறியவும்.

ஸூர்யோதய காலத்தில் தசமீ ஸம்பந்தத்துடன் ஏகாதசீ காணப்பட்டால் அதை ஸ்மார்த்தர்கள் வர்ஜிக்கவேண்டும். அந்த ஏகாதசீயை அனுஷ்டித்தால் நூற்றுக்கணக்கான வருஷத்தில் ஸம்பாதித்த புண்யம் நசித்துவிடும் என்பது கருத்து.

த்வாதசீ திதியானது பாரண தினத்தில் சில வினாடிகளாவது இருக்கவேண்டும். அப்படி இல்லா விட்டால் தசமீ வேதையுடன் இருந்தாலும் ஏகாதசீ உபவாஸத்திற்கு க்ரஹித்துக் கொள்ளவேண்டியது

அவசியமாக சொல்லப்படுகிறது. இது ஸ்மார்த்த விஷயம் என்று அறியவும்.

ஏகாதசீ பூர்ணமாக இருந்து த்வாதசீ திதி மட்டும் விருத்தி அடைந்து மறுநாளும் சில நாழிகை காணப் பட்டால் வஞ்சுலீ த்வாதசீ என்று பெயர். ஆகையால் ஏகாதசீயை அந்த விஷயத்தில் விட்டு த்வாதசீ அன்று உபவாஸமிருந்து மறுநாள் பாரணை செய்யவேண்டும். விதவைகள், ஸந்யாஸிகள் இவர்கள் வித்தமான ஏகாதசீயை அனுஷ்டிக்கக்கூடாது. பாரணைக்கு த்வாதசீ இல்லாவிட்டாலும் பாதகமில்லை என்று சொல்லப்படுகிறது.

க்ருஹஸ்தன் சுக்ல பக்ஷ ஏகாதசியில் சுத்தமான உபவாஸமிருப்பது ச்லாக்கியமானது. க்ருஷ்ண பக்ஷ ஏகாதசியில் க்ருஹஸ்தன் ஸம்ஸாரியாக உள்ளவன் உபவாஸம் சுத்தமாக இல்லாமல் ஏதாவது ஒருவேளை பலஹாரம் செய்யலாம் என்று சொல்லப்படுகிறது. பானுவாரம், ஸங்கரமணம், க்ருஷ்ண ஏகாதசீ, வ்யதீபாதம், ச்ராார்த்த தினம் இவைகளில் உபவாஸம் இருக்கவேண்டாம். ஒரு வேளை அன்னத்திற்கு ப்ரதிநிதியான பலஹாரம் சாப்பிடலாம் என்று கருத்து.

ஆஷாட சுக்ல ஏகாதசீ சயன ஏகாதசீ என்றும், க்ருத்திகா சுக்ல ஏகாதசீ ப்ரபோதினீ ஏகாதசீ என்றும் கூறப்படுகிறது. அதற்கு மத்தியில் வரும் க்ருஷ்ண ஏகாதசீகளில் க்ருஹஸ்தன் அவசியம் உபவாஸம் இருக்கவேண்டும். ஆகையால் இதை தவிர மற்ற க்ருஷ்ண ஏகாதசிகளில் சுத்தமான உபவாஸம் இருக்க வேண்டாம் என்று கருத்து.

## 21. த்வாதசீ நிர்ணயம்.

க்ருஷ்ண த்வாதசீ அல்லது சுக்ல த்வாதசீ இந்த இரண்டும் ச்ரவண நக்ஷத்ரத்துடன் ஸம்பந்தப்பட்டால் அந்த த்வாதசீ உபவாஸமிருந்து த்ரயோதசியில் பாரணம் செய்யவேண்டும். ஏகாதசீ த்வாதசீ இரண்டு நாளும் உபவாஸம் இருக்க சக்தி இல்லேயேயானால் ஏகாதசியில் சுத்தமான உபவாஸத்தை குறைத்துக் கொண்டு , ச்ரவண த்வாதசியில் சுத்தமான உபவாஸம் இருக்கவேண்டும்.

ஏகாதசீ கடைசி நான்கு முகூர்த்தமும் த்வாதசீயி னுடைய முன்பு நான்கு முகூர்த்தமும் ஆக 16 நாழிகள் ஹரிவாஸரம் என்று கூறப்படுகிறது. ஆகையால் த்வாதசீ முன்பாகத்தில் பாரணம் செய்யக்கூடாது.

அல்ப த்வாதசீ விஷயத்தில் த்வாதசீ முடிவதற்குள் போஜனம் செய்வது முக்யமாகையால் காலை ஸந்தியா வந்தனம் மாத்யான்ஹிகம் ப்ரம்மயக்ஞம், மற்ற ஔபாஸனம், பூஜை, வைச்வதேவம், ஆக எல்லா கர்மாக்களையும் விடியற் காலத்தில் ஆரம்பித்து செய்யலாம் என்று கூறப்படுகிறது.

ஸங்கடமான விஷயத்தில் த்வாதசிக்குள் பாரணம் செய்யமுடியாவிட்டால் ஜலத்தினால் பகவானை ஸ்மரித்து பாரணம் செய்துவிட்டு பிறகு போஜனம் செய்யலாம். தோஷமில்லை என்பது கருத்து. ஆகையால் எக்காரணத்தைக் கொண்டும் த்வாதசீயை உல்லங்கனம் செய்யக்கூடாது.

## 22. த்ரயோதசீ நிர்ணயம்.

சுக்ல த்ரயோதசீ வ்ரதங்கள் பூர்வ வித்தமானது ச்லாக்யம் என்று கருத்து. க்ருஷ்ண த்ரயோதசீ பரவித்தமானது ச்லாக்யம் என்று அறியவும்.

## 23. சதுர்தசீ நிர்ணயம்.

ஸ்ரீ நரஸிம்ம மூர்த்தி ஸந்தியாகாலத்தில் அவதரித்தார். ஆகையால் வைசாக சுக்ல சதுர்தசீ திதி இரவு வ்யாப்தி உள்ளது ச்லாக்யமானது. ச்ராவணமாஸ சுக்ல சதுர்தசியில் அனந்த வ்ரதம் அனுஷ்டிக்கப் படுகிறது. அதற்கு சதுர்தசீ உதய வ்யாப்தியுடன் இருக்கவேண்டும். ஆகையால் அனந்த சதுர்தசீ பூர்ணிமையோடு ஸம்பந்தப்பட்டது ச்லாக்யம் என்று கருத்து.

## 24. சிவராத்திரி நிர்ணயம்.

மாசி மாஸ க்ருஷ்ணபக்ஷ சதுர்தசீயினுடைய இரவு சிவராத்திரி என்று கூறப்படுகிறது. இது சிவப்ரியமானது. ஆகையால் சிவராத்ரி என்று பெயர்.

அந்த இரவில் எல்லா லிங்கங்களிலும் பரமசிவன் ஸாந்நித்யத்தை அடைகிறார். ஸ்திரமாக இருக்கும் லிங்கத்திலும் எடுத்துச் செல்லும் சரலிங்கத்திலும் ஸாம்ப பரமேச்வரன் ஆவாஹனம் செய்யாமலேயே ஸாந்நித்யம் அடைகிறார். ஆகையால் மாக க்ருஷ்ண சதுர்தசி இரவுக்கு சிவராத்திரி, சிவப்ரியா ராத்திரி என்று சொல்லப்படுகிறது.

காமிகா சாஸ்த்ரத்தில் சிவராத்திரி கூறப்படுகிறது. மாக க்ருஷ்ண சதுர்தசீ இரவு சிவராத்திரி என்று பெயர். ஸமஸ்த புண்யங்களுடைய பலன் சுலபமாக அடையக்கூடிய தினமாகும்.

மாக க்ருஷ்ண பக்ஷத்தில் சதுர்தசீ பூர்ணமாக இருந்தால் அதில் ஸம்சயம் இல்லாமல் சிவராத்திரி வ்ரதம் அனுஷ்டானம் செய்யவேண்டியது. கண்ட திதி விஷயத்தில் த்ரயோதசீ வித்துமானது, சதுர்தசீ ச்லாக்யமானது. அதாவது ஸூர்யனுடைய அஸ்தமன காலத்திலிருந்து சதுர்தசீ இருந்தால் உயர்ந்த புண்ய காலமாகும் என்பது கருத்து.

ஈஸானசம்ஹிதையில்:— சிவராத்திரி காலம் நிர்ணயம் செய்யப்படுகிறது. சதுர்தசியானது நிசியில் இருக்க வேண்டும். அதாவது 15வது 16வது நாழிகைகள் நிசி எனப்படும். அந்த காலத்தில் சதுர்தசீ இருக்க வேண்டும். அந்த விஷயத்தில் முதல் நாள், அடுத்த நாள் இரண்டு தினங்களிலும் மஹா நிசியில் சதுர்தசீ இருக்குமேயானால் அப்பொழுது ப்ரதோஷ வ்யாப்தி யுடன் இருக்கும் சதுர்தசீயை சிவராத்திரியாக எடுத்துக் கொள்ளவேண்டும். இரண்டு நாளும் ப்ரதோஷ வ்யாப்தி, நிசி வ்யாப்தி ஸம்பவிக்காது. ஆகையால் மறுநாள் ப்ரதோஷ வ்யாப்தியுடன் கூடிய நிசிவ்யாப்தி யுள்ள சதுர்தசியை சிவராத்திரியாக க்ரஹிக்கவேண்டும்.

சிவராத்திரி புண்ய காலத்தில் உபவாஸம், இரவில் கண்விழிப்பு, லிங்கத்தின் நான்கு யாமங்களி லும் விசேஷ பூஜை இவைகள் அவசியம் செய்யவேண்டும். இவ்வாறு சிவராத்திரி வ்ரதம் அனுஷ்டித்தவர்கள்

அக்ஷயமான, குறைவுல்லாத ஸௌக்யங்களை அனுபவித்து, பிறகு சிவ ஸாயுஜ்யத்தை அடைவார்கள். ஆகையால் சிவராத்திரி வ்ரதம் நித்ய காம்யம் எனப்படும்.

## 25. பஞ்சதசீ நிர்ணயம்.

பூர்ணிமை, அமாவாஸ்யை இவ்விரண்டும் பரவித்தானது ச்லாக்யமானது, ப்ரதமை ஸம்பந்தப் பட்டது என்பது கருத்து. ஆனால் ஸாவித்ரீ வ்ரதம் சதுர்தசீ வித்தமான பூர்ணிமையிலும், அமாவாஸ்யை யிலும் அனுஷ்டிக்க வேண்டும். நக்ஷத்ரத்தை அனுசரித்து அனுஷ்டிக்க வேண்டிய விஷயத்தில் உதய வ்யாப்தி உள்ள நக்ஷத்ரத்தில் ஸ்நானம், தானம் இவைகள் செய்யவும். அஸ்தமன வ்யாப்தி, நிசி வ்யாப்தி உள்ள நக்ஷத்ரத்ல் உபவாஸ வ்ரதம் அனுஷ்டிக்க வேண்டும் என்று கருத்து.

ஸம்க்ஷேப தர்ம சாஸ்திரத்தில் திதி நிர்ணய ப்ரகரணம் ஸம்பூர்ணம்.

# ஸம்க்ஷேப தர்ம சாஸ்திரத்தில் ப்ராயச்சித்த ப்ரகரணம்.

## 1. ப்ராயச்சித்த சப்தார்த்தம்.

*அங்கீரர்:—* ப்ராய: என்றால் தபஸ் என்பது, சித்தம்— நிச்சயம் என்பது. அதாவது செய்த குற்றத்திற்கு சாஸ்திர விஹிதமான இந்த க்ருச்ராசரணாதி நியமானுஷ்டானம் செய்தால் நம்முடைய பாபம் விலகும் என்ற நிச்சயம் விச்வாஸம், நம்பிக்கை. இதற்கு ப்ராயச்சித்தம் என்று சொல்லப்படுகிறது.

ப்ராயச்சித்த சப்தம் பாபக்ஷயகரமான கர்மாவுக்குப் பெயர். ஆகையால் ரூடி சப்தம் ப்ராயச்சித்தம் என்று மஹர்ஷிகள் அர்த்தம் சொல்லியிருக்கிறார்கள். அதை அனுசரித்து லௌகிக சப்தம் ப்ராயச்சித்தம், ஆக யோக ரூடி ப்ராயச்சித்த சப்தம் என்று விக்ஞானேச்வரர் சொல்லுகிறார்.

*மனு:—* சாஸ்திரத்தினால் விதிக்கப்பட்ட கார்யங்களை செய்யாததாலும், சாஸ்த்ரத்தினால் நிஷேதிக்கப் பட்டதைச் செய்ததாலும், சப்த ஸ்பர்ச ரூப ரஸகந்த என்ற இந்திரியங்களுக்கு கோசாரமான விஷயங்களில் நியமம் இல்லாமல் கட்டுப்பாடு அற்ற நிலையிலும் பாபம் ஸம்பவிக்கிறது. ஆகையால் மூன்று விதமாக பாபம் ஏற்படுகிறது. அதை செய்தவன் அவசியம் ப்ராயச்சித்தம் செய்து கொள்ளவேண்டும்.

## 2. ப்ராயச்சித்தம் செய்து கொள்ளாவிட்டால் தோஷம்.

*யாக்ஞவல்க்யர்:—* பாப கார்யத்தில் ஈடுபட்டவர்கள் ப்ராயச்சித்தம் செய்யாமல், தப்புப் பண்ணினோமே

என்று தாபம்கூட இல்லாமல் இருந்தால் ரொம்ப கொடூரமான கஷ்டமான நரகங்களை அடைவார்கள்.

தாமிஸ்ரம்—லோஹசங்கு—மஹாநிரயம்— சால்மலி —ரௌரவம்—கும்பலம்—பூதிம்ருத்திகம்— காலஸூத்ரா பனம் மஹாநரகம் — காகோலம்—ஸம்ஜீவனம்— மஹாபதும்—அவீசிம்—அந்ததாமிஸ்ரம் — கும்பீபாகம் —அஸிபத்ரவனம்—தபனம் என்று இருபத்தொன்று நரகங்கள் இருக்கின்றன. இவைகளை மஹாபாதகம்— உபபாதகம் முதலிய பாபம் செய்தவர்கள் ப்ராயச்சித்தம் செய்யாமல் போனால் அடைவார்கள்.

யாக்ஞவல்க்யர்:— பஞ்ச மஹாபாதகம் செய்தவர்கள் க்ரூரமான நரகங்களை வெகுநாள் அனுபவித்து பிறகு இந்த கர்ம பூமியில் பாபத்திற்கு தகுந்த அனேக ஜன்மாக்களை அடைகிறார்கள்.

மான்—நாய்—பன்றி—ஒட்டகம்—இந்த பிறப்பை க்ரமமாக ப்ரம்மஹத்தி பாபம் செய்தவன் அடைகிறான். கழுதை—புல்கஸன் வேனன் (இவைகள் இரண்டும் மனுஷ்ய ஜாதிகள்). இந்தப் பிறப்பை சூராபானம் (கள் குடித்தவன்) செய்த ப்ராம்மணன் அடைவான். புழு பூச்சிகள் விட்டில்பூச்சி இந்தப் பிறப்பை தங்கம் திருடிய ப்ராம்மணன் அடைவான். புல்கள்— புதர் —கொடி இந்தப் பிறப்பை குரு பத்தினியைக் கெடுத்தவன் அடைவான்.

ப்ரம்மஹத்தி செய்தவன் க்ஷயரோகமுள்ளவனாக வும், சூராபானம் கள் குடித்தவன் கருப்புப் பல்லை உடையவனாகவும், தங்கம் திருடியவன் சொத்தை

நகம் உள்ளவனாகவும் பிறப்பான். இவர்களுடன் சேருகிறவன் மஹாபாபியாவான். அவன் யாருடன் சேர்க்கை வைத்துக் கொண்டிருக்கிறானோ அவனுக் குள்ள நரகங்கள் இஹலோகத்தில் அவனுக்குக் கூறப் பட்ட ஜன்மாக்கள் இவனுக்கும் கிடைக்கும்.

புண்ணிய பாபங்கள் ரொம்ப தீவிரமாகச் செய்தால் அதனுடைய பலன் இங்கேயே முதலில் அனுபவித்துப் பிறகு ஸ்வர்கம் புண்ணியத்திற்கு, பாபத்திற்கு நரகம் என்ற முறையில் பரலோகங்களில் அனுபவிக்க வேண்டும். தீவிரமாக செய்தது 3 வருஷம், 3 மாதம், மூன்று தினங்கள் இவைகளில் பலன் ஏற்படும். ஆகையால் பாபத்தில் தீவிரம் உதவாது. செய்யவே கூடாது.

மனு:— இனி பாபங்களைச் செய்தவர்கள் நரகத்தை அனுபவித்து இந்த லோகத்தில் எந்த எந்த ஜன்மாவை அடைகிறார்கள் என்பதை மனு தெரிவிக்கிறார். அதாவது: பதிதனுடன் ஸ்னேகம் செய்து பழகுகிறவனும், பிறருடைய மனைவியை அபகரிக்கிறவனும், ப்ராம்மணனுடைய சொத்தை அபகரிக்கிறவனும் ப்ரம்ம ராக்ஷஸர்களாகப் பிறப்பார்கள்.

பிறரைப் பற்றி மற்றவரிடம் கோள் சொல்லுகிறவன், துர்நாற்றம் உள்ள மூக்குடையவனாக இருப்பான். பிறர் தோஷத்தைச் சொல்லுகிறவன் துர்நாற்றமுள்ள வாயுடன் இருப்பான். தானியத்தை அபகரிப்பவன் அங்கஹீனனாக இருப்பான். உயர்ந்த தானியத்தை அபகரித்து அதில் அளவை பூர்த்தி செய்வதற்கு மட்ட

தானியத்தை கலந்து விடுபவன் எவனோ அவன் மிச்ரகன்; அவனுக்கு அங்கம் அதிகமாகக் காணப்படும்.

அன்னத்தை அபகரிப்பவன் வ்யாதி உள்ளவனாக வும், பிறர் வாயைக் கட்டுகிறவன் ஊமையாகவும், வஸ்திரத்தை திருடுகிறவன் வெண்குஷ்டமுள்ளவனாக வும், குதிரை திருடுபவன் நொண்டியாகவும் பிறப்பான்.

இந்த மாதிரியான பாப விசேஷங்களைச் செய்தவர்கள் ஸாதுக்களுக்குப் பிடிக்காதவர்களாயும், ஜடர்களாயும், ஊமையர்களாயும், குருடர்களாயும், செவிடர்களாயும், விகாரமுள்ள அவயவம் உள்ளவர் களாயும் பிறக்கிறார்கள்.

மணிகள், முத்துக்கள், பவழங்கள், ரத்தினங்கள் இவைகளைப் பேராசையால் அபகரிப்பவர்கள் பார்க்கும்பொழுதே திருடுகிற ஜாதியில் பிறப்பார்கள்.

தானியத்தை அபகரிப்பவன் மூஞ்சூறாகவும், வெண்கலம் திருடுகிறவன் ஹம்ஸமாகவும், ஜலம் திருடுகிறவன், நீர்க் காக்கையாகவும், தேன் திருடுகிறவன் பெரிய ஈயாகவும், பால் திருடுகிறவன் காக்கையாக வும், ரஸவர்க்கத்தைத் திருடுகிறவன் நாயாகவும், நெய் திருடுகிறவன் கீரியாகவும் பிறப்பான்.

மாம்ஸம் திருடுகிறவன் கழுகாகவும், வபையை திருடினவன் ஜல சரபக்ஷியாகவும், எண்ணை திருடுகிறவன் கறப்பாகவும், உப்பு திருடுகிறவன் சுவற்றுக்கோழியாகவும், தயிர் திருடுகிறவன் கொக்கா யும் பிறப்பான்.

வெண்பட்டைத் திருடினவன் தித்திரியாகவும், உயர்ந்த வெண்பட்டைத் திருடினவன் தவளையாக வும், பஞ்சு நூலினால் செய்கிற பொருளை திருடினவன் க்ரௌஞ்ச பக்ஷியாகவும், பசுவை திருடினவன் உடும்பாகவும், வெல்லத்தை திருடினவன் வௌவா லாகவும் பிறப்பான்.

நல்ல தந்த முள்ள வஸ்த்துக்களை திருடினவன் மூஞ்சூறாகவும், கீரைவகைகளைத் திருடினவன் மயிலாகவும், சமைத்த அன்னத்தை திருடினவன் ச்வாவித் என்ற பிராணியாகவும், சமைக்காத அன்னத்தை திருடினவன் முள்ளம் பன்றியாகவும் பிறப்பான்.

அக்னியைத் திருடுகிறவன் கொக்காகவும், வீட்டுச் சாமான்களைத் திருடுகிறவன் க்ருஹகாரீ என்ற புழுவாயும். சிகப்புப் புடவை முதலிய வஸ்திரங்களைத் திருடுகிறவன் ஜீவஜீவகனாகவும் (திருடவகனாகவும்) பிறப்பான்.

மான், யானை திருடினவன் செந்நாயாகவும், குதிரையைத் திருடினவன் புலியாகவும், பழங்கள் புஷ்பங்களைத் திருடினவன் குரங்காயும், ஸ்திரீகளைத் திருடியவன் கரடியாகவும், சாப்பிடும் ஜலத்தை திருடினவன் சாதக பக்ஷியாகவும், வாகனங்களைத் திருடுகிறவன் ஒட்டகமாயும், பசுக்களை திருடுகிறவன் வெள்ளாடாகவும் பிறப்பான்.

எதுவாக இருந்தாலும் பிறருடைய பொருளைத் திருடினவன் தீர்மானமாக பசுபக்ஷியாக பிறப்பது

நிச்சயம். ஹோம த்ரவ்யங்களை ஹோமம் செய்யாமல் சாப்பிட்டாலும், மேல் சொன்ன கதியை அனுபவிக்க வேண்டியது தான். ஆகையால் நிஷித்த கார்யங்களைச் செய்யக்கூடாது என்பது கருத்து.

பாப பலங்களைச் சொல்கிற விஷயத்தில் மஹர்ஷிகளுடைய மதபேதம் காணப்படலாம். அந்த இடங்களில் விகல்பம் இரண்டில் ஒன்று நிச்சயம் என்பது அர்த்தமாகும்.

### 3. ஒன்பதுவிதமான பாபங்கள்.

விஷ்ணு:— மனுஷ்யனுக்கு காமம், கோபம், பேராசை என்ற மூன்று சத்ருக்கள்: அதற்கு வசமானவன் மஹா பாதகம், அதிபாதகம், ஸமபாதகம், உபபாதகம், ஸங்கீரணகரணம், மலினீகரணம், அபாத்ரீகரணம், ஜாதிப்ரம்ச கரணம், ப்ரகீர்ணம் என்ற ஒன்பது விதமான பாப கார்யங்களை செய்கிறான்.

### 4. மஹா பாதகங்கள்.

மனு:— ப்ராம்மணர்களைக் கொன்றது, கள்குடித்தது, ப்ராம்மண ஸ்வர்ணத்தைத் திருடினது, குருபத்தினியைக் கெடுத்தது, இவர்களுடன் ஸ்னேகம் வைத்துக் கொண்டிருப்பது ஆக ஐந்து மஹாபாதகங்கள். இந்த பாபங்களைச் செய்தவர்கள் மஹாபாதகர்கள் என்று சொல்லப்படுவார்கள்.

### 5. அதிபாதகங்கள்.

யமன்:— தாயின்சஹோதரி, தாயின் தோழி, பெண் அப்பாவின் ஸஹோதரி, மாமாவின் பத்னீ,

ஸகோதரி, மாமியார் இவர்களைக் கெடுத்தவன் அதிபாதகம் செய்தவன் ஆவான்.

யாக்ஞவல்க்யர்:— நீசனைப் புணர்வது, கர்பத்தை நசிப்பது, பர்த்தாவை கொல்வது இவைகள் ஸ்த்ரீ களுடைய அதிபாதகங்களாகும்.

### 6. ஸமபாதகங்கள்.

யாக்ஞவல்க்யர்:— பெரியோர்களை நிந்திப்பது, வேதத்தை நிந்திப்பது, ஸ்னேகிதர்களை ஹிம்ஸிப்பது, படித்த வேதத்தை மறப்பது, இவைகள் ப்ரம்மஹத்திக்கு ஸமமான பாபங்கள்.

வெண்கலத்தில் இளநீரை க்ரஹித்துப் பருகுவது, பசும்பாலை உப்பு கலந்து குடிப்பது, வண்ணான் தோய்க்கின்ற ஜலத்தில் ஸ்னானம் செய்வது, தாம்ர பாத்திரத்தில் பால், தயிர் முதலியவை க்ரஹித்துப் பருகுவது சூராபான ஸமமாகும்.

மனு:— பிற்காலத்தில் திருப்பிப் பெற்றுக் கொள்ளலாம் என்று கொடுக்கப்பட்ட பொருளை அபகரிப்பதும், பூமி, வைரம், ரத்னம், இவைகளை அபகரிப்பதும் ஸ்வர்ண ஸ்தேய ஸமமாகும்.

மனு:— தன் பெண்களிடத்திலும், சண்டாள ஸ்த்ரீ யிடத்திலும், ஸ்னேகிதன், புத்ரன், இவர்களுடைய பத்னியிடத்திலும் எவன் கெட்ட கார்யங்களை செய் கிறானோ அவன் செய்யும் இந்த பாபம் குருதல்பகமன ஸமபாதகமாகும். அதிபாதகங்களில் சொல்லப்பட்டது

குருதல்பகமன ஸமபாதகங்களிலும் வருகிறது. இது தவறுதலாக செய்வது ஸமபாதகமாகும் என்று கருத்து. புத்தி பூர்வமாக செய்வது அதிபாதகமாகும் என்று கருத்து.

### 7. உபபாதகங்கள்

மனு: பசுவதம், வேதம் தெரியாதவனுக்கு யாகம் செய்து வைப்பது, ஆசார்யன், பிதா, மாதா இவர்களை தியாகம் செய்வது, வேதம் அக்னி இவைகளை தியாகம் செய்வது, பிள்ளையை தியாகம் செய்வது, தம்பி கல்யாணம் செய்து கொண்டு இருக்கும்பொழுது அண்ணன் கல்யாணம் செய்து கொள்ளாமல் இருப்பது —அண்ணாவுக்கு பரிவித்தி என்ற தோஷம், தம்பிக்கு பரிவேதனம் என்பது தோஷம், இவ்விருவர்களுக்கு கன்னியா தானம் செய்வது, அவர்களுக்கு கல்யாணம் செய்து வைப்பது, கன்னிகையைக் கெடுப்பது, வட்டியினால் ஜீவிப்பது, பிரம்மசாரியினுடைய விஷய ஸேவனம், குளம், புஷ்ப தோட்டம், பத்னி, புத்ரன் இவர்களை விற்பது, உசிதமான காலத்தில் உபநயனம் முதலியவை செய்யாமல் இருப்பது, சிற்றப்பா—மாமா இவர்களை அனுசரிக்காமல் இருப்பது, சம்பளம் பேசிக் கொண்டு வேத வேதாந்தம் சொல்லிவைப்பது, சம்பளம் வாங்கிக் கொண்டு வேதவேதாந்தங்களைப் படிப்பது, விற்கக்கூடாத எள்ளு முதலியவைகளை விற்பது, கஜானாவுக்கு ராஜாதிகாரத்தைப் பெற்ற அதிகாரியாக இருப்பது, மிஷின்களை ஓட்டுவது ஔஷதிகளை கிள்ளுவது முதலிய வ்யாபாரங்களால் ஹிம்ஸிப்பது, ஸ்திரீகளை வைத்து ஜீவனம் செய்வது, பிறரை கெடுக்க பூஜை செய்வது, மந்திரங்களினால்

வசீகரணம் செய்வது, மூல கர்மா என்பது, விறகை உத்தேசித்து பச்சை மரத்தை வெட்டுவது, தனக்காக சமைப்பது, சாஸ்திரத்தினால் நிந்திக்கப்பட்டவன் க்ருஹத்தில் அன்னம் சாப்பிடுவது, அதிகாரியாக இருந்து அக்னிஹோத்ரம் பண்ணாமல் இருப்பது, தங்கத்தைத் தவிர உயர்ந்த பதார்த்தங்களை திருடுவது, வாங்கிய கடனை திருப்பிக் கொடுக்காமல் இருப்பது , ம்லேச்ச சாஸ்திரத்தை வாசிப்பது, பாட்டு, கூத்துக்களில் ஈடு படுவது, தான்யம், தாமிரம் முதலிய உலோஹங்கள், பசுக்கள் இவைகளை திருடுவது, குடிப்பழக்கம், பரஸ்திரீ கமனம், க்ஷத்ரியன், வைச்யன் இதரன், இவர்களை ஹிம்ஸிப்பது, இவைகள் தனித்தனியாக உபபாதகங்கள் எனப்படும்.

### 8. ஸங்கரீகரணங்கள்.

மனு:— கழுதை, நாய், ஒட்டகம், மான், யானை, ஆடு, செம்மரிஆடு, மீன், பாம்பு, எருமை, இந்த மிருகங்களை வதம் செய்வது ஸங்கரீகரண பாதகமாகும்.

### 9. மலினீகரணங்கள்.

க்ருமிகள், புழுக்கள், பக்ஷி, இவைகளை ஹிம்ஸிப்பது, கள் கலந்த உணவைச் சாப்பிடுவது, பழம், விறகு புஷ்பம் இவைகளைத் திருடுவது, தைர்யமில்லாமல் இருப்பது இவைகள் மலினீகரண பாதகங்கள் ஆகும்.

### 10. அபாத்ரீகரணங்கள்.

அனுஷ்டானம் இல்லாதவர்களிடமிருந்து பணம் காசு வாங்குவது, பண்டங்களை விற்பது, இதரர்களை

சேவிப்பது, தொட்டதுக்கெல்லாம் பொய்பேசுவது, இவை அபாத்ரீகரண பாதகங்களாகும்.

### 11. ஜாதிப்ரம்சகரணங்கள்

ப்ராம்மணர்களை காயப்படுத்தி துக்கமடையச் செய்வது, நுகரக்கூடாத வெங்காயம்—உள்ளிப்பூண்டு கள்ளு இவைகளை நுகருவது, புருஷனிடத்தில் தப்பாக நடப்பது, இவைகள் ஜாதிப்ரம்சகரண பாதகங்கள் ஆகும்.

### 12. தெரிந்தும் தெரியாமலும் செய்த பாபம் பற்றி விசாரம்.

சாகவேயர்:— ப்ராயச்சித்தம்; தெரியாமல் செய்த பாபங்களுக்குத்தான் சொல்லப்பட்டிருக்கிறது. தெரிந்து செய்த பாபங்களுக்கு ப்ராயச்சித்தம் கிடையாது.

மனு:— தெரியாமல் செய்த பாபத்திற்கு ப்ராயச்சித்தம் உண்டு என்று பெரியோர்கள் சொல்லுகிறார்கள். சிலர் தெரிந்து செய்த பாபத்திற்கும் ப்ராயசித்தம் உண்டு என்று சொல்லுகிறார்கள். இதற்கு ச்ருதிவசனம் ப்ரமாணமாகும்.

தெரியாமல் செய்த பாபத்திற்கு சொல்லப்பட்ட பிராயச்சித்தம் தெரிந்து செய்தால் இரட்டைப் பங்கு ப்ராயச்சித்தமாகும்.

ப்ராயச்சித்தத்திற்கு இரண்டுவிதமான சக்தி உண்டு. ஒன்று ப்ராயச்சித்தம் செய்து கொண்டவனுக்கு

பரலோகத்தில் நரகானுபவம் கிடையாது. இரண்டாவது இந்த லோகத்தில் எல்லோரிடமும் வ்யவஹாரம் செய்யலாம் என்ற தன்மையும் உண்டு பண்ணுகிறது என்பது. ஆனால் பெரிய பாபத்திற்கு, அதாவது பதனீயமான பஞ்சமஹா பாதகங்களுக்கு பிராயச்சித்தம் செய்து கொண்டாலும் இந்த லோகத்தில் அவனை வர்ஜிக்கவேண்டும். அவனுடன் எந்தவிதமான பழக்க வழக்கங்களும் வைத்துக் கொள்ளக்கூடாது. ஆகையால் மஹாபாதங்களைத் தவிர மற்ற உபபாதங்களுக்கு ப்ராயச்சித்தம் செய்து கொண்டால் மேல் லோகத்தில் நரகம் வராது, இந்த லோகத்திலும் எல்லோரிடமும் பழகலாம். தெரியாமல் செய்த பாபத்திற்கு சொன்ன ப்ராயச்சித்தம், தெரிந்து பாபம் செய்தால் இரண்டு தடவை ப்ராயச்சித்தம் செய்து கொள்ளவேண்டும். அவர்களுக்கும் மேல் லோகத்தில் நரகம் ஸம்பவிக்காது. இஹலோக வியவஹாரமும் உண்டு என்று கருத்து.

எவனொருவன் மஹாபாதகத்தை புத்தி பூர்வமாக செய்கிறானோ அவனுக்கு ப்ராயச்சித்தம் கிடையாது. மலையில் ஏறி விழுவது அல்லது அக்னியில் விழுவதுதான் ப்ராயச்சித்தம். ஆகையால் பிராயச்சித்தம் தெரியாமல் செய்த மஹாபாதகங்களுக்குத்தான் என்பது கருத்து.

மரணாந்த பிராயச்சித்தம் கலியில் நிஷேதிக்கப் பட்டிருப்பதால், காமத்தால் புத்தி பூர்வமாக செய்த மஹாபாதங்களுக்கு நரகானுபவம் உண்டு. ஆனால் சொன்ன 12 வருஷ ஸாத்யமான பிராயச்சித்தம் செய்து கொண்டால், இஹலோகத்தில் வியவஹாரம் செய்ய அதிகாரியாகிறான் என்பது சாஸ்திர ஸித்தாந்தம்.

உபபாதகங்களை தெரியாமல் செய்தால் வேதாப்யாஸத்தால் போக்கிக் கொள்ளலாம். புத்தி பூர்வமாக செய்தால் பிராயச்சித்தங்கள் செய்துகொள்ள வேண்டும் என்று மனு சொல்கிறார்.

வதத்திற்கு துணையாக இருந்தவனுக்கு ப்ராயச் சித்தம் சொல்லப்படுகிறது. கொன்றவன், அங்கீகரித் தவன், அதற்காக தூண்டுதல் செய்தவன், உபாயத்தைத் தெரிவித்தவன், உத்ஸாகப்படுத்தினவன், ஸகாயமாக இருந்தவன், வழி சொன்னவன், இடம் கொடுத்தவன், ஆயுதம் கொடுத்தவன், ஹிம்சை செய்ய அன்னம் போட்டவன், தடுக்க சக்தியிருந்தும் தடுக்காதவன், தோஷம் சொன்னவன், செய்த கார்யம் சரிதான் என்று அனுமோதனம் செய்தவன் இவர்களும் குற்ற வாளிகள் ஆவார்கள். இவர்களுக்கும் ப்ராயச்சித்தம் உண்டு என்பது கருத்து.

### 13. பாபங்கள் இரண்டுவிதம்.

பராசரர்:— பாபங்கள் இரண்டு விதங்கள். எல்லோருக்கும் தெரிந்து பாபம் செய்வது ஒன்று. தன்னைத் தவிர வேறு யாருக்கும் தான் செய்த பாபம் தெரியாது; அது இரண்டாவது ரஹஸ்ய பாபம். ப்ரகாசமான பாபத்தை வேத வேதாங்க வித்வானும் தர்ம சாஸ்திரம் தெரிந்தவர்களும், அனுஷ்டானம் செய்கிறவர்களுமான பெரியோர்களிடம் தெரிவித்து ப்ராயசித்தம் விதிக்கச் சொல்லி செய்யவேண்டும். அது ப்ரகாசமாக செய்த ப்ராயச்சித்தமாகும். ரஹஸ்ய பாபத்திற்கு ரஹஸ்யமாக ப்ராயச்சித்தம் செய்யவும். யாரிடமும் சொல்லவேண்டியது கிடையாது.

### 14. ப்ரஜாபத்ய க்ருச்ர லக்ஷணம்.

மனு:— மூன்று நாள் காலையில் போஜனம், மூன்று நாள் இரவில் போஜனம், மூன்று நாள் யாசிக்காமல் கிடைத்தால் ஒருவேளை சாப்பிடுவது, மூன்று நாள் உபவாஸம் இருப்பது ஆக 12 தினங்கள் அனுஷ்டிக்க வேண்டியது ப்ராஜாபத்ய க்ருச்ரம் என்பதாகும்.

### 15. பாதக்ருச்ரம்.

யாக்ஞவல்க்யர்:— ஒரு நாள் பகல் போஜனம், ஒரு நாள் இரவு போஜனம், ஒரு நாள் யாசிக்காமல் கிடைத்தால் சாப்பிடுவது, ஒரு நாள் உபவாஸம் ஆக நான்கு தினங்கள் உபவாஸம் அனுஷ்டிப்பது பாதக்ருச்ரம் என்பதாகும்.

### 16. பாதிக்ருச்ரம்

ஒரு பகல் போஜனம், ஒரு இரவு போஜனம், இரண்டு நாள் யாசிக்காமல் கிடைத்தால் சாப்பிடுவது, இரண்டு தினம் உபவாஸம் ஆக 6 நாள் ஸாத்யமானது அர்த்த க்ருச்ரமாகும்.

### 17. அதிக்ருச்ரம்.

பராசரர்:— மூன்று நாள் பகலிலும், மூன்று நாள் இரவிலும், மூன்று நாள் யாசிக்காமலும் ஒரு கை பூர்ணமாக அன்னம் சாப்பிடுவது, மூன்று நாள் உபவாஸம் இருப்பது ஆக 12 நாள் அதிக்ருச்ரம்

ஆகும். சில மஹறர்ஷிகள் ஒரு கபளம் சாப்பிடச் சொல்லுகிறார்கள். பராசரர் கருணையால் கைநிறைய அன்னம் ஒருதடவை சாப்பிடலாம் என்று சொல்லுகிறார்.

**18. க்ருச்ராதி க்ருச்ரம்.**

போதாயனர்:— மூன்று பகல், மூன்று இரவு, மூன்று நாள் அயாசிதம் இந்த தினங்களில் போஜன காலத்தில் தீர்த்தத்தை மட்டும் சாப்பிடுவது பிறகு மூன்று நாள் சுத்த உபவாஸம் அனுஷ்டிப்பது க்ருச்ராதிக்ருச்ரம் என்று சொல்லப்படுகிறது. யாக்ஞவல்க்யர் இருபத்தியோரு நாள் பாலை மட்டும் சாப்பிட்டிருப்பது க்ருச்ராதி க்ருச்ரம் என்று சொல்லுகிறார். இது கொஞ்சம் சுலபமானது. இது அசக்த விஷயம், துப்தக்ருச்சரம் என்பது சூடாக செய்த ஜலக்ஷீர ஆஜ்யங்களை கிரமமாக மூன்று மூன்று தினங்களாக 9 நாள் சாப்பிட்டு பிறகு 3 நாள் உபவாஸமிருப்பது என்று சொல்லப்படுகிறது, ஸாந்தபனக்ருச்சரம்—கோமூத்ரம், கோமயம், பால், தயிர், ஆஜ்யம், குசோதம் இவைகளை தினம் ஒவ்வொன்றாக சாப்பிட்டு கடைசியாக ஒருநாள் உபவாஸம் இப்படியாக ஏழு நாளில் அனுஷ்டிக்க வேண்டியது ஸாந்தபன க்ருச்ரமாகும்.

12 நாள் சுத்த உபவாஸமிருந்தால் பராக க்ருச்ரமாகும், ஒரு மாதம் பழங்கள் மாத்திரம் சாப்பிட்டு உபவாஸமிருந்தால் பல க்ருச்ரமாகும்.

யவதான்யத்தால் பாயஸம் வைத்து ஒரு மாதம் சாப்பிட்டு உபவாஸமிருந்தால் யாவக க்ருச்ரம் எனப்படும்.

மூன்று நாள் அகமர்ஷண ஸூக்தம் சொல்லி த்ரிஷவஸ ஸ்னானம் செய்துகொண்டு உபவாஸமிருந்தால் அகமர்ண க்ருச்ரம் என்பதாகும். இந்த மாதிரி அனேக க்ருச்ரம் சொல்லப்பட்டிருக்கிறது.

## 19. சாந்த்ராயணம்.

சாந்த்ராயணம் விரதம் இரண்டுவிதமாகும். பிபீலிகா மத்யம், யவமத்யம் என்று. எறும்பு மத்யம் என்ற சாந்த்ராயணம் முன்பும் பின்பும் எறும்பு போல ஸ்தூலமாக இருக்கும். யவமத்ய சாந்திராயணம் என்பது யவதான்யம் போல முன்பும் பின்பும் குறுகி இருந்து நடுவில் ஸ்தூலமாக இருக்கும்.

வஸிஷ்டர்:— க்ருஷ்ணபக்ஷ ப்ரதமை அன்று ஸங்கல்பம் செய்து 14 கபளம் சாப்பிட்டு, பிறகு மறுநாளிலிருந்து தினம் ஒரு கபளம் வீதம் குறைவாக புஜித்து, அமாவாஸ்யை அன்று உபவாஸமிருந்து பிறகு சுக்ல பக்ஷ பிரதமை அன்று ஒரு கபளம் மறுநாள் இரண்டு கபளங்கள் என்ற பிரகாரம் பூர்ணிமா அன்று 15 கபளங்கள் சாப்பிட்டு முடிக்கவேண்டும், இது பிபீலிகாமத்ய சாந்த்ராயணம் எனப்படும்.

அடுத்து யவமத்ய சாந்த்ராயணம் சொல்லப் படுகிறது.

சுக்ல பக்ஷ பிரதமை அன்று ஒரு கபளம் த்விதீயையில் இரண்டு கபளம் வீதம் தினம் ஒரு கபளம் ஜாஸ்தியாக சாப்பிட்டு பூர்ணிமை அன்று 15 கபளங்கள் சாப்பிட்டு பிறகு, கிருஷ்ணபக்ஷ ப்ரதமையில்

14 கபளங்கள் என்ற ப்ரகாரம் ஒரு கபளம் குறைவாக புஜித்து அமாவாஸ்யை அன்று உபவாஸம் இருக்கவேண்டும். இது மத்யபாகம் ஸ்தூலமாக இருப்பதால் யவமத்ய சாந்திராயணம் என்று கூறப்படுகிறது.

இதற்கு ஆரம்பத்தில் வபனம் செய்து சில ஹோமங்கள் செய்து முடிவிலும் தக்ஷிணா தானங்கள் முதலியதும் சொல்லப்பட்டிருக்கிறது. பார்த்து தெரிந்து கொள்ளவும்.

ஒரு மாதம் தினம் மூன்று கபளங்கள் சாப்பிட்டு நியமத்துடன் இருந்தால் இது ரிஷி சாந்த்ராயணம் என்று கூறப்படுகிறது.

ஒருமாதம் தினம் பகலில் நான்கு கபளங்கள், இரவில் நான்கு கபளங்கள் சாப்பிட்டு நியமத்துடன் இருந்தால் இதற்கு சிசு சாந்த்ராயணம் என்று கூறப்படுகிறது. ஒரு மாதம் தினம் ஒரு வேளை எட்டு கபளங்கள் சாப்பிட்டு நியமத்துடன் இருந்தால் இது யதி சாந்த்ராயணம் என்று கூறப்படுகிறது.

### 20. சில பாபங்களுக்கு ப்ராயச்சித்தம்.

பராசரர்:- கலியுகத்தில் ப்ரம்மஹத்தி தோஷத்திற்கு ராமஸேதுவில், ராமேச்வரத்தில் முறைப்படி ஸ்நானம் செய்வது ப்ராயச்சித்தம் என்று பராசரர் சொல்லுகிறார். ஆனால் அவர் சொல்லிய படி செய்யவேண்டும். ஸங்கல்பம் செய்து கொண்டு குடை, பாதரக்ஷை இல்லாமல் நடந்து ராமேச்வரம் செல்ல வேண்டும். தினம் பிக்ஷை எடுத்து சாப்பிடவேண்டும்.

அந்த சமயத்தில் நான் ப்ரம்மஹத்தி செய்தேன், நான் பாபீ, எனக்கு பிக்ஷை போடுங்கள் என்று சொல்லி கேட்கவேண்டும். வீட்டுக்குள்ளே செல்லக்கூடாது. நதிக்கரையில், மாட்டுக்கொட்டிலில் இவைகளில் தங்கலாம். ஆங்காங்கு தான் செய்த பாபத்தை எல்லோரிடமும் தெரிவிக்கவேண்டும். ராமேச்வரம் சென்று தனுஷ்கோடியில் ஸ்னானம் செய்து அக்னிதீர்த்தம் முதலிய தீர்த்தங்களிலும் முறைப்படி ஸ்னானம் செய்து பிறகு சொந்த கிராமத்திற்குச் சென்று நூற்றுக்கணக்கான கோதானம் ப்ராம்மண போஜனம் செய்து முடிக்கவேண்டும்.

மனு:— ப்ரம்மஹத்தி செய்தவன் 12 வருஷகாலம் கிராமத்திற்கு வெளியில் ஒரு குடிசை கட்டிக்கொண்டு பிக்ஷை எடுத்து ஜீவனம் செய்து தண்டத்தில் மனுஷ்ய சிரஸ் கபாலத்தை சொருகி கையில் வைத்துக் கொண்டு இருக்கவேண்டும். எப்பொழுதும் " ஸம்ஸ்மரேது ஹரிம்" என்ற வசனத்தை அனுசரித்து ஹரிஸ்மரணம் செய்து கொண்டு இருக்கவேண்டும்.

பராசரர்:— இனி பசுவை வதம் செய்தவனுக்கு பிராயச்சித்தம் சொல்லப்படுகிறது. தலையை மொட்டை அடித்துக் கொண்டு தினம் மூன்று வேளையும் ஸ்னானம் செய்து கோ வ்ரதம் அனுஷ்டிக்கவேண்டும். பசு மந்தை மத்தியில் ராத்திரியில் வசிக்கவேண்டும். பகலில் பசுக்கள் நடந்து போகும்பொழுது தானும் பசுக்களை பின்தொடர்ந்து செல்லவேண்டும். வெய்யில் காற்று மழை இவைகளை லக்ஷியம் செய்யக்கூடாது. பசுக்களை ரக்ஷிப்பதில் சிரத்தையுடன் இருக்வேண்டும். வழியிலோ சேற்றிலோபசு வீழ்ந்து மாட்டிக்கொண்டால்

அதைத் தானே தூக்கிக் காப்பாற்றவேண்டும். இவ்வளவு செய்துகொண்டு பிராஜாபத்ய க்ருச்ரம் அனுஷ்டிக்கவேண்டும். அந்த க்ருச்ரம் கொன்ற பசுவினுடைய வயதை அனுசரித்து நான்காக பிரித்து அனுஷ்டிக்கவேண்டும். பிறகு கோதானம் பிராம்மண போஜனம் செய்விக்கவேண்டும். இவ்வாறு செய்வது கோவத பிராயச்சித்தமாகும்.

எவன் பசுவை கழியினாலோ, பெரிய மண்ணாங் கட்டியினாலோ, கருங்கல்லினாலோ, கத்தி முதலிய ஆயுதங்களாலோ கொல்லுகிறானோ அவனுக்கு ப்ராயசித்தம் சொல்லுகிறார். கழியினால் வதம் செய்த வனுக்கு ஸாந்தபன க்ருச்ரம், மண்ணங்கட்டியினால் வதம் செய்தவனுக்கு ப்ராஜாபத்ய க்ருச்ரம், கல்லினால் வதம் செய்தவனுக்கு தப்த க்ருச்ரம், கத்தி முதலிய வைகளால் வதம் செய்தவனுக்கு அதிக்ருச்ரம், பிராயச் சித்தமாக சொல்லப்படுகிறது.

இந்த லோகத்தில் கோ வதம் செய்து அதை எவன் மறைக்கிறானோ (அதாவது பிராயச்சித்தம் செய்து கொள்ளவில்லை என்று கருத்து) அவன் காலஸூத்ரம் என்ற நரகத்தை அடைந்து வெகுநாள் கஷ்டத்தை அனுபவித்து பிறகு மனுஷ்ய லோகத்தில் ஏழு ஜன்மாக்களில் பெருவியாதி உள்ளவனாயும், நபும்ஸகனாயும் துக்கத்தை அனுபவிக்கிறவனாயும் பிறந்து கஷ்டப்படுவான். கோ என்றால் காளை மாடும் சேர்த்துதான் சொல்லப்படுகிறது.

மனு:— கள் குடித்தால், பிராம்மணன் கள்ளை சிகப்பாக காய்ச்சிக் குடிக்கவேண்டும்; அதனால்

சரீரம் பொசுங்கி மறித்தால் சூராபான பாபத்தி லிருந்து விடுபடுகிறான்.

யமன்:— தாம்ர பாத்திரத்தில் இருக்கும் பால் இளநீர், உப்பு போட்ட பால், சுராகந்தம், இவைகளை சாப்பிட்டால் சாந்த்ராயணம் அனுஷ்டிக்கவேண்டும். தெரியாமல் சாப்பிட்டால் பிராஜாபத்ய க்ருச்ரம் அனுஷ்டிக்கவேண்டும்.

யாக்ஞவல்க்யர்:— பிராம்மணன் ஸ்வர்ணத்தை திருடினால் ராஜாவிடத்தில் உலக்கையைக் கொடுத்து தன் தோஷத்தை தெரிவித்து உலக்கையால் அடித்துக் கொல்லப்படுவது இந்த பாபத்திற்கு பரிஹாரம். இல்லாவிடில் ஸுராமானத்திற்கு சொன்ன பிராயச் சித்தம் செய்து கொண்டு மரணமடைவது பாப பரிஹாரமாகும். தன் எடைக்கு தங்கத்தை பிராம் மணனிடம் தானம் கொடுத்தாலும் பிராயச்சித்தம் செய்ததாகும்.

மார்கண்டேயர்:— தாஸீகமனம் மானத்தையும் தனத்தையும் கெடுக்கும். வேசிகமனம் தபஸ், புகழ் இவைகளை கெடுக்கும். விதவாகமனம் ஆயுஸ், சோபை இவைகளை கெடுக்கும். எல்லாவற்றையும் கெடுத்து விடும் பரபுருஷஸ்திரீகமனம். இதற்கு ப்ராயச்சித்தம் கடுமையாக சொல்லப்பட்டிருக்கிறது.

தேவலர்:— பிறரைப் பற்றி பிறரிடம் தப்பாக பேசுகிறவன், போக்கிரி, கள்குடிக்கிறவன், சூதாட்டக் காரன், திருடுகிறவன் இவர்கள் துர்ஜனங்கள் என்று சொல்லப்படுகிறார்கள். இவர்களுடன் ஒரு நாள்

வசித்தால் பராகம் என்ற க்ருச்ரமும், 15 நாள் வசித்தால் தப்த க்ருச்ரமும், ஒரு மாதம் வசித்தால் ப்ராஜாபத்ய க்ருச்ரமும், ஒரு வருஷம் வஸித்தால் சாந்த்ராயணமும் அனுஷ்டிக்கவேண்டும். பிறகு சுத்தி ஏற்படும். அதற்கு மேல் போனால் இவன் பதிதன் ஆகிவிடுகிறான்.

ஜாபாலி:— எவன் ஏழு நாள் கிணற்றில் ஸ்நானம் செய்கிறானோ, உஷ்ணோதகத்தில் ஏழு நாள் ஸ்நானம் செய்கிறானோ, ஏழு நாள் ம்ருத் சுத்தி இல்லாமல் சௌசம் செய்து கொள்ளுகிறானோ இவன் ப்ராஜாபத்ய க்ருச்ரம் செய்துகொண்டு பிறகு பஞ்சகவ்யம் சாப்பிட வேண்டும்.

யாக்ஞவல்க்யர்:— உப பாதகம் என்று சில பாபங்களை குறிப்பிட்டிருக்கிறோம். அதற்கு பரிஹாரம் சாந்த்ராயண ப்ராயச்சித்தமாகும். பால் மாத்திரம் சாப்பிட்டு ஒருமாதம் நியமத்துடன் இருந்தாலும் பரிஹாரம்; அல்லது பராக க்ருச்சரம் அனுஷ்டிக்கலாம்.

## 21.ரஹஸ்ய பாப பரிஹாரம்.

மனு: ப்ரதி தினம் செய்யும் வேத ஆவர்த்தி, பஞ்ச மஹா யக்ஞங்கள் அனுஷ்டிப்பது, பொறுமையாக இருப்பது இவைகள் ரஹஸ்ய பாபங்களை நாசம் செய்கின்றன. அக்னி தன் தேஜஸ்ஸால் காஷ்டங்களை சாம்பலாகச் செய்வது போல், ப்ராம்மணன் வேத மறிந்தவன் தன் ஞானாக்னியினால் எல்லாவற்றையும் போக்கடித்துக் கொள்ளுகிறான். ப்ரதி தினம்

பதினாறு ப்ராணாயாமங்கள் மந்திரத்துடன் செய்தாலும் பாப பரிஹாரம் ஏற்படும்.

பராசரர்:— சாந்த்ராயணம், யாவக க்ருச்ரம், துலா புருஷன் தானம், கோ வ்ரதம், பசுக்களை பின் தொடர்ந்து சுச்ருஷை செய்வது எல்லா பாபங்களுக்கும் பொதுவாக ப்ராயச்சித்தம்.

பைடீனஸி:— எல்லா பாபங்களும் ஸம்பந்துப் பட்டிருந்தாலும், ஒருநிமிட நேரம் உலகை மறந்து அச்யுதன், வாசுதேவனை த்யானம் செய்வானேயாகில் மறுபடியும் தபஸ்வீயாக ஆகி பங்க்தி பாவனாளுக்கும் பரிசுத்தி செய்கிறவனாக ஆகிறான்.

ப்ருகு:— கோடி ப்ரகாரமாக பயத்தைக் கொடுக்கும் பாபம் ஸம்பவித்தாலும், ராம ராம என்று ஸங்கீர்த்தனம் செய்தால் ராம நாம மஹிமையின் காரணமாக ஸகல பாபமும் நசித்துவிடும். எல்லா பாபங்களுக்கும் இது ப்ராயச்சித்தமாகும். இதைக் காட்டிலும் வேறு உபாயம் சாஸ்திரங்களில் அகப்படவில்லை.

ஸகல பாபத்துடன் கூடியவனாக இருந்த பொழுதிலும் எப்பொழுதும் ஸாம்ப பரமேச்வரரை ஹரனை கீர்த்தனம் செய்கிறவன் பாபமற்ற மனதுடன் கூடினவனாக ஆகி பங்க்தி பாவனனாக ஆகிறான் என்று ப்ரம்ம கைவர்த்த புராணம் கூறுகிறது.

அத்ரி:— ஸ்ரீ ருத்ர மந்திரத்தை பதினொன்று தடவை ஆவர்த்தி செய்தவன் மஹாபாபங்களுடன் கூடினவனாக இருந்த பொழுதிலும் உடனே ஸகல

பாபங்களிலிருந்தும் விடுபட்டவனாக ஆகிறான். ஆகையால் அவசியம் ருத்ரப்ரச்ன ஜபம் செய்யவேண்டியது என்பதீது கருத்து.

## 22. க்ருச்ரத்திற்கு பிரதிநிதிகள்.

ப்ராஜாபத்ய க்ருச்ரம் தேச காலத்தை அனுசரித்து இந்த காலங்களில் அனுஷ்டிக்க முடியாத காரணத்தால் மஹர்ஷிகள் க்ருச்ரத்திற்கு பிரதிநிதியான அனுஷ்டானம் தெரிவிக்கிறார். அதாவது கிருச்ரம், பத்தாயிரம் காயத்ரீ ஜபம், 12 ப்ராம்மண போஜனம், திலஹோமஸஹஸ்ரம் இந்த நான்கு காரியங்களும் ஸமமாக கருதப்படுகிறது.

பராசரர்:– பிரஜாபத்ய க்ருச்ரம், 200 பிராணாயாமங் கள், கங்காதி புண்ணிய தீர்த்தங்களில் ஸ்னானம் செய்து தலைமயிரை துடைத்து உலர்த்திக்கொண்டு மறுபடியும் ஸ்நானம் செய்வது மாதிரி 12 ஸ்நானங்கள், 20 மைல்கள் தூரம் நடந்து முறைப்படி தீர்த்தங்களை ஸேவித்து யாத்திரை செய்வது, பதினாயிரம் தடவை காயத்ரீ ஜபம், இந்த ஐந்து கார்யங்களும் ஸமமாகக் கருதப்படுகிறது. அதாவது க்ருச்சா சரணம் செய்ய முடியாவிடில் இவைகளில் ஏதாவது ஒன்று அனுஷ் டித்தால் போதுமானது என்று தாத்பர்யம்.

பிராஜாபத்ய க்ருச்ரம் அனுஷ்டிக்க முடியவில்லை யானால் ஒரு பசுவை தானம் செய்யவேண்டும். அதுவும் முடியாவிடில் பசு விலைக்கு வாங்க எவ்வளவு செலவு ஆகுமோ அந்த தனத்தை தானம் செய்யவும். தார்மீகர்களான சிஷ்டர்களான பெரியோர்களுக்கு எதிர்பாராமல் பாபம் ஸம்பவித்தால் ஜபஹோமாதிகள்

ப்ராயச்சித்துமாக சொல்லவேண்டும். ஆசாரமில்லாமல் இருப்பவர்களுக்கு பாபம் ஸம்பவித்தால் க்ருச்ராசரணம் ப்ராயச்சித்தம் சொல்லவேண்டும். தனிகர்களுக்குப் பாபம் ஸம்பவித்தால் அதிகமான த்ரவ்ய தானங் களினால் ப்ராயச்சித்தம் சொல்லவேண்டும் என்பது கருத்தாகும்.

ஸம்க்ஷேப தர்ம சாஸ்திரத்தில் ப்ராயச்சித்த ப்ரகரணம் முற்றிற்று.

ஸம்க்ஷேப தர்ம சாஸ்திரம் முற்றிற்று.

# அனுபந்தம் 1

## ப்ரஹ்ம முஹூர்த்த ஜபங்கள்

ப்ரஹ்மா முராரிஸ்த்ரிபுராந்தகாரிர்
பானுஸ்சசீ பூமிஸுதோ புதஸ்ச !
குருஸ்சுக்ரஸ்சனீ ராஹுகேதவ:
குர்வந்து ஸர்வே மம சுப்ரபாதம் !!

ப்ருகுர்வஸிஷ்ட: அங்கிராஸ்ச மனு:
புலஸ்த்ய : புலஹஸ்ச கௌதம!
ரைப்யோ மரீசிஸ்ச்யவனோ s தக்ஷ:
குர்வந்து ஸர்வே மம சுப்ரபாதம் !!

ஸனத்குமாரஸ்ச ஸனந்தனஸ்ச
ஸனாதனோ s ப்யாஸுரிஸிம்ஹலௌ ச
ஸப்தஸ்வராஸ்ஸப்த ரஸாதலானி
குர்வந்து ஸர்வே மம சுப்ரபாதம் !!

ஸப்தார்ணவ ஸப்தகுலாஸ்ச ஸப்தர்ஷயோ
த்வீபவனானிஸப்த !
பூராதிகூர்மோ புவனானி ஸப்த
குர்வந்து ஸர்வே மம சுப்ரபாதம் !!

ப்ருத்வீ ஸகந்தா ஸரஸாஸ்ததாப :
ஸ்பர்சீ வாயு : ஜ்வலனம் ச தேஜ !
நபஸ்ஸசப்தம் மஹதா ஸஹைவ
குர்வந்து ஸர்வே மம சுப்ரபாதம் !!

இத்தும் ப்ரபாதே பரமம் பவித்ரம்
படேத்ஸ்மரத்வா ஸஂஞ்ஞயாச்ச தத்வத் !
து : ஸ்வப்னநாசஸ்த்விஹ சுப்ரபாதம்
பவேச்ச ஸத்யம் பகவத் ப்ரஸாதாத் !!

மஹாபாரதமாக்யானம் க்ஷிதம் காஞ்ச ஸரஸ்வதீம் !
ப்ராஹ்மணான் கேசவம் சைவ ப்ராதக்ருத்தாய
கீர்த்தயேத் !!

புண்யஸ்லோகோ நளோ ராஜா
புண்யஸ்லோகோ யுதிஷ்டிர: !
புண்யஸ்லோகோ ச வைதேஹி
புண்யஸ்லோகோ ஜனார்தன: !!

## அனுபந்தம் 2

### கோபீ சந்தனம் இட்டுக் கொள்ளும் போது சொல்லும் மந்திரம்

கோபீசந்தனபாபக்ன விஷ்ணுதேஹ ஸமுத்பவ!
சக்ராங்கித் நமஸ்துப்பம் தாரனாந் முக்திதோ பவ !!

சங்கசக்ர கதாபானே த்வாரகா நிலயாச்யுதா !
கோவிந்த புண்டரீகாக்ஷ ரக்ஷமாம் ஸரணாகரம் !!

## அனுபந்தம் 3

### ஹோமகாலம்

அதிவ்ருக்ஷசூர்ய ஆவிஸ்சூர்ய வா !

# அனுபந்தம் 4

## துளசீயைக்ரஹிக்கும் போது சொல்ல வேண்டியவை

துளஸ்யாம்ருத ஸம்பூதே ஸதாத்வம் கேசவ ப்ரியே !
கேவார்தம் லுனோமி த்வாம் ஸதாபவ சோபனே !!

மோக்ஷைகஹேதோ தரணி ப்ரஸூதே
விஷ்ணோ: ஸமஸ்தஸ்யகுரோ: ப்ரியேதே !
ஆராதனார்தம் புருஷோத்தமஸ்ய
லுனாமி பத்ரம் துளஸீ க்ஷமஸ்வ !!

ப்ரஸீத மம தேவேசீ ப்ரஸீத ஹரி வல்லபே !
க்ஷீரோதமதனோத்பூதே
லுனாமி த்வம் ப்ரஸீதமே !!

# ஸ்ரீ விஷ்ணு ஸஹஸ்ர நாமம்

## பாசுரங்கள்

ஸ்ரீ சங்கரர், ஸ்ரீ பட்டர் இவர்களின் உரை அடிப்படையில்

ஆத்தூர் வீரவல்லி கி. ஸந்தானம்

**PARTIALLY AIDED BY**

மாது ஸ்ரீவைதேகி, ஸ்ரீரகு, ஸ்ரீ நரசிம்மன் - பூனா

ஸ்ரீ **K.R.** ராமசேஷன், ஆள்வார்பேட்டை,

ஸ்ரீ ஸ்வதந்த்ரா இண்டஸ்ட்ரீஸ், அம்பத்தூர்

ஸ்ரீ **K.R.** பார்த்தஸாரதி, **USA**

ஸ்ரீ ராம நாமம் எழுதுவதற்கு நோட்டுகளை
இலவஸமாக வழங்கி பக்தர்கள் மூலம் "ராம" நாமம்
எழுதுவிக்கின்ற வேள்வியை நடத்தி வருகின்ற
ஸ்ரீராம நாம வங்கியின் பிரசாரப் பிரசுரப் பிரிவான

**ஸ்ரீ பகவன் நாம பப்ளிகேஷன்ஸ்**

ராம மந்திரம், 2, வினாயகம் தெரு,
மேற்கு மாம்பலம், சென்னை - 600 033.
தொலைபேசி : 4893736, 4893785, 4893397

ஸ்ரீ ராம நாம வங்கியின் ப்ரச்சாரப் பிரசுரப் பிரிவு
ஸ்ரீ பகவன் நாம பப்ளிகேஷன்ஸ்
ராம மந்திரம், 2, வினாயகம் தெரு, மேற்கு மாம்பலம்,
சென்னை - 33. தொலைபேசி : 4893736, 4893785, 4893397

தயாரிப்பில்

# கலியுக தர்ம சாஸ்திரம்

# போதேந்த்ர அமுதம்

# ஸ்ரீ ஐயாவாள் கீர்த்தனைகள்

# ஸ்ரீ ஸத்குரு கீர்த்தனைகள்

ஸ்ரீ ராம நாம வங்கியின் ப்ரச்சாரப் பிரசுரப் பிரிவு

## ஸ்ரீ பகவன் நாம பப்ளிகேஷன்ஸ்

ராம மந்திரம், 2, வினாயகம் தெரு, மேற்கு மாம்பலம்,
சென்னை - 33. தொலைபேசி : 4893736, 4893785, 4893397
E-mail : ramanama@eth.net

---

# ஸங்க்ஷேப தர்ம சாஸ்திரம்




ஸ்ரீ ராம நாமம் எழுதுவதற்கு நோட்டுகளை இலவஸமாக வழங்கி பக்தர்கள் மூலம் "ராம" நாமம் எழுதுவிக்கின்ற வேள்வியை நடத்தி வருகின்ற ஸ்ரீராம நாம வங்கியின் பிரசாரப் பிரசுரப் பிரிவான

**ஸ்ரீ பகவான் நாமா பப்ளிகேஷன்ஸ் வெளியீடு**
ராம மந்திரம், 2, வினாயகம் தெரு,
மேற்கு மாம்பலம், சென்னை – 600 033
தொலைபேசி : 4893736, 4893785, 4893397
E-Mail : ramanama@md3.vsnl.com